EXCLUSIVE!
ஷேன் வார்னேவுடன்
ஒரு சந்திப்பு

# கல்கி

KALKI 8.3.98 ரூ. 4.50

கிரிக்கெட் ஸ்பெஷல்!

## கலக்கல் ஸ்டார் கங்குலி!

—ஸ்பெஷல் பேட்டி!

**சென்னையில் புயல்**

# "நோ ராபின்? நோ டெஸ்ட்!"

"ஒரு நாள் கிரிக்கெட்டுக்குத்தான் ராபின்சிங் லாயக்கு. டெஸ்ட் ஆட்டங்களில் ஆட அவர் தகுதியில்லை!" என்று கிரிக்கெட் தேர்வுக் குழு 'ஏகமனதாக' முடிவு செய்து அறிவித்திருக்கிறது.

கொதித்துப் போயிருக்கிறார்கள், தமிழக கிரிக்கெட் ரசிகர்கள். 'ராபின்சிங்கை வருகிற சென்னை டெஸ்டில் சேர்க்காவிட்டால்

• ராபின்சிங்



• செரியன்



• ஜெயசிம்மா

டெஸ்ட் நடக்க விட மாட்டோம்' என்று தீவிர ராபின்சிங் ரசிகர்கள் அறிவித்த தோடல்லாமல் இந்திய தேர்வு கமிட்டி தலைவர் ரமாகாந்த் தேசாய்க்கு ஆயிரக் கணக்கில் 'No Robin, No test' என்று தந்தி அடித்திருக்கிறார்கள். இது தவிர, கடைசி வரை ராபின் அணியில் சேர்க்கப்படா விட்டால் மைதானத்தில் தீக்குளிப்போம் என்றும் சிலர் முடிவு செய்திருப்பதாகத் தமிழக கிரிக்கெட் சங்கத்துக்குத் தகவல் வந்துள்ளதாகத் தெரிகிறது.

"இதுவரை 21 சதங்கள், 120 விக்கெட்டுகள், 70 கேட்சுகள் பிடித்து, இன்று இந்திய அணியில் உள்ள அஸார், டெண்டுல்கரைக் காட்டிலும் அதிக ரன்கள், விக்கெட்டுகள் பெற்றவர் ராபின். அவரை டெஸ்ட் பந்தயங்களில் ஆடத் தகுதியில்லாதவர் என்று ரமாகாந்த் தேசாய் கூறுவது அபத்தத்தின் உச்சம்!" என்று கொதித்துப் போய்ப் பேசுகிறார்கள் தமிழக கிரிக்கெட் சங்கத்தின் முக்கியப் புள்ளிகள்.

முன்னாள் டெஸ்ட் வீரரும் தென்மண்டலத் தேர்வாளருமான பிரிஜேஷ் படேலை நாம் சந்தித்தபோது, "வாய்ப்பே தராமல் அவர் டெஸ்ட் போட்டியில் சிறப்பாக ஆட மாட்டார் என்று எப்படிச் சொல்ல முடியும்? வாய்ப்புக் கொடுத்து, அவர் சரியாக விளையாடாத பட்சத்தில் அவரை நீக்கலாமே தவிர, வெறும் யூகங்களின் அடிப்



• சிவலால் யாதவ்



• அலி இரானி

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com
ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in



• மிலன் குஞ்சால்

படையில் இப்படியொரு முடிவுக்கு வருவது தவறு'' என்று சொன்னார்.

**ரா**பினுக்கு வயதாகி விட்டது என்பது தேர்வாளர்கள் கூறும் முக்கியக் காரணம். இது பற்றிக் கேட்டபோது, முன்னாள் டெஸ்ட் வீரரும் ஐதராபாத் அணியின் கோச்சுமான ஜெயசிம்மா உரக்கச் சிரித்தார்.

"இங்கிலாந்து அணியில் டெஸ்ட் பந்தயங்களில் இடம் பெறுவதற்கு நிர்ணயிக்கப்பட்ட குறைந்த பட்ச வயது என்ன தெரியுமா? முப்பத்தைந்து! நாற்பத்திரண்டு வயதான பின்பும் ஆடிக் கொண்டிருக்கிறார் கிராம் கூச். சொல்லப் போனால், டெஸ்ட் பந்தயத்தை விடவும் அதிகம் ஓடியாட வேண்டியிருப்பது ஒரு நாள் ஆட்டங்களில்தான்! அதிலேயே ராபின்சிங் பிரகாசிக்கும்போது டெஸ்ட் மாட்ச் அவருக்குப் பெரிய விஷயமே அல்ல. வருகிற ஆஸியுடனான பந்தயங்களின்போது, ராபினுக்கு வாய்ப்பு அளிப்பதன் மூலம், இந்தியாவுக்கு ஒரு ஆல்ரவுண்டர் இல்லை என்னும் குறையை நீக்கிவிட முடியும்!'' என்று தீர்மானமாகச் சொல்கிறார் ஜெயசிம்மா.

"**ரா**பின்சிங்குக்கு முப்பத்தைந்து வயதா? டாக்கா மேட்சில் அவரும் கங்குலியும் ஆடிக் கொண்டிருந்தபோது ராபினுக்கு 24 வயதும், கங்குலிக்கு 33 வயதும் ஆனது போல் அவர்கள் ஆட்டம் இருந்ததைத் தேர்வாளர்கள் கவனிக்கவில்லையா?" என்று கிண்டலாகக் கேட்டார் வடக்கு மண்டல தேர்வுக் கமிட்டி உறுப்பினர் மிலாண்ட் குஞ்சால்.

"இந்திய அணியிலேயே நூற்றுக்கு நூறு சதம் உடல் வலிவு உள்ள ஒரே ஆட்டக்காரர் ராபின்தான். வயதைக் காரணம் காட்டி அவரை ஒதுக்குவது சரியே இல்லை" என்கிறார் இந்திய அணியின் மருத்துவர் டாக்டர் அலி இரானி.

இந்தியன் எக்ஸ்பிரஸின் முதன்மை விளையாட்டு விமர்சகரான ஜார்ஜ் செரியனைத் தொடர்பு கொண்டபோது, "கடந்த ஒரு வருடத்தில் மட்டும் 20 பேர் டெஸ்ட் போட்டிகளிலும் 32 பேர் ஒருநாள் போட்டிகளிலும் மாறி மாறி விளையாடியுள்ளார்கள். ஆனால் இவர்களைத் தேர்வு செய்யும் தேர்வு கமிட்டியினரில் (ஐவர்) மட்டும் எவ்வித மாற்றமும் இல்லை. சிவலால் யாதவ், ரமாகாந்த் தேசாய் தவிர, கமிட்டியிலுள்ள பிற மூவருக்கு கிரிக்கெட்டில் போதிய அனுபவம் கூடக் கிடையாது. கிரிக்கெட் பற்றி எதுவும் தெரியாமலே, நம் அணியை நாசம் செய்து கொண்டிருக்கிறார்கள். இவர்கள், ராபின்சிங்கைக் குறை கூறுவது வெட்கம்!'' என்றார் காட்டமாக.

தேர்வுக் குழுவைத் தவிர மற்ற யாவருக்கும் ராபின்சிங்கை டெஸ்ட் பந்தயங்களில் ஆட அனுமதிப்பதில் எவ்வித இரண்டாவது அபிப்பிராயமுமில்லை என்பது புரிந்தது.



• சித்துவுக்கு ஜோசியத்தில் அபார நம்பிக்கை. 'இது உனக்கு நல்ல நேரம்' என்று அவரது ஜோசியர் சொல்லிவிட்டால் தொடர்ந்து மேட்சுகளில் ஆடுவார். 'நேரம் சரியில்லை' என்று சொல்லிவிட்டால் அவ்வளவுதான்! ஆட வரமாட்டார்! இதனால்தான் சித்து கடந்த 14 வருடங்களில் 41 டெஸ்ட்களில் மட்டுமே ஆடி இருக்கிறார். (8 வருடமாக விளையாடும் டெண்டுல்கர் 70 டெஸ்ட்கள் தாண்டிவிட்டார்!)

• சௌரவ் கங்குலி, ஆடும்போது எப்போதும் கல்கத்தா காளி படத்தைத் தம் பேண்ட் பாக்கெட்டில் வைத்திருப்பார். அஸார், தம் கழுத்திலுள்ள தாயத்தை அடிக்கடி முத்தமிடுவார். டெண்டுல்கர், தம் மனைவியின் போட்டோ உள்ள பர்ஸை பாண்ட் பாக்கெட்டில் வைத்துக் கொண்டுதான் ஆடப் போவார்!



# மரியாதை கெட்டுப் போச்சு – 1

சமீபத்தில் சென்னையில் நடந்த தமிழக – தில்லி அணிகளுக்கிடையிலான ரஞ்சி போட்டியின் போது பிட்ச் சரியில்லை என்று சொல்லி தில்லி அணி பாதி ஆட்டத்தில் ஆட மறுத்து விட்டது. இது கிரிக்கெட் உலகிலேயே அதிர்ச்சி ஏற்படுத்திய ஒரு சம்பவம். இந்த மேட்சின் ரெஃபரியாக இருந்தவர் டி.ஆர். பஞ்சாபி. அவரைச் சந்தித்துப் பேசினோம்.

"ரெஃபரி என்று ஒரு பதவி வந்ததே கிரிக்கெட் உலகின் அவமானம்!" என்று காட்டமாகத் தொடங்கினார் இந்த முந்நாள் வீரரும் டெஸ்ட்மாட்ச் அம்பயரும் வக்கீலும், தற்சமயம் ரெஃபரியுமான பஞ்சாபி. (கால்பந்து, ஹாக்கி போன்ற அதிவேக விளையாட்டுகளுக்குத்தான் 'ரெஃபரி'க்கள் உண்டு. சமீபகால மாகத்தான் இரண்டு அம்பயர்கள் போதாது என்று மூன்றாவதாக ஒரு 'மேட்ச் ரெஃபரி' போஸ்டைப் புதிதாக உருவாக்கியிருக்கிறார்கள். அதாவது அம்பயர்கள் உயர்நீதிமன்றமென்றால், ரெஃபரி – சுப்ரீம் கோர்ட்.)

"ரஞ்சி மேட்சின்போது உண்மையில் நடந்தது என்ன சார்?"

"முதல் இரண்டு நாள் ஆட்டத்தின் போது ஒரு பிரச்னையும் இல்லை. மூன்றாவது நாள் தில்லி அணி ஆடிக் கொண்டிருக்கும்போது பந்தின் shape போய்விட்டதனால், பந்தை மாற்றி விளையாடலாம் என்று அம்பயர்கள் சொன்னார்கள். ஆனால் அப்போது ஆடிக் கொண்டிருந்த தில்லி அணியின் கேப்டன் அஜய் சர்மா, பிட்சின் ஒரு பகுதியைச் சுட்டிக்காட்டி, 'தமிழக வீரர்கள் வேண்டுமென்றே அந்த இடத்தைப் பள்ளமாக்கி விட்டதாகவும் அதனால் தம்மால் தொடர்ந்து ஆட முடியாது' என்றும் கூறிவிட்டார். ரெஃபரியாக இருந்த நானே நேரில் போய்ப் பார்த்தேன். நிலைமை அத்தனை மோசமில்லை என்று கருதி, தொடர்ந்து ஆடச் சொல்லி எவ்வளவோ கேட்டுப் பார்த்தும் மறுத்துவிட்டார். கிரிக்கெட் போர்டு செயலாளர் லியே, டெக்னிகல் கமிட்டியின் தலைவர் காவஸ்கர் ஆகியோரும் எத்தனையோ எடுத்துச் சொல்லியும் அஜய் பிடிவாதமாக ஆட மறுத்து விட்டார்."

"ரெஃபரியாக நீங்கள் என்ன முடிவு செய்தீர்கள்?"

"நான் ஒன்றும் செய்யமுடியாது. இங்குள்ள நிலைமையையும் எங்களது நிலைமையையும் உடனே போர்டுக்குத் தெரிவித்து விடுவதுதான் ஒரே வழி...




• டி.ஆர். பஞ்சாபி

அதைத்தான் நான் செய்தேன்."

"கிரிக்கெட்டை ஜென்டில்மன்ஸ் கேம் என்பார்கள். இப்படிக் கேவலமாகி விட்டதன் காரணம் என்ன?"

"குறிக்கோள் இல்லாமல், ஸ்போர்ட்ஸ்மன்ஷிப் இல்லாமல் ஆடுகிறார்கள். அம்பயருக்கோ, ரெஃபரிக்கோ மரியாதையே இல்லை! நான் ஆடிய காலத்தில் எல்லாம் இப்படி ரெஃபரி போஸ்டே கிடையாது. அதற்கு அவசியமும் இருந்ததில்லை. இப்போது போஸ்டுக்கு மரியாதை இல்லாத சூழ்நிலை."

"உண்மையில் உங்கள் பணிதான் என்ன?"

"வீரர்கள், கிரவுண்டிலும் வெளியிலும் ஒழுங்காக நடக்கிறார்களா, அம்பயர்கள் ஒழுங்காகத் தீர்ப்பளிக்கிறார்களா என கவனிப்பதுதான் முக்கியப் பணி. வீரர்கள், நடுவர்களைப் புகார் கூறினால் விசாரிக்க வேண்டியது, நடுவர்கள் வீரர்களைத் திட்டினால் நிலைமையை ஆராய்ந்து ரிப்போர்ட் தருவது இதெல்லாம் பிற பணிகள். இதன் அடிப்படையில் கிரிக்கெட் போர்டு நடவடிக்கை எடுக்கும்!"

# மரியாதை கெட்டுப் போச்சு-2

தேர்வு கமிட்டி பற்றி ஆட்டக்காரர்கள் நேராகவோ மறைமுகமாகவோ புலம்பும் காலம் மலையேறி, இப்போது புது ட்ரெண்ட் வந்திருக்கிறது கிரிக்கெட் உலகில்.

அதாவது, ஆட்டக்காரர்கள் மரியாதையாக நடந்து கொள்வதில்லை என்று அம்பயர்கள் புலம்ப ஆரம்பித்திருக்கிறார்கள்.

சமீபத்தில் தில்லியில் நடந்த தில்லி-வங்காள அணிகளுக்கிடையிலான ரஞ்சிப் போட்டியில் அம்பயர்களாக இருந்து, அகில இந்திய அளவில் செய்தித் தாள்களில் அடிபட்ட எஸ்.வி.ரமணி, கே.ஆர். சங்கர் இருவரையும் சந்தித்தோம். அணியினர் மைதானத்தில் தரக்குறைவாக நடந்து கொண்டதாக போர்டுக்குப் புகார் கடிதம் எழுதிப் பரபரப்பேற்படுத்தியவர்கள் இவர்கள்.

ரமணி சொன்னார்:

"தில்லி-வங்காள அணி பங்கு பெற்ற ரஞ்சி டெஸ்டின் கடைசி நாள் ஆட்டம் அது. வங்காள அணியின் கேப்டன் கங்குலி, பந்து வீசும்போது எல்.பி.டபிள்யூ அவுட் கேட்டார். நான் கொடுக்கவில்லை. ஏனெனில் அது எல்.பி. இல்லை என்று நான் உறுதியாக நம்பினேன். ஆனால் அம்பயரின் தீர்ப்பை ஏற்காமல் கங்குலி என்னை ஏதோ வங்காள மொழியில் திட்டிக் கொண்டே போனார். எனக்கு அந்த மொழி தெரியாததால், என் பார்ட்னரான சங்கரிடம் சொன்னேன். ஆட்டம் முடிந்ததும் இருவரும் வங்காள அணியின் மானேஜரான அருண்லாலிடம் இது பற்றிப் புகார் கூறினோம். அவர் கங்குலியிடம் விசாரிப்பதாகச் சொன்னார்..."

சங்கர் குறுக்கிட்டார். "...அது மட்டுமல்ல. ஆட்டத்தின் நான்கு நாட்களுமே வங்காள அணிக்குச் சாதகமாகத்தான் இருந்தது. அந்த அணி எளிதாக ஜெயிக்கக் கூடிய நிலையில் தான் இருந்தது. அந்த நிலையில் கண்டதற்கெல்லாம் அவுட் கேட்டு, நாங்கள் கொடுக்காவிட்டால்- எங்களுக்குப் புரியாத மொழியில் திட்டிக் கொண்டே இருப்பது மரியாதை இல்லையே?"



ரமணி இடை புகுந்து "திட்டுகிற விஷயத்தில் வங்காள அணியை மட்டும் குறை சொல்ல முடியாது. இப்போதெல்லாம் எல்லா பௌலர்களுமே எல்லா பந்துகளுக்கும் அவுட் கேட்கிறார்கள். அம்பயர்கள் தர மறுத்தால் திட்டுகிறார்கள். நாங்கள் எங்கள் கண்ணும் மனமும் காட்டும் நியாயத்தைத்தான் சொல்கிறோம். ஆனால் யாரும்

• ராம்ஜி



• சங்கர்

• ரமணி

ஏற்க மறுக்கிறார்கள்'' என்றார்.

''தேர்ட் அம்பயர், டி.வி. திரையில் ஸ்லோ மோஷனில் நாலைந்து முறை பார்த்து முடிவெடுக்கிறார். ஆனால் எங்கள் நிலை அப்படி இல்லை. உலகப் புகழ் பெற்ற அம்பயர் டேவிட் ஷெப்பர்ட், 'நம்முடைய பார்வையான 'Naked eye' அத்தனை எளிதாகத் தவறு செய்யாது' என்று சொல்லியிருக்கிறார். நீதி மன்றத்தில் நீதிபதி போலத்தான் கிரவுண்டில் அம்பயர் என்பதை மறந்து விடுகிறார்கள். அம்பயரை விமர்சிப்பது இப்போதெல்லாம் ஒரு ஃபாஷனாகி விட்டது!'' என்று பொறிந்து தள்ளினார் சங்கர்.

''ஹாக்கி, கால்பந்து ஆட்டங்களி லெல்லாம் தவறாக நடக்கும் ஆட்டக்காரர்களை ரெஃபரி, கார்டு காட்டி வெளியே அனுப்புவது போல் நீங்கள் செய்ய முடியாதா?''

''தாராளமாகச் செய்யலாம். தவறு செய்தால் வெளியேற்றலாம். மேலும் இப்போது 'ரெஃப்ரி' ஒருத்தர் எல்லா மேட்சுகளுக்கும் இருக்கிறார். அவரிடமும் புகார் சொன்னால் உரிய நடவடிக்கை எடுப்பார்'' என்றார் ரமணி.

பிரச்னைக்குரிய ரஞ்சிப் போட்டியில் நீங்கள் ஏன் கங்குலிமேல் நடவடிக்கை எடுக்கவில்லை என்று கேட்டபோது, ''அவரது எதிர்காலம் கருதித்தான் பேசாமல் இருந்தோம். ஆனால் போர்டுக்குக் கடிதம் எழுதியுள்ளோம்'' என்றனர் இரண்டு அம்பயர்களும்.

## அக்கரைக்கு இக்கரைதான் பச்சை!

மார்ச் 3 அன்று சென்னை வந்திறங்கப் போகிறது ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி.

வந்தவுடன் அவர்கள் போகப் போகிற இடம், 'பிரைம் ஃபிட்' என்ற உடற்பயிற்சிக் கூடத்துக்குத்தான். இப் பயிற்சிக் கூடத்தை நடத்தும் ராம்ஜிக்குக் கொள்ளை சந்தோஷம். முன்னாள் வேகப்பந்து வீச்சாளர் டென்னிஸ் லில்லி, 'சென்னையில் சிறந்த உடற்பயிற்சிக் கூடம் ராம்ஜியுடையது தான். ஆஸ்திரேலிய அணி அங்கு சென்று பயிற்சி பெறட்டும்' என்று சொல்லி அனுப்பியிருக்கிறாராம்!

''ஆஸ்திரேலியாவின் தட்பவெப்பத்துக்கேற்ப அந்த வீரர்களின் உடல் நிலை இருக்கும். வெப்பப் பிரதேசமான நம் ஊருக்கு வந்து அவர்கள் ஆடும்போது உடல் நலன் பாதிக்கப்பட்டு, தசைப் பிடிப்பு போன்ற தொல்லைகள் வரலாம். இதை முக்கியமாக மனத்தில் கொண்டுதான் நான் அவர்களுக்குப் பயிற்சி தரவுள்ளேன்!'' என்கிறார் ராம்ஜி.

ஒரு விஷயம். ஆஸ்திரேலிய வீரர்களே நம் பயிற்சியாளர்களின் திறமையை மதித்து இங்கு பயிற்சிபெற வரும்போது, இந்திய அணியினர்?

வெளிநாட்டு உடற்பயிற்சியாளர் ஒருவர் தருவிக்கப் பட்டிருக்கிறார்!



# இவரைச் சாகும் இவர்

## அனுபவம் புதுமை...

"இந்தியா என்ன விருந்தினர் மாளிகையா? யார் வேண்டுமானாலும் வந்து தங்குவதற்கும், ஆட்சி செலுத்துவதற்கும்? அந்நியரான சோனியா பிரதமராவதை ஒருநாளும் ஏற்க மாட்டோம்; மத்தியில் பி.ஜே.பி. ஆட்சி அமைத்தால், அப்படி ஒரு சட்டமே இயற்றி விடுவோம்; வெளி நாட்டவர் ஆள வேண்டுமென்றால், நாம் மறுபடியும் பிரிட்டிஷாரை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கலாமே? ஆட்சி செய்வதில் அவர்களுக்கு ஒன்றரை நூற்றாண்டு அனுபவமாவது இருக்கிறதே!" எனக் காரசாரமாகப் பேசி வருகிறார் தாக்கரே! அது சரி, அனுபவமிருப்பவர்கள்தான் ஆட்சி செய்ய வேண்டுமென்று மக்கள் நினைத்தால் இவர்கள் கதி என்னாவதாம்!

## அழகிய முகத்துக்கு அதிகமான வோட்டா?

"சோனியா விஷயம் சோனியான விஷயம்தான்; அவருக்குக் கூடும் கூட்டத்தைக் கண்டு மயங்கிவிடக் கூடாது! நம்மூரில் கூட்டம் கூடக் கேட்கவா வேண்டும்? அழகிய மலரைக் காணக் கூட மக்கள் கூடுவர். பெரிய இடத்துப் பெண்மணிகள் வருகிறார்கள் என்றால், அவர்களைக் காண இயற்கையிலேயே எழும் ஆர்வம்தான் கூட்டத்தின் அடித்தளம். சோனியாவின் வருகையால் காங்கிரஸ்காரர்களுக்கு போஸ்டரில் அச்சடிக்க ஓர் அழகான முகம் கிடைத்திருக்கிறது; அவ்வளவுதான்! அங்கே கேசரியின் முகம் இருந்தால், மக்கள் செருப்பை எடுத்து வீசமாட்டார்களா?" என்று பி.ஜே.பிக்காரரான பிரமோத் மஹாஜன் போகுமிடங்களிலெல்லாம் புலம்பித் தீர்க்கிறார்!

## சீரியஸான விளையாட்டு

'தேர்தலுக்குப் பின் மனோகர் ஜோஷி டில்லி சென்று விடுவார்; நான்தான் அடுத்த 'சி.எம்.' என்று ராஜ்தாக்ரே சொன்னதாகச் செய்திவர, ஜோஷி வேறு, 'நான்தான் தொடர்ந்து முதல்வராயிருப்பேன்' என அறிக்கைவிட, ஒரே அல்லோல கல்லோலமாகிவிட்டது! "நான் சீரியஸாகச் சொல்லும் விஷயங்களை எல்லாம் விட்டுவிட்டு, விளையாட்டாகச் சொன்னதை இப்படிப் பெரிது படுத்தியிருக்கிறார்களே இந்தப் பத்திரிகையாளர்கள்" என நொந்து கொண்டிருக்கிறார் ராஜ் தாக்கரே! உதவ் தாக்கரேயும், "நானும் ராஜும் விளையாட்டான விஷயங்களை சீரியஸாகச் சொல்வோம்; சீரியஸான விஷயங்களை விளையாட்டாகச் சொல்வோம்; இப்படித்தான் ஒரு நிருபர், "வருகின்ற தேர்தலில், குறைந்த பட்சம் எத்தனை இடங்களை எதிர்பார்க்கிறீர்கள்?" என்றதற்கு, நான் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு "48 இடங்கள்" என்றேன்.



## மும்பை மசாலா

மஹாராஷ்டிராவில் மொத்தமிருப்பதே 48 லோக் சபை சீட்டுகள்தான் என்பதைக் கூட தெரிந்து கொள்ளாமல், அதை அப்படியே செய்தி ஆக்கிவிட்டார் அந்த நிருபர்; ஒரே கோமாளித்தனம்!" என்று ராஜ் தாக்கரேவுக்கு பரிந்துரைத்திருக்கிறார். இருக்காதா பின்னே? அரசியல்வாதிகளுடன் தொடர்ந்து பழகினால் பத்திரிகையாளர்கள் கோமாளிகளாகாமல் வேறு என்னவாக முடியுமாம்?

### டப்பா ஹீரோக்கள்

**கா**ந்தி குல்லாயை விடாமல் மாட்டிக் கொண்டு, படிப்பறிவில்லாத எளிமையுடன் சுறுசுறுவென இயங்கி, மும்பையில், ஆபீஸ் செல்பவர்களின் அன்ன பூரணர்களான டப்பாவாலாக்களுக்கு, அடித்ததே ஒரு சான்ஸ்! மும்பை ரயிலில் பயணித்துக் கொண்டிருந்த ஆம்ஸ்டர்டாம் வாசிகளான ரெல்லக் - வில்டா தம்பதியர், ஆச்சரியப்பட்டுப் போய்விட்டனர். பால் கேன்கள் போன்ற ஒரே மாதிரியான ஆயிரக்கணக்கான அலுமினிய டப்பாக்களை, சங்கேதக் குறிகளால் மட்டுமே அடையாளம் கண்டு கொண்டு, பல கைகள் மாறியும் கடைசியில் டெலிவரி செய்யும் இவர்களின் புத்திசாலித்தனத்தால் ஆடிப் போய்விட்டனர். தினம் ஒன்றரை லட்சம் டப்பாக்களை சப்ளை செய்யும் 4,000 டப்பாவாலாக்களின் வாழ்க்கை, குடும்பம், ஃபாஸ்ட்புட் யுகத்திலும் வீட்டு உணவை விரும்பும் இந்திய மக்கள், அதன் பின்னணியிலுள்ள இந்தியக் கலாசாரம் என்று அக்கு வேறு ஆணி வேராக அலசி, ஒரு டாகுமெண்ட்டரியைத் தயாரித்து விட்டார்கள். 40 கேஸட்டுகளில் இவர்கள் அடக்கியுள்ள விஷயங்களை, 60 நிமிடங்களுக்காக 'எடிட்' செய்தபின் 'டச்' டி.வியில் ஒலிபரப்பப்படுமாம்!

### ஃபர்ஸ்ட் க்ளாசான செகண்ட் ஒபினியன்

**வா**யில் நுழையாத வியாதிக்கு, உடனடியாக ஒரு பயங்கரமான ஆபரேஷனைச் செய்யச் சொல்லி டாக்டர்கள் பயமுறுத்தும் போது, எத்தனை முறை 'இது சரியா? தேவைதானா?' எனக் கலவரப்பட்டு ஒரு எக்ஸ்பர்ட் செகண்ட் ஒபினியனுக்குத் தவித்திருக்கிறோம்? மும்பைக்காரர்கள் இனி அப்படித் தத்தளிக்க வேண்டியதில்லை; 'Bee Lee Second Opinion' என்ற பெயரில், முதல் டெலிமெடிசன் சென்டர், மும்பையில் திறக்கப்பட்டிருக்கிறது. இந்த நெட்வொர்க்கின் மூலம், அமெரிக்காவிலுள்ள தலைசிறந்த 6,000 ஸ்பெஷலிஸ்டுகளுடன் தொடர்பு கொள்ள முடியும்; நோயாளியின் சரித்திரத்தை, சென்டரிலுள்ள மருத்துவர்கள் fax அல்லது E-mail வழி 'ரிப்போர்ட்'டாக அனுப்ப, கம்ப்யூட்டர் நெட்வொர்க்கில் விஷுவல்கள் 'டிஜிடலைஸ்' செய்யப்படுமாம். அங்கேயுள்ளவர்கள், பெரிய திரையில் இதை அலசி, முடிவெடுத்து, 48 மணி நேரத்துக்குள் இறுதி 'டயக்னாஸிஸ்' அனுப்பி விடுவார்களாம். அப்படியும் சந்தேகம் தெளியவில்லை என்றால், வீடியோ கான்ஃபரன்சிங் உண்டு! டி.வி ஸ்க்ரீன் வழியாக இங்கேயுள்ள நோயாளியும், மருத்துவரும் அங்கேயுள்ள எக்ஸ்பர்ட்டுடன் உரையாட முடியும்! ஒரு குடும்பத்துக்கு ஒரு வருடத்திய ஃபீஸ் ரூ. 500! பெரிய நிறுவனங்களுக்குச் சலுகை உண்டு! இரண்டாவது கருத்து என்றாலும் முதல்தரமான வசதிதான்!

மும்பையிலிருந்து : ஜெயஸ்ரீ ராஜ்



கவனத்தைக் கவர்ந்தார் கங்குலி. அடுத்த டெஸ்டிலும் தொடர்ந்து அடித்த சதம் மூலம் உலகின் கவனத்தையே தம் பக்கம் ஈர்த்த இந்த வங்காள இளைஞர், இன்று இந்திய அணியின் சூப்பர் ஸ்டார்! சென்னை டெஸ்டுக்காகக் கடும் பயிற்சியில் இருந்தவர், கல்கிக்காகப் பிரத்தியேகப் பேட்டி ஒன்று அளித்தார். ஒரு தமிழ்ப் பத்திரிகைக்கு கங்குலி அளிக்கும் முதல் பேட்டி இதுதான் :



**கல்கி :** இன்று இந்திய அணியின் தூண்கள் என்று கருதப்படும் சிலருள் நீங்களும் ஒருவர். இப்படியொரு நிலைக்கு உயர்வோம் என்று எப்போதாவது எண்ணிப் பார்த்ததுண்டா?

**கங்குலி :** இல்லை! ஆனால் அணியில் எப்படியும் இடம் பெறுவேன் என்று





சித்துவுக்கும் கேப்டன் அஸாருக்கும் ஏற்பட்ட பனிப்போர் உலகப் பிரசித்தி! – 1996-ல் இங்கிலாந்தில் நடைபெற்ற டெஸ்ட் தொடரின்போது நடந்தது.

தொடரின் பாதியிலேயே சித்து இந்தியா திரும்பிவிட, வேண்டாவெறுப்பாக அணியில் சேர்த்துக் கொள்ளப்பட்டவர் சவுரவ் கங்குலி. ஆனால் தம் முதல் ஆட்டத்திலேயே லார்ட்ஸ் மைதானத்தில் அபாரமான செஞ்சுரி அடித்து, அணியின்

உறுதியாக நம்பினேன். இத்தனை புகழ், பெருமை எல்லாம்... நான் வணங்கும் கல்கத்தா காளியின் அருள். '96-ல் தான் நான் அனைவருக்கும் தெரிந்தவன் ஆனேன். ஆனால் 91 – 92லேயே ஆஸ்திரேலியா டூரில் இருந்தேன். தெரியுமா? அணியில் நான் இருந்தும், ஒரு மேட்ச் கூட ஆடாமல் திரும்பினேன்! அதன் பின் நான்கு வருஷங்கள் என்னைத் தேர்ந்தெடுக்கவே இல்லை. காரணம் என்ன தெரியுமா? நான் விளையாடும் வங்காள அணியில் என்ன சாதனை செய்தாலும் யாரும் கண்டுகொள்ளவே மாட்டார்கள். ரஞ்சி, துலிப் போட்டிகளில் வங்காள அணி, மிகச் சாதாரணமான அஸ்ஸாம், ஒரிசா, திரிபுரா அணிகளுடன்தான் ஆடும். அந்தப் பந்தயங்களில் நான் செய்யும் சாதனைகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவே மாட்டாது! இதுவே மும்பை, தமிழ்நாடு, ஐதராபாத் அணிகளுடன் ஆடும் போது ஒரு சதம் அடித்தாலும் கவனிப்பார்கள்! நான் ஆடிய முதல் துலிப் போட்டியிலேயே சதம் அடித்தேன். 19 வயதுக்குட்பட்டவர்களுக்கான டெஸ்டிலும் சதம். நிறைய சதங்கள்! ஆனால் அவை எதுவும் என்னை அணியில் சேர்த்துக் கொள்ள உதவவில்லை. வாய்ப்பு வரும், வரும் என்று காலமெல்லாம் காத்துக்



# காலமெல்லாம் காத்திருந்தேன்!

**— கங்குலி**

கொண்டே இருந்தேன். இந்திய 'ஏ' அணியில் ஒருவழியாகச் சேர்ந்து, அதன்பின் செய்த சாதனைகள்தான் இந்திய அணிக்குள் நுழைய உதவின.

**கல்கி :** இங்கிலாந்தின் 'லார்ட்ஸ்' மைதானத்தை கிரிக்கெட் உலகின் மெக்கா என்பார்கள். அங்கு சதமடித்த அனுபவம் பற்றி?

**கங்குலி :** அந்த மேட்சில் ஆட இடம்கிடைத்ததே ஒரு பெரிய சாதனைதான்! யாரும் எதிர்பாராத விதமாக சித்து பாதியில் திரும்பி விட, எனக்கும் திராவிடுக்கும் ஆட வாய்ப்புத் தரப்பட்டது. கேப்டன் அஸார், முதல் நாள் எங்கள் இருவரையும் கூப்பிட்டு, "ஃப்ரீயாக, பதறாமல் ஆடுங்கள். நான் என் முதல் டெஸ்டில் சதம் அடித்தேன். அதே போல் நீங்களும் அடிப்பீர்கள்" என்று நம்பிக்கை வார்த்தைகள் சொல்லி உற்சாகப்படுத்தினார். 'நான் ஏதோ சாதனை செய்வேன்' என்று என் உள்ளுணர்வும் கூறிக் கொண்டே இருந்தது. காளியின் அருளால் அந்த மேட்சில் சதம் அடித்தேன்! இந்திய அணியிலேயே வெங்சர்க்காரும் நானும் மட்டும்தான் லார்ட்ஸில் சதம் அடித்தவர்கள் என்று பிறகு சொன்னபோது, உண்மையில் மிக மகிழ்ச்சி அடைந்தேன். ஆனாலும் ஒரு சிறு வருத்தம். எனக்கு ஊக்கமளித்து, உற்சாகமூட்டியபடியே என்னுடன் ஆடிய ராகுல் திராவிட், 90 ரன்களில் அவுட் ஆகி விட்டது ரொம்பக் கஷ்டமாகி விட்டது. அவரும் செஞ்சுரி அடித்திருந்தால் என் மகிழ்ச்சி முழுமை அடைந்திருக்கும். ஆனால் ராகுல், என் செஞ்சுரியைத் தன்னுடையதைப் போல பாவித்து என்னைக் கட்டிப் பிடித்துப் பாராட்டி முத்தமிட்டதை மறக்கவே முடியாது!

**கல்கி :** குறுகிய காலத்தில் அபாரமாக வளர்ந்திருக்கிறீர்கள். இந்த வளர்ச்சிக்கு யார் காரணம்?

**கங்குலி :** சாம்பரன் பானர்ஜி, அருண்லால், ரவி சாஸ்திரி. இந்த

• கடும் பயிற்சி...



மூவர்தான் என்னைக் கவனித்து, முன்னுக்குக் கொண்டுவர முழு முயற்சி எடுத்தவர்கள். நான் எப்போதும் மனசுக்குள் நன்றி கூறிக் கொண்டிருப்பது இவர்களுக்குத்தான். பிறகு என் கேப்டன்களான அஸார், டெண்டுல்கருக்கும். சரியான அறிவுரைகளின் மூலம் என்னைச் செம்மைப்படுத்தியவர்கள்.

**கல்கி** : ஒரு பேட்ஸ்மனாகத்தான் நீங்கள் அறிமுகமானீர்கள். ஆனால் திடீரென்று போலிங் மூலம் பரபரப்பேற்படுத்தினீர்களே, அது எப்படி?

**கங்குலி** : நான் வங்காள அணியில் இருந்தபோதே ரஞ்சிப் போட்டிகளில் நிறைய ஓவர்கள் போட்டிருக்கிறேன். புதிய பந்தை 'ஸ்விங்' செய்யக் கொஞ்சம் நன்றாகத் தெரியும். இலங்கையுடனான மேட்ச் ஒன்றில் சில ஓவர்கள் வீசிப் பார்த்தேன். அந்த அனுபவம்தான் சகாரா போட்டிகளில் உதவியது. உண்மையில் என் திறமையை விட, அந்த கிரவுண்ட் பிட்ச் எனக்கு நன்றாக உதவியது என்றே சொல்ல வேண்டும். அதனால்தான் அங்கே நிறைய விக்கெட்டுகள் எடுக்க முடிந்தது. மற்றபடி அவ்வப்போது போலிங் செய்வது, மைதானத்தில் என்னை 'fit' ஆக வைத்திருக்க உதவுகிறது.




**கல்கி** : சமீபத்தில் டாக்கா ஒருநாள் மேட்ச் அனுபவம் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்.

**கங்குலி** : இன்னும் கண்களிலேயே நிற்கிறது அந்த 316! அதுவும் பாகிஸ்தானுக்கு எதிராக அத்தனை பிரும்மாண்டமான வெற்றி என்றால் சும்மாவா? சச்சின் அதிரடி ஆட்டம் ஆடி அவுட் ஆகி விட்டார். அந்த 'டெம்போ'வைத் தொடரச் செய்யும் பெரிய பொறுப்பு எனக்கு வந்தது! அந்த சிக்கலான சூழலில் ராபின்சிங் செய்த உதவி மறக்க முடியாதது! ரன்கள் வந்ததே தெரியாமல் அடித்துக் கொண்டே இருந்தார். சொல்லப் போனால் அன்று நான் அடித்த ரன்களில் சுமார் 30 ரன்கள் ராபின் புண்ணியத்தால்தான் வந்தன. பின்பு கனிட்கர் அடித்த அந்த எதிர்பாராத ஃபோர்... யாரும் மறக்க முடியாத மேட்ச் அது!

**கல்கி** : ஃபீல்டிங்கில் நீங்கள் ரொம்ப ஸ்லோவாக இருக்கிறீர்களே?

**கங்குலி** : முதலில் அப்படித்தான் இருந்தேன். இப்போது கடும் பயிற்சி செய்து வருகிறேன். வரப் போகும் டெஸ்டில் பாருங்கள். அஸார், ஜடேஜா, சச்சின் மாதிரி சூப்பராக ஃபீல்ட் செய்யப் போகிறேன்! ●

அட்டையில் : **கங்குலி**

வண்ணப்படம் : **சாரி**

# இறைவனின் லீலை

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

கூதறியமுகிற சிகவுக்கு அந்தர்யாமியாய் உட்கார்ந்திருக்கிற பகவான் பதில் சொல்கிறான்: "நீ பண்ணிய பாவத்துக்குப் பிறந்துதான் ஆக வேண்டும்... பிரும்ம சூத்திர வாக்கியத்தை நீ கேட்டதுண்டா? உபநிஷத் உனக்குத் தெரியுமா? பலப்ரதானம் பண்ணுகிறவன் நான் – பலனைக் கொடுக்கிறவன். நீ பண்ணிய பாவத்துக்குப் பலனைக் கொடுக்க வேண்டிய நிலையிலே நான் இருக்கிறேன். 'என்னைப் பாவமே பண்ண விடாமல் நீ தடுக்கக் கூடாதா?' என்று நீ என்னைக் கேட்கலாம்..."

– அந்த மாதிரி ஒருத்தர் கேட்டார் வாசுதேவனிடம். அவன் பூலோகத்தில் இருக்கும்போது உத்தங்கர் என்கிற மஹரிஷி வாசுதேவனிடம் வந்து கேட்டார்:

"ஹே கிருஷ்ணா! பாண்டவ பக்ஷ பாதியாய் நீ இருக்கிறாயே... பாண்டவர்களுக்காக வேலை செய்கிறாயே... கௌரவர்களையும் நல்லவர்களாக ஆக்க வேண்டும் என்று நீ நினைத்தால் அவர்கள் ஆக மாட்டார்களா? பாண்டவர்கள் பக்கமே இருந்து கௌரவர்களை துஷ்டர்களாகவே வாழ வைத்து அவர்களை அழிக்கிறாயே. நீ நினைத்தால் அவர்களையும் நல்லவர்களாக்க முடியாதா? உன்னுடைய சங்கல்பம்தானே காரணம்? அப்படியிருக்கும்போது, அவர்கள் கெட்டவர்களாய் இருக்க வேண்டும், இவர்கள் நல்லவர்களாய் இருக்க வேண்டும் என்று ஏன் இப்படி வைத்து பாரபட்சத்தோடு நடந்து கொள்கிறாய்...? இந்த விஷயம் எனக்குப் புரியவில்லையே...?"

அதற்கு பரமாத்மா, 'சந்தியாவந்தனம் பண்ணுகிறேன்' என்று புறப்பட்டுப் போனவன்தான்! இன்றுவரைக்கும் அந்தக் கேள்விக்கு அவன் பதில் சொல்லவில்லை!

அவர் கேட்டது என்ன அவ்வளவு கஷ்டமான கேள்வியா? இல்லையானால் பகவானுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லையா? பதில் சொல்லத் தெரியவில்லையானால் அவன் சர்வக்ஞனாவானா...?

அப்படி அல்ல.... "இந்த விஷயத்தை நீயே தெரிந்து கொள்... அதை நான் சொல்லத் தேவையில்லை" என்று சொல்லி விட்டான் அவன். அப்படியானால், 'உமக்கே தெரியும்! நான் சொல்ல வேண்டியதில்லை' என்று அர்த்தம்.

ஏன்..? 'நல்லது இது; தீயது இது' என்று பரமாத்மா காட்டிக் கொடுக்கிறான். அவனுக்கு இது ஒரு லீலை, விளையாட்டு!

சின்னக் குழந்தையின் எதிரே பேனாவையும் பேப்பரையும் வைப்பார்கள். இதர வஸ்துக்களும் பக்கத்திலே இருக்கும்... இந்தக் குழந்தை வந்து எதை எடுக்கிறது என்று பார்த்து, பேப்பரையும் பேனாவையும் எடுத்தால் அது எழுத்தாள



னாய் வரும் என்று நிர்ணயம் பண்ணு வார்கள்!

இப்படி, குழந்தையின் இச்சை எதிலே போகிறதோ அதைப் பரீட்சை பண்ணிப் பார்ப் பார்கள்.

அந்த மாதிரிதான் நமக்கு எல்லாவற்றையும் காட்டு கிறான் பரமாத்மா– நல்லதையும் காட்டு கிறான். தீயதையும் காட்டுகிறான். ஒரு க்ஷணம் இந்த ஆத்மாவுக்குச் சுதந் தரத்தைக் கொடுக்கிறான்.

அவனின்றி ஓரணுவும் அசையாது என்று சொன் னேன் அல்லவா...? அவனே தான் இதற்கும் கார



ணம் - ஒரு க்ஷண சுதந்தரத்தை ஆத்மாவுக்குக் கொடுத்துப் பார்க்கிறான். அந்த ஒரு க்ஷணம் அது நல்லதைப் பிடித்துக் கொண்டது என்று வைத்துக் கொள்வோம்... அதனை நல்லதற்கே அழைத்துச் சென்று, கூட இருந்தே ரக்ஷிக்கிறான்.

தீயதை அது பிடித்துக் கொண்டு விட்டால், தீயதிலேயே அதனைச் செல்ல வைத்து, கடைசியிலே உயர்ந்த கதியைக் கொடுக்கிறான்.

- இந்த இரண்டுமே அவனுடைய விளையாட்டானதனாலே அந்த லீலா ரஸத்திலே தீயதை இவன் பற்றிக் கொள்கிறவனா நல்லதைப் பற்றிக் கொள்கிறானா என்பதைத் தான் பகவான் பார்க்கிறான்.

நல்லதைச் சொன்னால் பஞ்ச பாண்டவர்கள் உடனே கேட்கிறார்கள். அவர்களுக்கு அந்தக் குணம் அமைந்திருக்கிறது. அதைக் கொடுத்தவனும் பரமாத்மா.

அதே மாதிரி கௌரவர்களுக்குத் தீயதிலேயே புத்தி போகிறது. நல்லதைச் சொன்னால் அவர்களுக்குப் புத்தியிலே ஏறவில்லை! ஆகையினாலே அவர்களைத் தீயவர்களாகவே இருக்கச் செய்து, கடைசியில் உயர்ந்த கதியைக் கொடுக்கிறான்.

ஆகையினாலே, ஆத்மாவுக்கு ஒரு க்ஷணம் சுதந்தரத்தைக் கொடுத்து, நல்லது, கெட்டதைப் பற்றும்படி வைக்கிறான் பரமாத்மா. அதற்கேற்ப நிக்ரஹமும் அனுக்கிரஹமும் பண்ணுகிறான்.

நிக்ரஹம் என்றால் அழித்தல்... ஆனால் பகவானிடத்திலே நிக்ரஹமும் அனுக்ரஹம்தான்.

நம்மைப் போட்டு ஹிம்ஸை பண்ணுகிறான், சித்திரவதை பண்ணுகிறான் பரமாத்மா... அவனையே நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு ஏகமாகக் கஷ்டம்! அப்போதும் பகவானை விடாது அவர்கள் பற்றிக் கொள்கிறார்களா? 'நீ என்னதான் பண்ணினாலும் உன்னை நான் விடுவேனா?' என்று திருவடியைப் பிடித்துக் கொள்கிறார்களா...? - என்று பகவான் ரகசியமாக பரீட்சை பண்ணுகிறான். அந்தப் பரீட்சையிலே நாம் தேறி விட்டோமானால் அவனுடைய பரிபூரண அனுக்கிரஹம் கிடைக்கும். அந்த அனுக்கிரஹத்தைத் தாங்குகிற சக்தி நமக்கு உண்டா?...

## அருள்வாக்கு



நாமாகவே தெரிந்து கொள்வதைவிட, அதாவது புஸ்தகம் படித்தும் ஸ்வய அநுபவங்களாலும் மட்டும் தெரிந்து கொள்வதைவிட குருமுகமாகத் தெரிந்து கொள்வதில் என்ன சிறப்பு என்றால், நாமாகத் தெரிந்து கொள்ளும் போது, 'இவ்வளவு படித்தோம், இப்பேர்ப்பட்ட விஷயங்களை நம்முடைய அநுபவத்தாலேயே தெரிந்து கொண்டோம்' என்ற அஹங்காரம் ஏற்பட இடமிருக்கிறது. புஸ்தகப் படிப்பும் வேண்டியதுதான். குருவே புஸ்தகத்திலிருந்தும் உபதேசிக்கிறார். 'இது இது இன்னும் படி'

அனுக்கிரஹத்தையும் தாங்க முடியாது; நிக்ரஹத்தையும் தாங்க முடியாது! ஆகையினாலே அவனுடைய திருவடியைத் தவிர வேறு தஞ்சம் ஏது...?

கர்ப்பத்திலேயிருக்கிற சிசுவினுடைய அவஸ்தையைச் சொன்னேன். அந்த சிசு பகவானிடம் பேசுகிறது; பகவான் அதனிடம் பேசுகிறான். கடைசியிலே அது பிறக்கிறது... பிறக்கும்போது அஞ்ஞானியாய்ப் பிறக்கிறது. பிறந்தவுடனே அழுகிறது.... என்னவென்று அழுகிறது...?

'குவா குவா...!' என்று அழுகிறது. 'குவா' 'குவா' என்றால் 'எங்கே? எங்கே' என்று அர்த்தம்.

'இத்தனை நேரம் நான் ஒருவனிடம் பேசிக் கொண்டிருந்தேனே- அவன் எங்கே?' என்று அந்த சிசு கேட்கிறது.

ஹிரண்யன் பிரகலாதனிடம் கேட்டபோது ''குவா ஸொ? குவா ஸொ?'' என்றுதான் அதிரக் கேட்டான்.

குழந்தையும் குவா குவா என்றுதான் பிறக்கிறது. அப்படிப் பிறந்து, அது ஒவ்வொன்றையாக வாசித்து, சப்த மஞ்சரி வாசித்து, அமர கோசத்தை வாசித்து, தர்க்க சாஸ்திரம் வாசித்து, ஏகப்பட்ட கிரந்தங்களையெல்லாம் வாசித்து, ஆசார்யரிடம் போய் வேதாந்தம் காலட்சேபம் பண்ணி, அதற்கப்புறம் அது தனக்கு அனுபவத்திலே வந்து, எம் பெருமானிடத்திலே ஆத்ம சமர்ப்பணம் பண்ண வேண்டுமென்ற

என்றும் சொல்வார். அதே மாதிரி, அல்லது அதை விடவும், ஸ்வய அநுபவத்தாலும் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். குரு உபதேசமெல்லாமும் ஸ்வாநுபூதியில் கொண்டு விடுவதற்குத்தானே? ஆனால் அப்படி ஒரு பெரியவரின் துணை guidance இல்லாமல் நாமாகப் படிப்பு, அநுபவம் என்று போகும்போது, (தலையைத் தொட்டுக் காட்டி) கனத்துப் போகிற அபாயம் இருக்கிறது. குரு என்று ஒரு பெரியவரை வரித்து விட்டால் அவரிடம் அடங்கியிருப்பது, சுச்ருஷை செய்வது என்று இருப்பதில் ஆத்மாவுக்கு மிகவும் ஹானிகரமான இந்த அஹங்காரம் அப்படியே நசிக்க வசதி ஏற்படுகிறது. வெறும் புத்திவ்ருத்தியாய் மட்டும் எல்லாம் முடிந்து போய்விடாமல், அன்பு, தொண்டு ஆகியவற்றால் உள்ளம் பக்குவமாகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக புஸ்தகத்திலே சொல்லியிருக்கிறதும், மூளை லெவலில் மட்டும் புரிகிறதுமான தத்வங்கள், ஒரு அநுபவியின் மூலம் அவருடைய நிறைந்த அநுக்ரஹ சிந்தையோடு உபதேசமாக வரும்போது ஜீவனுள்ள சக்தியாக நமக்குள் போய் நம்மையும் ஸத்ய அநுபவத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறது. அந்தப் பெரிய அநுபவம் தனக்கு ஏற்படுவதிலும் சிஷ்யன் அஹங்காரப்பட முடியாது. ஏனென்றால் அஹங்காரம் நாசமாகி ஆத்மா மாத்திரம் பிரகாசிப்பதுதான் அந்த அநுபவமே! அதற்கு குருவின் அநுக்ரஹம் ரொம்ப அவச்யம்.

எல்லோரும் முடிந்த அளவு குரு பக்தி செய்து ச்ரேயஸை அடைய வேண்டியது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

ஞானம் ஏற்பட்டு, சரணாகதி பண்ணி, இது மோக்ஷம் போகிறதுக்குள்ளே... அதற்கு எத்தனை ஆயுள்காலம் உண்டோ தெரியாது. அல்ப ஆயுளில் போய் விடலாம்; தடைகள் வரலாம்; எத்தனையோ கஷ்டங்கள் - ரோகம்.... இப்படியெல்லாம் கஷ்டப்பட்டு ஓர் உத்தம கதியை அடைவது என்றால்... ஞானியாய் இருந்து, நல்ல ஞானத்தை இழந்து அவஸ்தைப்பட்டு திரும்பவும் ஞானம் அடையும் படியாகலாம்.

உலக பந்தத்துக்குள்ளே வாழ்வது என்பதை நினைத்துப் பார்த்தாலே மறுபடி பிறவி வேண்டும் என்று யாருக்காவது தோன்றுமா!

ஆழ்வார் ஏன் அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார்... 'மறுபடியும் பிறவி வேண்டேன்' என்று... ஏனென்றால் அதிலிருக்கிற கிலேசங்கள், கஷ்டம்! 'அறிந்தனரெல்லாம் அரியை வணங்கி, அறிந்தனர் நோய்கள் அறுக்கும் மருந்தே!' - நோய்கள் என்பது பஹு வசனத்திலே - பன்மையிலே இருக்கிறது - அதை கவனிக்க வேண்டும். நோய் அல்ல... நோய்கள்!

ஏன் அப்படியிருக்கிறது என்றால், எத்தனையோ விதமான பிறவிகள் - ஆனதினாலே துக்கமாகிற அந்தப் பிறவியை நாம் ஒதுக்கித் தள்ள வேண்டும்.

சுவாமி தேசிகன் ரகுவீர கத்யத்தைப் பிறப்பறுக்கும் மருந்து என்கிறார். ஆகவே மறுபடியும் மறுபடியும் பிறத்தல் என்பதே ஆத்மாவுக்கு ஏற்பட்ட ரோகம்.

மற்றைய பிராணிகளெல்லாம் மனிதனைப் பார்த்து ஆச்சர்யப்படுகின்றன. மனிதனிடம்தான் வாக்கு இருக்கிறது; சாஸ்திரங்களெல்லாம் இருக்கின்றன. வேதத்திலே குறிப்பிட்ட ஆய கலைகள் அறுபத்தி நான்கினுள் பதினான்கு முக்கியமானவை - வித்யாஸ்தானங்கள் என்று அவற்றுக்குப் பெயர். இந்த வாக்கையும் கொடுத்து, இத்தனை சாஸ்திரங்களையும் கொடுத்து இத்தனை உபகாரம் நமக்குப் பண்ணியிருக்கிறான் பகவான். இதெல்லாம் சாமானிய பிராணிகளுக்கு உண்டா...?! கிடையாது! ஆகையினாலே, இந்த மனித ஜன்மா கிடைப்பது துர்லபமானதினாலே இதை நாம் சத் விநியோகம் பண்ணிக் கொள்ள வேண்டும். இனிமேலும் இந்த நோய்க்கு அகப்படக் கூடாது; மறுபடி பிறவி எடுக்கக் கூடாது என்பதற்காக வாழ வேண்டும்.

சீதா பிராட்டிக்கு ஆஞ்சனேயன் கொடுத்த அங்குலியகம் என்ன ஆனந்தத்தைக் கொடுத்தது என்று கம்பன் சொல்லும்போது:

*'இறந்தவர் பிறந்தபயன் எய்தினர்கொல்*
*என்கோ*
*மறந்தவர் அறிந்துணர்வு வந்தனர் கொல்*
*என்கோ'*

இறந்தவர் பிறந்த பயன் எய்துதல் என்பது என்ன...? அதுதான் மீண்டும் பிறத்தல் என்பதை விட்டொழிக்கும் நிலை.

(தொடரும்)

நீதிமன்றம்

குஜ்ரால்

ஜனநாயகம்

பண்டாரி

கே.ஆர்.நாராயணன்




1998 மார்ச் 8

ஈசுவர மாசி 24

மலர் : 56

இதழ் : 32


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கனவான்களின் அரசியல், கயவர்கள் கையில்!

"மாநில ஆளுனர் என்பவர் தீயணைப்பு வண்டியைப் போன்றவர். மற்ற நேரங்களில் வெறும் அலங்காரம் போல் தோன்றினாலும், ஒரு நெருக்கடியின்போது இன்றியமையாத உதவியாக, பாதுகாப்பாக இருப்பார்" - கவர்னர் பதவி அவசியமானதா என்ற விவாதங்கள் எழுந்தபோது ராஜாஜி சொன்னது இது.

ஆனால் உத்தர பிரதேச ஆளுனர் ரொமேஷ் பண்டாரி, ஒரு நெருக்கடியில் தீயை அணைப்பதற்குப் பதில் மேலும் பெட்ரோல் ஊற்றி எரியவிட்டிருக்கிறார்!

வாக்காளர்களின் எண்ணங்களை மதியாமல், தங்கள் இஷ்டத்துக்கு விளையாடிக் கொண்டிருக்கும் உ.பி. எம்.எல்.ஏக்களைக் காட்டிலும் எவ்வகையிலும் தாம் உயர்ந்தவரல்ல என்பதை நிரூபித்திருக்கிறார் பண்டாரி.

ஐந்து மாதங்களுக்கு முன் இதே போன்றதொரு நெருக்கடி உ.பி. மாநில பி.ஜே.பி ஆட்சிக்கு நேர்ந்தபோது, பிரிந்து வந்த 22 காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள், லோக் தாந்த்ரிக் காங்கிரஸ் என தங்களை அழைத்துக் கொண்டனர். கல்யாண் சிங்குக்கு ஆதரவு அளித்துக் காப்பாற்றினர்.

இப்போது அதே லோக்தாந்த்ரிக் காங்கிரஸ் தான், கல்யாணுக்கு அளித்து வந்த ஆதரவை விலக்கிக் கொண்டிருக்கிறது! அதன் தலைவர் ஜகதம்பிகா பால், தாம் முதல்வராவதற்குப் போதுமான ஆதரவு பெற்றவர் என்றும் வாய்ப்புத் தர வேண்டும் என்றும் முறையிட, பண்டாரி அவரை




முதல்வராக்கி விட்டார்!

இந்த நிகழ்ச்சி, உ.பி.யில் தேர்தல் நடக்கவிருந்த கால கட்டத்தில் நடந்தேறியிருக்கிறது. நாடாளுமன்றத் தேர்தலில் பி.ஜே.பி.யின் வெற்றி வாய்ப்புகளைக் குறைக்க, குலைக்க வேண்டும் என்கிற திட்டத்துடன் நிகழ்த்தப்பட்டது இந்த நாடகம். ஆனால், பி.ஜே.பி தலைவர் வாஜ்பாயி, கல்யாண்சிங் பதவி நீக்கப்பட்டதாக அறிந்ததுமே உண்ணாவிரதம் மேற்கொண்டு, அனுதாப அலையைத் தம் பக்கம் திருப்பிக் கொண்டிருக்கிறார்.

இதற்கிடையே பண்டாரியின் நடவடிக்கை தவறு என்று உயர்நீதிமன்றம் உத்தரவிட்டிருக்கிறது. உச்சநீதி மன்றமும் சட்டமன்றத்தில் வாக்கெடுப்பு நடத்தச் சொல்ல, அதன் விளைவாக கல்யாண் சிங் மீண்டும் முதல்வராகியிருக்கிறார்.

ஒரு மூன்றாந்தர அரசியல்வாதியைப் போல் நடந்து கொண்ட ஆளுனரை உடனடியாகப் பதவி நீக்கம் செய்ய வேண்டும் என குடியரசுத் தலைவரே வெறுத்துப் போய் பிரதமருக்கு எடுத்துச் சொல்கிற அளவுக்கு பண்டாரி தாழ்ந்திருக்கிறார்.

பண்டாரியைப் போல், மரபுகளைப் பறக்க விட்டு ஜனநாயகத்தைக் குழி தோண்டிப் புதைத்து விட குடியரசுத் தலைவர் தயாராயில்லை. முறைப்படி பிரதமரிடமிருந்து சிபாரிசு வந்தாலன்றி, தாம் பண்டாரியைப் பதவி நீக்கம் செய்யலாகாது என்பதை உணர்ந்து, பிரதமருடன் தொடர்பு கொண்டு வருகிறார்.

பிரதமரின் அனுமதியுடன், மத்திய அமைச்சரவையின் சிபாரிசுடன் ரொமேஷ் பண்டாரியைப் பதவி நீக்கம் செய்துவிட முடியும். அவரிடத்தில் வேறு நபரை நியமித்து விடவும் முடியும். ஆனால், அதன் மூலம் உத்தரபிரதேச அரசியல்வாதிகளை உயர்த்தி விட முடியாது.

தமக்கு அநீதி இழைக்கப்பட்டதாக இன்று கூறுகிற கல்யாண்சிங், குதிரை வியாபாரம் என்கிற நீசத்தனத்துக்குத் துணிந்தவர்தான். அப்போது தம்மை ஆதரித்த அத்தனை எம்.எல்.ஏ.க்களுக்கும்




அமைச்சர் பதவி அளித்து, ஜனநாயகத்தைக் கேலிக்கூத்தாக்கியவர்.

ரொமேஷ் பண்டாரியின் நீக்கம், இந்த அடிப்படைக் கோளாறுகளைக் களையப் போவதில்லை. உத்தரபிரதேச சட்டமன்றத்தைக் கலைத்துவிட்டு, தேர்தல் நடத்தி, தனிப் பெரும்பான்மையுடன் ஒரு கட்சியைத் தேர்ந்தெடுக்க வாக்காளர்களுக்கு மீண்டுமொரு வாய்ப்புத் தரப்பட வேண்டும். இல்லாவிட்டால், இதே இழுபறி நிலையும் குதிரை வியாபாரமும்தான் மீண்டும் மீண்டும் அரங்கேறும்.

சட்டத்தின் பிடியில் சிக்காமல் எப்படி அரசியல் பண்ணலாம், சுய ஆதாயம் தேடிக் கொள்ளலாம், என்பதைத்தான் இன்றைய அரசியல்வாதிகளின் மூளை யோசிக்கிறதேயொழிய, ஜனநாயக மரபுகளை மதித்து அவற்றுக்கு உட்பட்டு நடந்து நல்லாட்சி வழங்க வேண்டும் என்ற நோக்கம் துளியும் இல்லை. அதனால்தான், மிக உயர்ந்த லட்சியங்களின் அடிப்படையில் வகுக்கப்பட்ட அந்த மரபுகள் இன்று வலிமையிழந்ததுபோல் தோன்றுகின்றன. அவை கனவான்களுக்காக கனவான்களால் உருவாக்கப்பட்டவை; இன்று அரசியலில் இருப்பவர்களோ கயவர்கள்!

அரசியல் என்பது, பதவி சுகம் அனுபவிக்கவும் பணம் பண்ணவும் பெறுகிற வாய்ப்பு அல்ல என்ற சூழ்நிலை உருவானாலன்றி எதிர்காலம் பிரகாசமாயிராது. இதைத் தேர்தல் சீர்திருத்தங்கள் மூலமும் லோக்பால் அமைப்பை நிறுவுவதன் மூலமும் சாதிக்கலாம். ஆனால், 'பூனைக்கு யார் மணி கட்டுவது?' என்கிற கதையாக எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் இந்தச் சீர்திருத்தங்கள் பற்றிக் கவலைப்படுவதே இல்லை.

உத்தர பிரதேச நெருக்கடியின்போது, தாமதமின்றி, பொறுப்புணர்வுடன் இயங்கிய குடியரசுத் தலைவர் கே.ஆர். நாராயணன் மனம் வைத்தால், அடுத்து பொறுப்பேற்க இருக்கும் பிரதமரை நிர்ப்பந்திக்கலாம். நாட்டின் எதிர்கால நலன் கருதி தேர்தல் சீர்திருத்தங்களைக் கொண்டு வரவும் லோக்பால் அமைப்பை நிறுவவும் அவர் தூண்டுகோலாக இருக்கலாம். இன்றைய குடியரசுத் தலைவருக்கு அதிகார பலம் அதிகமில்லை. ஆனால் தார்மிக பலம் நிறைய உண்டு. அதைப் பிரயோகிக்கட்டும். ●

## படித்ததில் பிடித்தது

# மாத நாவலல்ல; மயக்கும் நாவல்!

ஜமுனா – மேலட்டையையும் தலைப்பையும் பார்த்தால் மாத நாவல் தோற்றம். ஆனால் முதல் சில வரிகளில் வர்ணிக்கப்படும் ஆனந்த் பவன்தான் கதையின் ஜீவநாடி.

ஆனந்த் பவன் ஒரு சிற்றூர் ஹோட்டல். அதன் ஊழியர்கள், அவர்களுடைய வாழ்க்கைப் பின்னல்கள், உணர்வுப் போராட்டங்கள், ஏக்கங்கள், பயங்கள், கனவுகள், நம்பிக்கைகள், விசுவாசம்... என்று இழை இழையாக எடுத்துப் பின்னி ஒரு சிற்றுலகைப் படைத்துள்ளார் வையவன்.

உரையாடலும் வர்ணனையுமாக மாறி மாறி அமைந்து நம் கண் முன் ஆனந்த் பவனை உயிர்ப்பிக்கின்றன.

உரையாடல்களில், பேச்சு மொழியின் நுணுக்கமான வேறுபாடுகள் பாத்திரங்களுக்கேற்பக் கையாளப்படுகின்றன. வர்ணனைகளோ, ஒரு ஹோட்டலின் கலவையான மணத்தை, தாளகதியுடன் கூடிய அசைவுகளை, ஓசைகளையெல்லாம் உணரச் செய்கின்றன.

மிகக் குறுகிய விவரிப்பில் கதாபாத்திரங்கள் பெரும்பாலும் ஆனந்த்பவன் ஊழியர்கள் – நமக்கு அந்நியோன்யமாகி விடுகிறார்கள். அவர்களுள் முக்கியமானவர்களின் தனிப்பட்ட வாழ்க்கையில் புயல், சூறாவளி, தென்றல், தூவானம்... என்று வானிலை அறிக்கை எதுவாயிருப்பினும் ஆனந்த் பவன் தன் ராஜபாட்டையில் தொடர்கிறது. அதன் இயக்கங்கள், அதனை நம்பியிருக்கும் வாடிக்கையாளர்களுக்காக நடைபெறுகின்றன.

ஜமுனா மீது ராஜாமணி கொள்ளும் காதல், அவள் நிராகரிப்பு, ஒரு ஆலங்கட்டி மழை தினத்தில் அவன் பார்வையும் மனமும், புலன்களும் இடறி தலைகுப்புற விழுகிற சோக நிகழ்ச்சி. அதற்கு இணையாக ஜமுனா மோகனிடம் கொள்ளும் மோகம் – அது அடைகிற விபரீத முடிவு... என்று 'கதாநாயகனையும்' 'கதாநாயகியையும்' பாடாய்ப் படுத்தித்தான் வைக்கிறார் வையவன்!

இடர்கள் நீங்கி அவர்கள் ஒன்றாகி விடும் சம்பிரதாய முடிவெல்லாம் இடையாது. ஆனந்த பவன் ஒன்றே சாச்வதம் என்பது போல் ராஜாமணி நிலைக்குத் திரும்பி, கல்லாவில் போய் உட்காருகிறான்...




நாவலுக்கு ஆனந்த் பவன் என்று பெயரிட்டிருக்கலாம்... ஆனால் அழகான பெண்ணை அட்டையில் போட்டிருக்க முடியாது!

நிறைவான நாவல் – பெரிய குறை – தாராளமான அச்சுப்பிழைகள்!

— சீதா ரவி

(ஜமுனா/ சாந்தி பப்ளிகேஷன்ஸ் 137, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை – 600 034/ விலை ரூ. 45)



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
சென்னை-600 063. தொலைபேசி:2376129

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு , உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி (70 பேருக்கு) | ரூ. | 500/- |
| மதிய உணவு (இனிப்புடன்) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்..

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்,
சுவாமி சர்வாத்மானந்தர்.



*(வருமான வரி விலக்கு (section - 80-G) உண்டு)*

● அ. சங்கரன்,
பெங்களூர் – 16.

? நம் நாட்டு தேசியக் கொடிக்கும் காங்கிரஸ் கட்சியின் கொடிக்கும் வேறுபாடு தெரியாத மக்கள் இன்னும் இருக்கையில், காங்கிரஸ் தனது கொடியின் வர்ணத்தை மாற்றிக் கொண்டால் நல்லதல்லவா?

! வெகு காலம் முன்பே ராஜாஜி எடுத்துக்காட்டிய விஷயம் இது. காங்கிரஸ், தனது கொடியின் நிறங்களையே தேசியக் கொடியில் இடம்பெறச் செய்த பிறகு, தனது கட்சிக் கொடியின் வர்ணங்களை மாற்றிக் கொள்வதே நியாயமானது.


* விதியின் வலிமை!


* விலக்கி வைத்த விருப்பம்!


* ரிமோட் கண்ட்ரோல்!


* கஷ்டமின்றி பணம்!

! பெருந்தன்மையெனில் இந்த அறிக்கை அன்றே வந்திருக்க வேண்டும். தேர்தலையொட்டி காலதாமதமாக வரும்போது அது சாணக்கியமாகி விடுகிறது!

● கே.ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்-6.

? 'நாங்கள் செய்தவை இரண்டு தவறு! -ஒன்று உ.பி.யில் காங்கிரஸுடன் கூட்டணி வைத்தது; இரண்டு அ.இ.மு.க.வுடன் கூட்டணி வைத்துக் கொண்டது' என்று பி.ஜே.பி. தலைவர் கோவிந்தாச்சார்யா கூறியிருக்கிறாரே?

! கோவிந்தாச்சார்யா இன்று ஒன்று கூறிவிட்டு நாளை அதை கோவிந்தாவாக்கிவிட்டு வேறு ஒன்று சொல்வதில் தாம் வல்லவர் என்பதைப் பலமுறை நிருபித்திருக்கிறார். அ.இ.மு.க. கூட்டணி விஷயத்தில் கூட அவர் அசடுவழிந்தாயிற்று!

● ஆர். மார்ட்டின், திருமானூர்.

? 'என் ஆட்சியில் மக்களுக்குப் பணக் கஷ்டமில்லை' என்கிறாரே ஜெயலலிதா?

! பணப்புழக்கம் அதிகம் இருந்தது என்றால் அந்த அளவுக்குக் கறுப்புப் பணம் உலவியது என்று அர்த்தம். அத்தகைய பண வீக்கம் ஆரோக்கியமான பொருளாதாரமில்லை; எந்த நிமிடமும் ஹார்ட் அட்டாக் வரும்!

● நீடா. சி. இளஞ்செழியன், சாலியமங்கலம்.

? இனியும் தமிழகத்தை அமைதிப்பூங்கா என்று கூறுவது பொருந்துமா?

! பொருந்....டும்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்-1.

? கோவைச் சம்பவம் தொடர்பாக கேசரி மீது ஆர்.எஸ்.எஸ். மான நஷ்ட வழக்கு தொடர்ந்துள்ளதே?

! வேஸ்ட் ஆஃப் டைம்! பல்டி அடிக்கும் திறனுள்ள அரசியல்வாதிகளை மான நஷ்ட வழக்குகள் பாதிக்காது.

● த. குணசேகரன், ஈரோடு -9.

? 'கே.ஆர். நாராயணனை ஜனாதிபதி ஆக்கியதே நான்தான்...' என்று லல்லு பிரசாத் யாதவ் கூறியிருப்பது பற்றி...?

! இது உங்களுக்குத் தெரியாதா...? கிளின்டனை அமெரிக்க அதிபர் ஆக்கியதும் லல்லு தான்!

● கு. கணேசன், காட்டாங்குளத்தூர்.

? 'நான் பிரதமராக விரும்பியதும் இல்லை; கருணாநிதி அதைத் தடுக்கவும் இல்லை' என்று அறிவித்துள்ள மூப்பனாரின் பெருந்தன்மை குறித்து...?

# மூப்பனாரின் பெருந்தன்மை குறித்து..?

● ஜெ. கண்ணன், சென்னை – 101.

? ரஜினியை, 'தமிழக அரசியலை இயக்கும் ரிமோட் கண்ட்ரோல்' என்று கூறலாமா?

! பெருவாரியான தமிழக வாக்காளர்களை இயக்கும் ரிமோட் கண்ட்ரோல் என்று வேண்டுமானால் சொல்லலாம். அரசியலை இயக்கும் ரிமோட்டாக மாற, அவர் பால்தாக்கரேயைப் பின்பற்ற வேண்டும். அப்படிச் செய்யாதிருப்பாராக!

● ஆர். சுப்பாராவ், திருக்கோவிலூர்.

? 'சோனியா காந்தி பிரதமராவதா...? நாம்

என்ன அழகிப் போட்டியா நடத்துகிறோம்?' என்று மன்மோகன் சிங் கூறுகிறாரே...? அழகு ராணியைத் தேர்ந்தெடுத்தால் என்ன...? நிலையான ஆட்சி கிடைக்கும் அல்லவா?...

! பாப்பையாவைக் கூப்பிடுங்கள். சோனியா அழகுதானா? இல்லையா?

● மா. பழனிசாமி, வரதராஜபுரம்.

? ஊராட்சி அமைப்புகள், நூலகத் துறைக்கு அளிக்க வேண்டிய கடன் தொகையைத் தராமல் தாமதம் செய்வது முறையா...?

! நூலகத் துறையைப் போல் கவனிப்பாரற்ற அனாதைத் துறை வேறு கிடையாது!

● ஆர். பழனி, காட்பாடி.

? சமீபத்தில் தங்களை மிகவும் பாதித்த விஷயம்...?

! ராமன் லம்பாவின் மரணம். அவர் ஹெல்மெட் அணிவதில் நம்பிக்கை கொண்டவர். பிறருக்கு அறிவுறுத்துகிறவர். அப்படிப்பட்டவர், பாட்ஸ்மன் அருகே ஃபீல்ட் செய்ய முற்பட்டபோது ஹெல்மெட்டுக்கு ஜாடை காட்டியிருக்கிறார். அது வரும்வரை ஆட்டத்தைத் தடைசெய்யாமல் தொடர்ந்திருக்கிறார். அந்த ஒரு பந்துக்கு அவர் தப்பியிருந்தால் அடுத்த பந்துக்கு ஹெல்மெட் வந்து சேர்ந்திருக்கும். ஆனால் விதி யாரை விட்டது!

● எல்.எம். அழகு, மதுரை – 10. ❑

? காவிரி நீர்ப் பிரச்னையில், கர்நாடக எதிர்க்கட்சிகள் அம்மாநில முதல்வரின் பின்னே அணி திரண்டனர். அது போல, தமிழகத்தில் தலைதூக்கி வரும் தீவிர வாதத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வர இங்குள்ள எதிர்க்கட்சிகள், முதல்வர் கருணாநிதியின் பின்னே அணி திரண்டால் என்ன...?

! அதற்குத் தன்னலன் கருதாத, தமிழக நலன் கருதும் தலைவர்கள் தேவையாச்சே! எங்கே தேடுவதாம்!

● செந்தாழை நாதன், செந்தாரப்பட்டி.

? நடுநிலையோடு செயல்பட வேண்டிய குடியரசுத் தலைவர் பாராளுமன்றத் தேர்தலில் வாக்களித்தது சரிதானா...?

! வோட்டுப் போடாமலிருந்து நடுநிலையுடன் செயல்படுவது போல் தோற்றத்தை உருவாக்கி விட்டு, பிறகு கட்சிக் கண்ணோட்டத்துடன் செயல்படுவதை விட, குடிமகன் அதிலும் முதல் குடிமகன் என்ற ஸ்தானத்தில் வாக்குரிமையைப் பயன்படுத்தி விட்டு, பின்னர் கட்சிக் கண்ணோட்டத்தை ஒதுக்கி, மனச்சாட்சிக்கு விரோதமின்றி நடுநிலையோடு செயல்படுகிறவரே சிறந்த குடியரசுத் தலைவர்.

● ஆர். சி. முத்துக்கண்ணு,
திருத்தியமலை அஞ்சல்.

? இந்தியாவில் பிறந்ததற்கு எதற்காகப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம்? எதற்காக சிறுமைப்பட்டுக் கொள்ளலாம்?

! காந்தி தேசத்தில் பிறந்ததற்காகப் பெருமை, அம்பேத்கர் சிலைக்குச் செருப்பு மாலை அணிவித்து, கலவரம் தூண்டிய நாட்டில் வாழ்வதற்காகச் சிறுமை!

● கி. திலகர், ஈரோடு – 11.

? ஒவ்வொரு அசம்பாவிதத்துக்கும் ஆளும் அரசாங்கம் ராஜினாமா செய்தால் மக்களின் கதி? நாட்டின் முன்னேற்றம் என்னாவது?

! அரசாங்கமே ராஜினாமா செய்ய வேண்டுமென்பதில்லை. தவறும் அலட்சியமும் உறுதியாகிறபோது சம்பந்தப்பட்ட அமைச்சர் அல்லது அதிகாரி ராஜினாமா செய்வது மரபு. ஆனால், இன்று நடைபெறுவது என்னவென்றால், இருவருமே மனச்சாட்சியைக் கழற்றி வைத்து விட்டு, ஒருவரையொருவர் பாதுகாக்க ஒப்பந்தம் போட்டுக் கொள்கிறார்கள்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
எல். எம். அழகு,
127/A, பொன்மேனி புதூர்,
அரசரடி, மதுரை - 10.


• நஷ்டமாவது மானமாவது!


• பட்டிமன்றத் தலைப்பு!


• வாக்கு மாறும் வல்லவர்!


• நடுநிலை நாராயணன்!




# ராணுவப் பெண்களும் ரவுடி அதிகாரிகளும்!

நம்ம நாட்டிலேயே பெண் போலீஸ் வந்தாச்சு. பஸ்ஸிலே இடிராஜாக்களை எல்லாம் சும்மா கொத்தா அள்ளிட்டுப் போய் லாக்கப்பிலே தள்ளினது ஞாபகமிருக்கும்! ஐ.பி.எஸ். ராங்கில் ஆட்டிப்படைக்கும் கிரண் பேடியைப் பற்றி நமக்குத் தெரியாதா? ஆனால் இந்திய ராணுவத்தில் பெண்கள் அப்பிடி ஒரு நிலைக்கு உசர இன்னும் கொஞ்சம் நாளாகும்தான்.

அமெரிக்காவிலே அப்படியில்லே. அங்கே ராணுவத்திலே பெண்கள் சேர்ந்து கொஞ்ச வருஷமாச்சு. டக்டக்குனு ஷூ சத்தத்தோட அவங்க மிடுக்கா நடந்து, கட்டளைகளைப் பிறப்பிச்சு, ராணுவ விமான பைலட் பொறுப்புவரை எல்லாத்திலுமே புகுந்து புறப்படறாங்கன்றதைக் கேள்விப்பட்டதும் பெருமயைா இருந்தது!

அந்தப் பெருமையிலே இப்போ பெரிய அடி! ரெண்டு வருஷமாவே அமெரிக்க ராணுவப் பெண்கள் நிறைய சிக்கல்களிலே சிக்கிக்கிட்டு அவஸ்தைப் படறாங்களாம்.

அமெரிக்கர்கள் செக்ஸை சுலபமானதா எடுத்துக்கறது உண்மை. கல்யாணத்துக்கு முன்பே டேட்டிங்கும், கேஷுவல் செக்ஸும் ஓரளவு அங்கே சகஜம்தான். ஆனாலும் ராணுவத்தின் நிலையே வேற. அங்கே ரொம்ப ஸ்டிரிக்ட் ரூல்ஸ்! பின்னே, தனிமனித வீக்னஸ் தேசிய நலனுக்கு வேட்டு வச்சிடக் கூடாது இல்லையா? தவிர 'மிலிட்டரி டிசிப்ளின்'னு நாம சொல்லுவோமே, அதிலேயே அப்படி இப்படி, அரசல் புரசல்னா எப்படி?

டெக்ஸாஸ் நகரிலே அமைந்த ராணுவ விமானப் பயிற்சி நிலையத்திலே எட்டு ஆசிரியர்கள் தங்களிடம் பயிற்சிக்கு அனுப்பப்பட்ட பெண்களிடம் வாலாட்டி இருக்காங்க. வாலாட்டறதுனா அசட்டுச் சிரிப்போ, ஜொள்ளோ மட்டுமில்லே, ரேப் லெவலுக்குப் போயிருக்காங்க!

ராணுவத்தைப் பொறுத்தவரை கற்பழிப்பு, பலவந்தம் இதுமட்டுமில்லே. இரு தரப்பின் சம்மதத்தோடவும் கூட செக்ஸில் ஈடுபடக்கூடாது. அதுவும் ஒரு மேலதிகாரியும், அவருக்குக் கீழே வேலை செய்யும் அல்லது பயிற்சி எடுத்துக்கும் பெண்ணுக்குமிடையே இந்த மாதிரி சங்கதி இருக்கவே கூடாதுன்னு அடிச்சிச் சொல்லுது ராணுவ விதி.

பெண்ணுலகம்

ஆனா பல ட்ரில் சார்ஜன்டு களுக்கும், அவங்ககிட்டே பயிற்சி எடுத்துக்கும் பெண்களுக்கு மிடையே நிறைய 'ஒட்டுதல்' உருவாகியிருக்காம்!

பாவம், அங்கே சேர்றதெல் லாம் டீனேஜ் பொண்ணுங்க. வீட்டை விட்டு நிறைய தூரம் வந்து ராணுவ முகாமிலே சேர்ந் திருக்காங்க. உயர் அதிகாரிகள் உடலுறவுக்குக் கட்டாயப்படுத் தும்போது, நோ சொல்ல முடியாத அளவுக்கு பயம்.

இது பற்றியெல்லாம் கேள்விப் பட்டதும் உண்மையைத் தெரிஞ் சுக்க, ஒரு பிளான் பண்ணாங்க ராணுவத்திலே இருக்கும் மேலதி காரிகள். ராணுவ முகாமுக்குக் கிட்டே, இலவச தொலைபேசி வசதியை ஏற்பாடு செய்தாங்க. அதில் நடந்த பேச்சுக்களை யெல்லாம் ஒண்ணுவிடாம டேப் பிலே பதிவு செய்தாங்க. அப்புறம் அதைப் போட்டுப் பார்த்ததிலே, பத்திலே ஒரு 'காலா'வது இது மாதிரி தன் பதவியை தவறாகப் பயன்படுத்தி பெண்களைக் கட் டாயப்படுத்தும் விதமா இருந்த தாம்.

இப்பவெல்லாம் கற்பழிக்கும் முயற்சியை எப்படித் தடுப்பது, மேலதிகாரிகள் சில்மிஷம் செய் தால் எப்படித் தயங்காமல் அதை வண்டவாளமாக்குவது என்பதற் கெல்லாம் ஸ்பெஷல் வகுப்புகள் எடுக்கறாங்க!

ராணுவ நீதிமன்றங்களிலே விசாரணைக்கு வந்திருக்கும் குற்றம் சாட்டப்பட்டவர்களில் எண்பது சதவீதம் பேர் கருப்பர்கள்! பாதிக் கப்பட்டவர்களில் எண்பது சத வீதம் பேர் கருப்பர்கள் அல்ல. இத னால் நிற வெறின்ற குற்றச் சாட்டெல்லாம் வந்துடக் கூடா தேன்ற ஜாக்கிரதை உணர்வோட செயல்பட்டுக்கிட்டிருக்காங்க அந்த உயர் அதிகாரிகள்!

— சுமி

# அம்பயரின் காதலி!

● 'கபி அஜ்னபி' என்ற இந்தித் திரைப்படத்திற்கும் முன்னாள் இந்திய விக்கெட் கீப்பர் சையத் கிர்மானிக்கும் என்ன சம்பந்தம்? அவர் அந்தப் படத்தில் குணச்சித்திர வேடமேற்று நடித்திருக்கிறார். கூட நடித்த இன்னொரு 'நடிகர்' சந்தீப் பாடீல்!

● பிரபல சர்வதேச கிரிக்கெட் அம்பயர் டிக்கி பேர்ட் தினமும் 'சர்ச்'க்குச் செல்வதை வழக்கமாக்கிக் கொண் டிருப்பவர். ''எனக்கு எப்போதுமே ஒரு பய உணர்ச்சி உண்டு'' என்று அவ்வப்போது பேட்டிகளில் கூறி வந்திருக்கும் இவர், தன் வாழ்க்கையில் எந்தப் பெண்மணிக்கும் இட மில்லை என்கிறார். ''கிரிக்கெட் தான் என் காதலி, மனைவி!''

• சந்தீப் பாடீல்



● ''ரோஜாக்களின் யுத்தம் **(War of Roses)** என்று யார்க் ஷயர் மற்றும் லாங்காஷயர் ஆகிய அணிகளுக்கிடையே நடக்கும் கிரிக்கெட் போட்டி களைக் குறிப்பிடுவது வழக்கம். காரணம்? அந்தப் பகுதிகளின் கொடிகளில் முறையே சிவப்பு ரோஜா மற்றும் வெள்ளை ரோஜா ஆகியவை சின்னங்களாக இடம் பெற்றிருப்பதுதான்.

● டெஸ்ட் பந்தயங்களைப் பொறுத்தவரை 'டை'யில் முடிந்தவை இதுவரை இரண்டுதான். ஒன்று மேற்கிந்தியத் தீவுகளுக்கும் ஆஸ்திரேலியாவுக்குமிடையே நடைபெற்றது. இன்னொன்று ஆஸ்திரேலியாவுக்கும், இந்தியாவுக்கு மிடையே. இரண்டிலும் பங்கு பெற்ற ஒரே விளையாட்டு வீரர் பாபி சிம்ஸன் – முதல் 'டை' பந்தயத்திலே விளை யாடிய அவர், இரண்டாவது 'டை' பந்தயத்தில் ஆஸ்திரேலி யக் குழுவின் மேனேஜராகப் பொறுப்பேற்றிருந்தார்!

● நம் நாட்டின் உயர்ந்த விளையாட்டு அங்கீகாரமான 'அர்ஜுனா விருதை' முதலில் பெற்றவர் ஒரு கிரிக்கெட் வீரர்தான் – சலீம் துரானி. வருடம் 1961.

● 1983ல் உலகக் கோப்பையை இந்தியா வென்றபோது சச்சின் டெண்டுல்கர் என்ன செய்து கொண்டிருந்தார்?

''அப்போது எனக்குப் பத்து வயதுதான். என்ன செய் தேன் என்பது நினைவில்லை. ஆனால் என் அண்ணன் அஜீத் வெகு ஆர்வமாக அதை கவனித்தது தெரியும். இந்தியா ஜெயித்ததும் எங்கள் காலனிவாசிகளெல்லாம் தெரு வில் கூடி அதைக் கொண்டாடி யதும் நினைவிருக்கிறது!''



— குல்லூ

# திருவண்ணாமலையில் இன்னொரு தீபம்!



• விமலாவுக்குப் பாராட்டு

நம் மாநிலத்தில் அவ்வப்போது பரபரப்பாகப் பேசப்பட்டு, திடீரென்று சைலண்டாகி விடுகிற பல விஷயங்களுள் ஒன்று அறிவொளி இயக்கம். இதற்காக மத்திய அரசு ஒதுக்கும் பணம் ஆங்காங்கே கையாடல் செய்யப்படுவதாகவும் அடிக்கடி செய்தி வரும். 'இல்லை' என்று உடனே மறுப்பும் வரும்.

முன்னறிவிப்பின்றி ஏதாவது ஒரு மாவட்டத்துக்கு திடீர் விசிட் செய்து, அறிவொளி இயக்கம் எப்படி நடக்கிறது என்று பார்த்து வரலாம் என்று முடிவு செய்து, திருவண்ணாமலையைத் தேர்ந்தெடுத்து, கிளம்பினோம்.



• பெண்களுக்கு விழிப்புணர்வு வகுப்பு...

சிவசூரியன், மாவட்ட கலெக்டர்.

''ஏன் சார், இந்த அறிவொளி இயக்கத்தில் பாடம் சொல்லிக் கொடுக்கிறவர்கள், சம்பளம் இல்லை என்று பாதியில் ஓடி விடுகிறார்களாமே? அதனால் படிக்க வருகிறவர்களும் நின்று விடுவதாகச் சொல்லுகிறார்கள்? அப்போது, அரசு அளிக்கும் பணமெல்லாம்...'' என்று முதல் கேள்வியை கலெக்டர் முன் வைத்தோம்.

''சொல்லித் தருபவர்களுக்கு மாத வருமானம் கிடையாது என்பது அவர்களுக்கே தெரியும். இது தெரிந்து, சேவை மனப்பான்மையுடன் முன் வருபவர்களைத்தான் நாங்கள் பணியில் அமர்த்துகிறோம். சில இடங்களில், நீங்கள் சொல்வதுபோல், ஆர்வம் குறைந்து, ஆசிரியர்கள் நின்று



• சிவசூரியன்

விடுவது உண்டுதான். ஆனால் திருவண்ணாமலை மாவட்டத்தைப் பொறுத்தவரை இது மாதிரி சம்பவம் நடக்க வாய்ப்பே இல்லை. காரணம், நபர்களைத் தேர்ந்தெடுக்கும் போதே நன்கு விளக்கி, அவர்களது ஆர்வம் அறிந்து, துல்லியமாக எடைபோட்ட பின்தான் பணியில் அமர்த்துகிறோம். மாநிலத்திலேயே சிறப்பாக அறிவொளி இயக்கம் செயல்படும் இடங்களுள் இதுவும் ஒன்று."

"ஒரு வேளை, நீங்கள் தேர்ந்தெடுத்த நபர், பின்பு உற்சாகம் இழந்து விட்டால்?"

"யோசிப்பதே இல்லை. உடனே அவரைப் பணியிலிருந்து நீக்கிவிட்டு வேறு ஆளை அமர்த்திவிடுவோம்."

"பெரும்பாலும் வெறுமனே கையெழுத்துப் போடக் கற்றுத் தருவதுடன் அறிவொளி இயக்கப் பணிகள் நிறைவடைந்து விடுவதாகத்தானே பரவலாகச் சொல்கிறார்கள்?"

"அறிவொளி என்பது ஒருவித விழிப்புணர்வு. ஒரு கிராம அதிகாரியிடம்

• வகுப்பெடுக்கிறார் மாணிக்கம்

பேசப் பயந்த மக்கள், இன்று ஏதாவது பிரச்னை என்றால் யோசிக்காமல் நேரடியாக என்னிடமே வந்து பேசுகிறார்கள் தெரியுமா? தினம் தினம் எத்தனையோ பேர் ஆர்வமாக எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள். ஒரு பால்காரர், தானே விற்பனையைக் கணக்குப் போட்டு, பிறர் உதவியின்றி வரவு செலவை வகைப்படுத்திக் கொள்வதாக எழுதி இருக்கிறார். இது எங்களுக்கு மிகப் பெரிய வெற்றி. கையெழுத்துப் போடக் கற்றுத் தருவது ஆரம்பக் கட்டம். முழு எழுத்தறிவுதான் எங்கள் இலக்கு. அதைத்தான் செய்து வருகிறோம்."

"தினக்கூலி வேலை பார்ப்பவர்கள் தொடர்ந்து படிக்க வருகிறார்களா? அது ஒரு அநாவசியம் என்கிற மனோபாவம் இருக்குமே? எப்படி இதை மாற்றுகிறீர்கள்?"

"இதற்காகத்தான் மகளிருக்கும் இளைஞர்களுக்கும் 'திறன் வளர்க்கும் பயிற்சி' என்று ஒன்று ஏற்படுத்தி, மகளிருக்கு மாதம் 350 ரூபாயும் தொழிற் கல்விக் கட்டணமாக 150 ரூபாயும், பொருட்கள் வாங்க 150 ரூபாயுமாகத் தந்து தொழிற்கல்விப் பயிற்சி தருகிறோம். வருமானத்துடன் கல்வி என்றால் வர மாட்டார்களா என்ன!"

ஆரணியில் விமலா என்கிற பெண், சிறுமணிகளில் ராதா-கிருஷ்ணர் உருவத்தைச் செய்திருக்கிறார், தொழிற் பயிற்சி மூலமாக. அந்தப் பெண்ணை மேடை போட்டுப் பாராட்டியிருக்கிறது, அறிவொளி இயக்கம். விழாவில் விமலா, "எனக்குத் திருமணமாகிறதோ, இல்லையோ- அது பற்றிக் கவலை இல்லை. அறிவொளி மூலம் நான் கற்றுக் கொண்டவற்றை மற்றவர்களுக்குச் சொல்லித் தருவதிலேயே இனி என் வாழ்வைக் கழிப்பேன்!" என்று உருக்கமாகப் பேசியதை நினைவு கூர்ந்தார், பாடத்திட்டப் பிரிவுத் தலைவரான மாணிக்கம்.



* தொழிற்பயிற்சி...

அறிவொளி மையங்களைப் பார்வையிட முன்னறிவிப்பின்றி, திட்ட ஒருங்கிணைப் பாளர் ராஜரத்தினத்தை அழைத்துக் கொண்டு கிளம்பினோம்.

வழியில், அறிவொளியால் ஒரு பெண் ணுக்கு ஏற்பட்ட விழிப்புணர்ச்சி பற்றிச் சொன்னார் ராஜரத்தினம்.

வாசுகி என்ற 19 வயதுப் பெண்ணுக்கு வீட்டில் திருமணம் நிச்சயித்தார்களாம். அறிவொளியில் பயிலும் அப்பெண், "அரசு, பெண்ணுக்கான திருமண வயது 21 என்று நிர்ணயித்திருக்கும்போது, இப்போது நான் திருமணம் செய்து கொள்வதற்கில்லை" என்று சொல்லி, நிச்சயித்த திருமணத் தையே நிறுத்தி விட்டாராம்!

சேத்துப்பட்டு நிர்மலா நகர். ஒரு தொழிற் பயிற்சிக் கூட்டத்தில் 12-13 வயதுப் பையன்கள் ஸ்கிரீன் பிரிண்டிங், பைண்டிங் செய்து கொண்டிருந்தார்கள். பாடல் கேஸட் ஒன்றுக்கான முகப்பு அட்டை வடிவமைப்புப் பணியில் சிறுவர்கள் இளையராஜாவின் உருவத்தை ஸ்கிரீன் பிரிண்டிங்கில் கொண்டு வந்து கொண்டிருந்தனர். கேஸட் கம்பெனியே நேரடியாக இப்படி ஆர்டர் கொடுத்து, செய்து வாங்கிக் கொண்டு போகிறார் களாம்.



• காசும் தரும் கைவேலைப் பயிற்சி

மறுபுறம் ஜரூரான நோட்டுப்புத்தக பைண்டிங் பணி. மாதிரிக்கு ஒன்று எடுத்துப் பார்த்தோம். கத்துக்குட்டி வேலையாகத் தெரியவில்லை. அத்தனை செய் நேர்த்தி!

தவிர ஊதுபத்தி, மெழுகுவர்த்தி, ஒயர் கூடை செய்யும் பணிகளும் நடக்கின்றன. இதெல்லாம் தாய்க்குலப் பணிகள்.

"எல்லாம் நேரடியாகக் கடைகளுக்குப் போய்விடும். இம்மாவட்டத்தில் கைத் தொழில் பயிற்சி பெறுவோர் மட்டும் 2,200 பேர்!" என்றார் ராஜமாணிக்கம்.

வந்தவாசியில் ஒரு கிராமம், சென்னா வரம். நாம் அங்குள்ள அறிவொளி மையத் துக்குச் சென்ற சமயம் ஒரு சிறு கூட்டமும் பேசுவதற்கு இரண்டு வழக்கறிஞர்களும் வந்திருந்தார்கள்.

வழக்கறிஞர்கள் மேடைபோட்டு, மைக் பிடித்து சொற்பொழிவு ஆற்றாமல், மக்களு டன் ஒன்றாக அமர்ந்து, வந்தவாசி மண்ணின் மொழியில் அவர்களது சட்ட சம்பந்தமான சந்தேகங்களுக்கு விளக்கமளித் துக் கொண்டிருந்தனர்! பிறகு சட்ட சம் பந்தமான எளிய கையேடுகளை விநி யோகித்து, படிக்கச் சொல்கிறார்கள்.

தொடர்ச்சியாக ஒன்றியம் தோறும் ஏதாவது நிகழ்ச்சி நடந்து கொண்டே இருக்கும்படி ஏற்பாடு செய்திருக் கிறார் மாவட்ட ஆட்சியாளர் சிவசூரியன். கிராம மக்களின் படைப்பாற்றலை வெளிப்படுத் தும் விதமாக சுலோகன்கள் எழுதச் சொல்லி உற்சாகப் படுத்துகிறார்கள்.

நாம் கிளம்பும் முன் கடைசியாக சி.எம்.ஐ. மருத் துவ வளாகத்தில் இயங்கும் அறிவொளி மையத்துக்குப் போனோம். டாக்டர் மேரி விஜயா, பாடம் எடுத்துக் கொண்டிருந்த நர்ஸை நிறுத்தச் சொல்லி விட்டு மாணவர்களைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டார்.

"ஒரு பெண் கர்ப்பமாயிருக்குதான்னு கண்டு பிடிக்க என்னா சோதனை செஞ்சி, எப்படி கண்டு பிடிப்பீங்க?"

குசுகுசுவென கலந்துரையாடல்கள். லேசான வெட்கம். சட்டென்று, கற்றுத் தந்த ஆங்கில வார்த்தை நினைவுக்கு வராமல் மக்கர் செய்ய, எப்படியோ சமாளித்து ஒரு பெண் எழுந்தார்: "அதான் டாக்டரு, ஒண் ணுக்கு இருக்க சொல்லி, அத டெஸ்டு பண்ணிப் பார்க்கணும்!"

அப்படிப்போடு!

– வேணுஜி

# “ஜெயிக்கத்தான் வந்திருக்கிறோம்!”

ஆஸ்திரேலிய அணியின் கேப்டன் மார்க் டெய்லரை, மும்பையில் எப்போதும் பத்திரிகையாளர்கள் மொய்த்துக் கொண்டே இருக்கிறார்கள். ஐந்து மணி நேரம், ஆறு மணி நேரம் என்று பயிற்சி செய்தாலும் சற்று 'Gap'கிடைத்தால் அவரும் சளைக்காமல் பத்திரிகையாளர்கள் பக்கம் வந்து உட்கார்ந்து அரட்டை அடிக்கத் தொடங்கி விடுகிறார்.

“என்னங்க, உங்க டீம் இங்க வந்து இது வரைக்கும் ஒரு மேட்ச் கூட ஜெயிச்சதில்லையே?'' என்பதுதான் எல்லோரும் அவரிடம், வந்ததும் கேட்கிற கேள்வி.

டைலர் சளைக்காமல் சொல்கிற பதில்: ''இம்முறை கடுமையாக உழைப்போம். ஜெயிக்கத்தான் வந்திருக்கிறோம்!''




• பயிற்சியின்போது...

• மார்க் டெய்லர்

கொஞ்ச நேரம் நமக்குத் தனியாகப் பேசக் கிடைத்தவரிடம், இந்திய விக்கெட்டுக்கள் பற்றிக் கேட்டோம்.

“நிச்சயம் எங்கள் நாட்டு விக்கெட்டுகள் போல பவுன்ஸிங் விக்கெட்டாக இருக்காது என்று தெரியும். உங்கள் சென்னை பிட்ச் மட்டும் ஸ்பின் எடுக்கும் என்று சொன்னார்கள். ஆனால் இந்த முறை அதை மாற்றியிருப்பீர்கள் இல்லையா? வார்னே வருகிறாரே!'' என்று அட்டகாசமாகச் சிரித்தார்.

“சுகாதாரச் சூழ்நிலை சரியில்லை என்று சொல்லி தில்லியில் ஆட மறுத்து விட்டீர்களே! கல்கத்தா டெஸ்டுக்கு மட்டும் எப்படிச் சம்மதித்தீர்கள்? அங்கு சுற்றுச் சூழல் இன்னும் மோசமாயிற்றே?''

“அதையெல்லாம் போர்டு பார்த்துக் கொள்ளும். '87ல் ரிலையன்ஸ் கப் ஒன் டே அங்கு ஆடியிருக்கிறேனே! அப்படியொன்றும் மோசமாகத் தெரியவில்லை!''

“உங்கள் அணிக்கும், உங்கள் கிரிக்கெட் போர்டுக்கும் ஏதோ பிரச்னை என்று கேள்விப்பட்டோம். என்ன பிரச்னை?''

“அது சாதாரண சம்பளப் பிரச்னைதான். ஏன், நீங்கள் வந்து தீர்த்து வைக்கிற ஐடியா இருக்கிறதா? (சிரிக்கிறார்) அது சுமுகமாகத் தீர்ந்து விட்டது.''

“ஒரு நாள் போட்டிக்கு ஒரு அணி, டெஸ்டுக்கு ஒரு அணி என்று ஏன் இரண்டு அணிகளைக் கூட்டி வந்திருக்கிறீர்கள்?''

“ஸாரி. அது எங்கள் போர்டு தீர்மானித்த விஷயம். நான் கருத்து சொல்வதற்கில்லை!''

எல்லா ஊர் போர்டுகளும் செலக்ஷன் விஷயத்தில் சொதப்புகிற ஜாதிதான் போலும்!

வந்தபோது சந்தித்தோம். இந்தியாவுக்கு வந்தவருக்கு 'வெல்கம்' கூறிவிட்டு கல்கிக்குப் பேட்டி கேட்டோம். உடனடியாகச் சம்மதித்து, அவர் நம்முடன் பேசியதிலிருந்து...

கல்கி : உங்கள் சாதனைகள் மட்டும் தான் உலகுக்குத் தெரியும். நீங்கள் இப்படி வளர்ந்த கதையைச் சற்றுக் கூற முடியுமா?

# கை தட்டக் காத்திருங்கள்!



ஷேன் வார்னே... உலகின் அத்தனை பேட்ஸ்மன்களுக்கும் இந்தப் பெயர் ஒரு சிம்ம சொப்பனம். ஆஸ்திரேலியாவின் சொத்து, இந்த ஆஃப் ஸ்பின்னர். ஆடத் தொடங்கிய ஆறே வருடங்களில் முன்னூறு விக்கெட்டுகள் வீழ்த்திய உலக சாதனையாளர். இப்போது முதல் முறையாக இந்தியாவுக்கு ஆட வருகிறார் இந்த சூப்பர் ஹீரோ.

மும்பை விமான நிலையத்தில் வந்திறங்கியவர், டெஸ்ட் மாட்சுக்கு முன் சின்னதாக இந்திய போர்ட் லெவன் அணியுடன் நடந்த பயிற்சி ஆட்டத்துக்குப் பயற்சி செய்ய மைதானத்துக்கு

**வார்னே** : நான் முதலில் இங்கிலாந்து 'கவுண்டி'யில்தான் விளையாடிக் கொண்டிருந்தேன். பதினைந்து மேட்ச்களில் அப்போது தொண்ணூறு விக்கெட்டுகள் எடுத்தேன். இதனால் ஆஸ்திரேலிய 'ஏ' அணியில் இடம்கிடைத்தது. அந்த அணியின் சார்பாக 1991-ல் ஜிம்பாப்வே சென்று ஆட வாய்ப்புக் கிடைத்தது. அது எனக்கு மிக வசமான மேட்சாக அமைந்து விட்டது. ஒரே மேட்சில் ஏழு விக்கெட்டுகள் கிடைத்தன. என்னுடன் அந்த அணியில் மார்க் டெய்லர்; டாம் மூடி, ஸ்டீவ் வாஹ் ஆகியோரும் இருந்தனர். அந்த மேட்சுக்குப் பிறகு உடனடியாக எனக்கு ஆஸி அணியில் இடம்கிடைத்து விட்டது. சிட்னியில் இந்தியாவுக்கு எதிராக ஆடிய ஆட்டம்தான் என் முதல் ஆட்டம்.

**கல்கி** : அதற்குப் பின் அறுபத்தொன்பது டெஸ்டுகள் ஆடி விட்டீர்கள். இந்தியாவுடனான அந்த முதல் ஆட்ட அனுபவம் ஞாபகம் இருக்கிறதா?

**வார்னே** : மறக்கக்கூடிய அனுபவமா அது! என் வாழ்வின் கசப்பான ஒரு கால கட்டத்தையே அல்லவா அந்த மேட்ச் நிர்ணயித்து விட்டது? (சிரிக்கிறார்) உங்கள் சச்சினும் ரவி சாஸ்திரியும் அன்று ஆடிய பேய் ஆட்டம் இருக்கிறதே... என் பந்துகளை மிகக் கடுமையாகத் தண்டித்து விட்டார்கள்! 47 ஓவர்கள் போட்டு, 150 ரன்கள் கொடுத்து ரவி சாஸ்திரியை மட்டும்தான் என்னால் அவுட் ஆக்க முடிந்தது. அதற்குள் அவர் 205 ரன்கள் எடுத்து விட்டார்! 'போதுமடா சாமி' என்று என்னை அடுத்த டெஸ்டிலேயே தூக்கி விட்டார்கள்! எப்படி இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

**கல்கி** : மறுபடி எப்படி அணிக்குள் வந்தீர்கள்?

**வார்னே** : அந்தக் கசப்பான ஆட்டத்துக்குப் பிறகு நான் அடிலெய்டில் உள்ள

• படங்கள்: சாரி





''தேர்தல் முடிஞ்சதும் தலைவர் போக்கே அடியோடு மாறிப் போயிடுச்சு...''

''என்னப்பா ஆச்சு?''

''வாக்காளருக்கு நன்றி சொல்ல கூட்டத்துக்கு வந்திருந்த கூட்டணித் தலைவர்கள்கிட்ட எல்லாம் மேடைக்கு வாடகை வசூல் பண்ணிட்டார்!''

– எஸ். எஸ். பூங்கதிர்

ஆஸ்திரேலிய கிரிக்கெட் அகாடமிக்குச் சென்றேன். அங்கே, புகழ்பெற்ற முன்னாள் சர்வதேச சுழற்பந்து வீச்சாளர்களான மேலட், டெரிஜென்னர் போன்றோரிடம் கடுமையாகப் பயிற்சி மேற்கொண்டு, என் தவறுகளைக் கண்டறிந்து திருத்திக் கொண்டேன். இன்று ஏதோ நான் சுமாராகப் போடுகிறேன் என்றால் அவர்கள் கொடுத்த பயிற்சிதான் காரணம். பயிற்சிக்குப் பின் மீண்டும் எனக்கு வாய்ப்புத் தரப்பட்டபோது அதைத் தக்க வைத்துக் கொண்டேன்.

**கல்கி** : நீங்கள்தான் கபில்தேவின் 434 விக்கெட்டுகள் சாதனையை முறியடித்து, யாரும் தொட முடியாத 600 விக்கெட்டுகள் என்ற புதிய சாதனையைப் படைக்கப் போகிறீர்கள் என்று உங்கள் நாட்டவரான ரிச்சி பெர்னர் கூறியிருப்பது பற்றி...?

**வார்னே** : ஐயோ... சாதனைகளை முறியடிப்பது பற்றியெல்லாம் எனக்குக் கனவே கிடையாது. நான் ஆஸிக்காக ஆடுகிறேன். எங்கள் அணி வெற்றி பெற வேண்டும். அணியின் சாதனைகளே எனக்குப் போதும்!

**கல்கி** : இந்த டூரில் உங்கள் வெற்றி வாய்ப்பு எப்படி இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

**வார்னே** : இந்தியாவுக்கு வந்து இதுவரை நாங்கள் வென்றதில்லை என்பது உண்மைதான். ஆனால் இம்முறை வெற்றிக்கான சகல முன்னேற்பாடுகளுடனும் வலுவான அணியுடனும்தான் வந்திருக்கிறோம். முதல் டெஸ்ட்... உங்கள் ஊர் சென்னையில்தானே? நீங்கள் ஸ்பின்னர்களுக்குச் சாதகமாகவே பிட்ச் தயார் செய்வீர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். எனக்கு அது பிளஸ் பாயிண்டாக இருக்கும் அல்லவா? என்ன சொல்கிறீர்கள்...? (சிரிக்கிறார்)

**கல்கி**: பொதுவாகவே உங்கள் பந்துக்கு மிரளாமல், விளாசி ஆடுகிறவர்களுள் குறிப்பிடத்தக்கவர் டெண்டுல்கர். இந்த டெஸ்டை உங்களுக்கும் அவருக்குமான நேரடி மோதல் என்று சொல்லலாமா?

**வார்னே** : சொல்லிக் கொள்ளுங்களேன்! (சிரிக்கிறார்) நான் எப்படி சச்சினுக்குப் பந்து வீசத் தயாராக வந்திருக்கிறேனோ, அதே மாதிரி அவரும் என்னை எதிர்கொள்ளத் தயாராக இருப்பார். பார்க்கலாம்...

**கல்கி** : சென்னைக்கு முதல் முறையாக வரப் போகிறீர்கள். எங்கள் ஊரைப் பற்றி ஏதாவது தெரிந்து வைத்திருக்கிறீர்களா?

**வார்னே** : ஸ்டீவ் வாஹ் சொல்லி இருக்கிறார். ரொம்ப 'ஸ்போர்டிவ் க்ரௌட்' என்று. ரொம்ப உற்சாகப்படுத்துவார்களாமே? சென்றமுறை நாங்கள் வந்தபோது மயிரிழையில் வெற்றியைத் தவற விட்ட இடம் ('டை' மேட்ச்) சென்னைதான் என்பதும் என் ஆர்வத்தை அதிகப்படுத்தியிருக்கிறது. முதல் டெஸ்ட்டுக்கு உற்சாகமாக வருகிறேன். நான் கிரவுண்டில் நுழைந்ததும் கைதட்ட உங்கள் ரசிகர்களிடம் சொல்லிவையுங்கள்!

(நம் தோளில் தட்டி, சிரித்து, விடை கொடுத்தார் வார்னே!)

## அடுத்த இதழ்...

# 'கமகம' செட்டிநாடு ஸ்பெஷல்!



# இருதய கோளாறுகளுக்கு

## மாரடைப்பு, இரத்த அழுத்தம், இருதய ஓட்டை,

# தெய்வீக மூலிகை மருத்துவம்



இருதயக் கோளாறு ஆரம்ப நிலையாக நெஞ்சு படபடப்பு, லேசான நெஞ்சுவலி, கடின உழைப்பின்போது உடற்சோர்வு, மூச்சு வாங்குதல், லேசான மயக்கம், இரத்த அழுத்தம் அதிகரித்தல் (அ) குறைதல் போன்ற அறிகுறிகள் காணப்படும். இருதயத் தசைகள் தானியங்கும் தசை வகைகளினால் ஆனது. இவைகளின் இயக்கங்கள் முழுக்க, முழுக்க நரம்பு மண்டலக் கட்டுப்பாட்டினால் இயங்கும் தன்மை கொண்டது. சிறு நீரகங்களில் கோளாறு ஏற்படினும், நரம்புப் பகுதியில் கோளாறு ஏற்படினும், இரத்தம் தூய்மையை இழப்பதாலும், இரத்த நாளங்கள் சுருங்குவதாலும் இருதய அடைப்பு (மாரடைப்பு) இரத்த அழுத்தம் இருதயத்தில் ஓட்டை போன்ற கோளாறுகள் உண்டாகின்றன. தூய்மையான உணவு, போதிய உறக்கம், அதிக உடலுழைப்பினை தவிர்த்தல், கடுமையான உடற்பயிற்சி, தேவைக்கு மீறிய உணவு, அதிக கொழுப்பு சத்துள்ள உணவு வகைகள் போன்றவைகளை தவிர்த்தல் மூலமும் உடலுக்கு நல்ல எதிர்ப்பு சக்தியினை அளித்து இரத்த நாளங்களில் அடைபட்டிருக்கும் கொழுப்புப் பொருட்களை கரைத்து வெளியேற்றவல்ல தெய்வீக மூலிகைகளான வேப்பிலை, வில்வம், அத்தி, துளசி, அருகு போன்ற மூலிகைகளை எவ்வாறு உபயோகிப்பது என்பது பற்றிய ஆலோசனைகளை கீழ்க்கண்ட முகவரியிலும், முகாமிலும் டாக்டரிடம் நேரில் பெறலாம்.




*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : **Dr.C.K.M.குருபரன் & Dr.C.K.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

**சென்னை கிளை** : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8

✆ : 6424285, 6427638

Singapore Enquiry : Mrs. Renuka, Blk 101, #04,-176, Jurong East Street-13, Singapore - 600 101. ✆ : 0065 - 5621218

## 1998 வைத்தியரிடம் நேரில் ஆலோசனை/மருந்தினைப் பெற முகாம் விவரம். (முக்கிய பண்டிகை தினங்களிலும் முகாம் உண்டு)

| | | | |
|---|---|---|---|
| 2-ந் தேதி | - வேலூர் (N.A.) | : பிற்பகல் | 1 to 2 மணி வரை ஹோட்டல் கன்னா (கங்கா), 16, ஆஃபீசர்ஸ் லைன், ✆ : 0416 / 23060. |
| 2-ந் தேதி | - காஞ்சிபுரம் | : மாலை | 5 to 6 ராஜம் லாட்ஜ், பஸ் நிலையம் அருகில் 9, காமராஜர் தெரு. ✆ : 04112 / 22519. |
| 1,3,10,17,18,19,20,27,28 ந்தேதி | - சென்னை | : காலை | 9 to 2 மேலே உள்ள சென்னை முகவரியில், ✆ : 044 / 6424285, 6427638. |
| 4-ந் தேதி | - கடலூர் (S.A.D.) | : காலை | 9 to 11 ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், ✆ : 04142 / 30707, 30717 |
| 4-ந் தேதி | - விழுப்புரம் | : பிற்பகல் | 2 to 3 ஹோட்டல் ஆனந்தா, பஸ்நிலையம் எதிரில், ✆ : 04146 / 22962. |
| 4-ந் தேதி | - திருவண்ணாமலை | : மாலை | 5 to 6 ராதா லாட்ஜ் பஸ் நிலையம் எதிரில் ✆ : 04175 / 22536. |
| 9-ந் தேதி | - பெங்களூர் | : காலை | 11 to 12.30 ஹோட்டல் பிராட்வே, கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374 |
| 9-ந் தேதி | - ஓசூர் | : மாலை | 3 to 4 சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், ✆ : 04344 / 22899. |
| 9-ந் தேதி | - கிருஷ்ணகிரி | : மாலை | 5 to 6 அமராவதி லாட்ஜ், ✆ : 04343 / 22120. |
| 12-ந் தேதி | - சேலம் | : காலை | 11.30 to 12.30 ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில், ✆ : 0427 / 449333. |
| 12-ந் தேதி | - ஈரோடு | : மாலை | 4 to 5 ஹோட்டல் ஆக்ஸ்ஃபோர்டு, பஸ் நிலையம் எதிரில், ✆:0424 / 226611 / 12 / 13 / 14/15/16/17/18 |
| 13-ந் தேதி | - கோயம்புத்தூர் | : காலை | 9.30 to 12.30 சேரன் பேலஸ் லாட்ஜ் சாந்தி தியேட்டர் பின்புறம் ✆ : 0422 / 302211, 302220 |
| 14-ந் தேதி | - மதுரை | : காலை | 9 to 11 ஹோட்டல் கிரஸண்ட் சென்ட்ரல், மேலப் பெருமாள்-மேஸ்திரி தெரு, ✆ : 0452 / 743941 |
| 14-ந் தேதி | - தஞ்சாவூர் | : மாலை | 5 to 6 அசோகா லாட்ஜ், ✆ : 04362 / 30021 / 30022 |
| 15-ந் தேதி | - திருச்சி | : காலை | 9 to 11 ஹோட்டல் ஆனந்த், சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில், ✆ : 0431 / 460545. |
| 15-ந் தேதி | - நாமக்கல் | : பிற்பகல் | 2.30 to 3.30 ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, ✆ : 04286 / 20433 |
| 22-ந் தேதி | - தர்மபுரி | : காலை | 9 to 10 ஸ்ரீ மாதேஸ்வரா லாட்ஜ், ✆: 04342 / 60226. |
| 22-ந் தேதி | - திருப்பூர் | : பிற்பகல் | 2 to 3 ராமகிருஷ்ணா லாட்ஜ், ✆ : 0421 / 740418. |
| 22-ந் தேதி | - உடுமலைபேட்டை | : மாலை | 6 to 7 குறிஞ்சி லாட்ஜ், பஸ் நிலையம் எதிரில் ✆ : 04252 / 24353. |
| 23-ந் தேதி | - திண்டுக்கல் | : காலை | 9 to 10.30 ஹோட்டல் குறிஞ்சி, பஸ் நிலையம் பின்புறம் ✆:27017. |
| 23-ந் தேதி | - தூத்துக்குடி | : மாலை | 5 to 6 ஹோட்டல் ஆஸ்வின், தேவர் புரம் ரோடு, ✆ : 0461 / 327780 |
| 24-ந் தேதி | - திருநெல்வேலி | : காலை | 8.30 to 11 ஹோட்டல் ஸ்ரீ சித்தாபதி, மதுரை ரோடு, ✆ : 0462 / 333312. |
| 24-ந் தேதி | - நாகர்கோவில் | : பிற்பகல் | 2 to 3 ஹோட்டல் சரண்யா, மீனாட்சிபுரம், ✆: 04652 / 25689. |
| 25-ந் தேதி | - விருதுநகர் | : காலை | 9 to 10 அண்டன் லாட்ஜ், மதுரை ரோடு, ✆ : 04562 / 45537. |
| 25-ந் தேதி | - கரூர் | : பிற்பகல் | 2.30 to 3.30 மணி வரை அரசி லாட்ஜ், ஜவகர் பஜார், ✆ : 63763. |




**தகவல்**: டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 23 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு M.O. அல்லது D.D. அனுப்பவும்.

7-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

# ஒவ்வொரு மங்கையின் வெற்றிக்குப்பின்னால் ஒரு நிரந்தர சக்தி! சக்தி காஸ்.




ஒவ்வொரு மங்கைக்கும் தான் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் வெற்றிகரமானதாக இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பு இயல்பானது. அதற்கு நேசக்கரம் நீட்டுகிறது ஒரு நிரந்தர சக்தி. அது தான் **சக்தி காஸ்**

இந்தியாவின் மிகப்பெரிய தனியார் துறை L.P.G. நிறுவனம் **சக்தி காஸ்.** இலட்சக்கணக்கான குடும்பங்களில், எல்லா நேரங்களிலும் உறுதுணையாக நின்று இல்லத்தரசிகளை **அன்னபூரணிகளாக** விளங்கச்செய்வது **சக்தி காஸ்**

உங்களுடைய இல்லத்தில் **சக்தி காஸ்** இருக்கிறது என்றால் உங்களிடம் எப்போதும் **நிரந்தர சக்தி** இருக்கிறது.




**தக்ஷின் சக்தி**

- உடனடி இணைப்பு
- உடனடி ரீஃபில்
- அரசாங்க காஸ் விலைக்கு சமமாக ஆயுள் முழுவதும் ரீஃபில்கள் கொடுக்கப்படும்.
- இவை அனைத்தும் உங்களுக்கு ரு. 4,900/-க்கு மட்டுமே.

**ஜனதா சக்தி**

சக்தி காஸ் இணைப்பை ரு. 1,350/- க்குப் பெற ஒரு அரிய வாய்ப்பு.

**• அரசாங்க காஸ் விலைக்கு ஆயுள் முழுவதும் ரீஃபில்.**
**• தக்ஷின் சக்தி திட்டத்தில் மட்டுமே.**

## ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி லிமிடெட்




**மண்டல அலுவலகம் :** 5/18, தேஸ் அபார்ட்மெண்ட்ஸ், 1வது மெயின் ரோடு, கஸ்தூர்பாய் நகர், அடையார், சென்னை - 20. போன் : 4420970 போன்/ஃபேக்ஸ் : 4430678

**தலைமை அலுவலகம் :** வீனஸ் பிலாசா, [redacted]ராபாத் - 16. போன் : 869416/17/18/19. Fax : 040 814411.

**ரீஜனல் ஆஃபீஸ் :** 142, II மெயின், Ist ப்லாக், RMV II ஸ்டேஜ், டாலர்ஸ் காலனி, பெங்களூர் - 94. போன்/ஃபேக்ஸ் : 080 3414490,3414491

PERCEPT/H

**இந்தியாவின மிகப்பெரிய தனியார் எல்.பி.ஜி. நிறுவனம்**

காதில் விழுந்தவை:



**கோ**வை குண்டு வெடிப்பினால் ஏற்பட்ட பொதுமக்களின் அதிருப்தி, கலைஞரைக் கவலை கொள்ளச் செய்துள்ளது. சரிந்து கொண்டிருக்கும் இமேஜைத் தூக்கி நிறுத்த ஆட்சியிலும், கட்சியிலும் பல அதிரடி மாற்றங்களைத் தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு அமுல்படுத்த எண்ணியுள்ளதாக கோட்டை மற்றும் அறிவாலய வட்டாரங்கள் கிசுகிசுக்கின்றன. உள்துறைச் செயலாளர் பூரணலிங்கம் ஆர்ப்பாட்டம் ஏதுமின்றி அமைதியாகச் செயல்படுபவர். காவல் துறையிலும் ரகசியப் புலனாய்வுத் துறையிலும் சட்டம் ஒழுங்குத் துறையிலும், சென்னையிலும் கோவையிலும் புது ரத்தங்களைப் பாய்ச்சும் யோசனையில் இருக்கிறாராம் உள்துறைச் செயலாளர்! இதற்குத் தலைமைச் செயலாளர் ஆதரவும் உண்டு எனத் தெரிகிறது. கோவைக்கென தனி 'செல்' போட்டு தலைமைச் செயலகத்திலிருந்து கண்காணித்துக் கொண்டிருக்கிறார்களாம். கோவையில் நவம்பர் மாதம் நடந்த காவலர் செல்வராஜ் மரணத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட கலவரங்களை விசாரித்த கோகுலகிருஷ்ணன் கமிஷன், தனது இடைக்கால அறிக்கையை விரைவில் கொடுக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. குறிப்பாக அந்தக் கலவரங்களின்போது காவல் துறையில் சிலர் செயல்பட்ட விதம் குறித்துக் கடுமையான கண்டனங்கள் இருக்கும் என்றும் சொல்கிறார்கள். அதன் அடிப்படையில் கோவைக் காவல் துறையை அடியோடு புரட்டிப் போடவும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று பேச்சு.

## அதிரடி மாற்றம், பராக்!

மைனாரிட்டிகளுக்கு ஆதரவு என்பது வேறு; அதற்கும், முஸ்லிம் தீவிரவாதிகளுக்கும் முடிச்சுப் போடக் கூடாது. எந்தக் காரணம் கொண்டும் குண்டுடன் விளையாடும் தீவிரவாதிகளுக்கு இடமே கொடுக்கக் கூடாது என்பதில் முதல்வர் உறுதியாக இருக்கிறார். முதல்வரின் இந்த எண்ணத்தைச் செயல்படுத்தும் விதமாக, இன்ஸ்பெக்டர் மட்டத்திலிருந்து அதிகாரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு கோவைக்கு அனுப்பப்பட இருக்கிறார்களாம்.

**தே**ர்தலில் அமோக வெற்றி பெற்றாலும் சரி, சாதாரண வெற்றியாக இருந்தாலும் சரி, 'செயல்படாத' சில அமைச்சர்களை மாற்றுவது என்பதும் தீர்மானிக்கப்பட்டு விட்டதாம்.

மந்திரி சபையில் மாற்றம் இருக்கும் என்பதை மோப்பம் பிடித்துள்ள – இளம் எம்.எல்.ஏக்கள், இந்த முறையாவது "தலைவர் நமக்கு வாய்ப்புக் கொடுப்பாரா" என்று ஏங்கத் துவங்கியிருக்கிறார்கள். சட்டமன்ற பட்ஜெட் கூட்டத் தொடர் வேறு துவங்க இருப்பதால் அதற்கு முன்பாகவே சில மாறுதல்களை முதல்வர் செய்வார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

● ராமதாஸ் திடீரென்று உண்ணாவிரதம் துவங்கியது ஏன்? அம்பேத்கார் சிலை அவமானப்படுத்தப்பட்டது குறித்து விசாரித்து உண்மைக் குற்றவாளிகளைக் கண்டு பிடிக்க வேண்டுமென்பது அவர் நோக்கமாக இருந்தாலும் வேறு காரணங்களும் சொல்கிறார்கள். வேலூர், சிதம்பரம், காட்டுமன்னார்கோவில் பகுதிகளில் தாழ்த்தப்பட்ட மக்களிடையே திருமாவளவன் தலைமையிலான 'விடுதலை சிறுத்தைகள்' என்ற அமைப்பு மிகவும் செல்வாக்குப் பெற்று வருகிறது. ஜாதி ரீதியான மோதல்கள் என்றால், "எதற்கும் தயார்" என்று செயல்படுகிறார்களாம் விடுதலை சிறுத்தைகள். ஆகையால் முன்பு போல், "வெறும் முனையில்" அவர்கள் இல்லையாம். ஆகவே எதாவது மோதலென்று வந்தால் கிராமங்களில் இருக்கும் பா.ம.க. ஆட்கள் பாதிக்கப்படுவார்களாம். அப்புறம் கடலூர், விழுப்புரம் மாவட்டங்களில் உள்ள கிராமங்களில் அமைதியே இருக்காது. ஆகவே தொடர் மோதல்களைத் தவிர்ப்பதற்காகவும் தலித்துகளுக்கும் வன்னியர்களுக்கும் நல் இணக்கம் உண்டு என்று உணர்த்துவதற்காகவும்தான் அந்த தடாலடி உண்ணாவிரத மாம். கடைசியில் அம்மா ஜூஸ் கொடுத்து முடித்து வைத்திருக்கிறார். ◉

— தில்லப்பா

9

"நட!"

சிவப்புத் தொப்பி மலங்க மலங்க விழித்தான்; ஏதும் அறியாதவன் போல.

அவன் முதுகில் துப்பாக்கியின் முனை வலிக்கும் அளவு அழுந்தியிருந்தது. சுதந்தரமாக இயங்க இயலாத அளவு ஜீவா வலுவாக அவன் புஜத்தைப் பற்றியிருந்தான்.

"என்னை விடுங்கள் சார். வலிக்கிறது!"

"நடிக்காதே மேன்! நீ யார் என்று எனக்குத் தெரியும்! நட 'கழுகு' மகனே!"

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ஏதும் புரியவில்லை. ஏதோ தவறு...! தவறுதலாக என்னைப் பிடித்திருக்கிறீர்கள்!"

"ஷட்டப்! மேலே ஒரு வார்த்தை பேசினாலும், என் துப்பாக்கி பேசும்! சுட மாட்டேன் என்று நினைக்கிறாய் போலும்! என்னைப் பின்தொடரத் தெரிந்த உனக்கு என்னைப் பற்றியும் தெரிந்திருக்குமே. கூசாமல் சுட்டு விடுவேன். துப்பாக்கியில் பல வித்தைகள் தெரியும். சாம்பிள் பார்க்கிறாயா?"

அவன் முதுகில் பதிந்திருந்த துப்பாக்கியை மெல்ல இறக்கியவாறே சொன்னான். ஜீவாவுக்கு நிறைய நரம்புகள் அத்துப்படி.

குறிப்பிட்ட இடம் வந்ததும், துப்பாக்கி முனையால் வலுவுடன் நிமிண்டினான்.

'சுரீர்' வலியில் துள்ளிக் குதித்தான் சிவப்புத் தொப்பி!

"மின்சாரம் தாக்கியது மாதிரி இருந்திருக்குமே! வலியின் அளவை 'டால்' கணக்கில் சொல்வார்கள். நீ அனுபவித்தது எத்தனை டால் தெரியுமா?" மனோதத்துவம் அறிந்த ஜீவாவின் தேர்ந்த பய ஊசிகள்....

"நீ ஒத்துழைத்தால் நான் ஏன் செய்யப் போகிறேன்... உன் பெயர் என்ன?"

"அ... அஷோக்..." என்றான் மூச்சு வாங்க. "எங்கே... எங்கே சார் செல்ல வேண்டும்?"

"உள்ளே என் அறைக்குத்தான்!"

ரிசப்ஷனுக்குள் பிரவேசித்தார்கள். காலையின் கலகலப்பு அங்கே. அஷோக்கின் முகம் மிக லேசாக பிரகாசமானதைக் கவனித்தான் ஜீவா. நியூஸ் பேப்பர் மறைவிலிருந்த தன் துப்பாக்கியால் நிரடியபடியே முறுவலித்தான்!

"கூவலாம் என்று கனவு காணாதே! உன் வாய் ஒரு வார்த்தை உதிர்த்தாலும்... நீ தொலைந்தாய்! ஜாக்கிரதை அஷோக். ஓர் அடி தப்பிதமாக வைத்தாலும்..."

அச்சுறுத்தும் வார்த்தைகள்; ஆனால், பரவசப் புன்முறுவலுடன்; நட்பு பாராட்டும் முகமுடன்; பாசமுடன் இழைந்த 'இனிய' நெருக்கமுடன்... நடிகன் ஜீவா!

மாடிப்படிகள் வந்ததும், ஜீவா தயங்கினான். ஆபத்து. தடுக்கும் படிகள். இடக்கு ஏதும் செய்வான் அஷோக். பறவை தப்பித்துப் பறந்து விடலாம்.

'க்ளிக்' என்ற சப்தம்! அஷோக் வியர்த்தான். அவனுக்குப் புரியாமலா இருக்கும்.... ஜீவா, துப்பாக்கியின் சேஃப்டி காட்ச் விடுவித்திருந்தான்! அவன் விரல் டிரிக்கர் மீது....

லிஃப்டில் பயணம். அஷோக் ஒழுங்காகவே உடன் வந்தான்.

அறை சாத்தியே இருந்தது. சாவியை எடுத்து அவனிடம் தந்தான். கதவின் இரு புறமும் சாவி நுழைத்துத் திறக்கக்கூடிய வகை பூட்டு அது.

"உம் திற!"

திறந்தான். உள்ளே சென்றார்கள்.

"திரும்பு... இப்போது அறைக் கதவைப் பூட்டு... சாவியை மேசை மேல் வை... ஆல் ரைட்... கைகளை மேலே தூக்கு!"

எல்லாம் செய்தான். இம்மியும் விலகாத துப்பாக்கிக் குறி...

அஷோக்கிடம், மின்னல் வேகத்தில் சோதித்தான். ஒரு துப்பாக்கி, கத்தி, கூரிய ஊசி என, சிரமம் தராமல் சிக்கிய சமாசாரங்கள்!

"ப்சு! ஓர் 'அப்பாவியிடம்' எவ்வளவு ஆயுதங்கள்!" என்றான் வரண்ட சிரிப்புடன்.

# மின்சாரமலராம்



# வா!

பத்மா ரவிசங்கர்

தொடர்ந்து ஜீவா உத்தரவிட்டான். அஷோக் செவ்வனே செய்தான். வாட்சைக் கழற்றிக் கீழே வீசினான். ஒரு நாற்காலியை நகர்த்தினான். சுவரைப் பார்த்த படி அமைத்தான். பின், அதில் அஷோக் உட்கார்ந்தான்.

ஜீவா கையில் நீளமான கயிறு. பின்புறமாக அணுகினான். கயிற்றை வீசினான். கட்டத் தொடங்கினான்... இறுகப் பிணைத்ததும் சேரைத் திருப்பினான்.

எதிரிலிருந்த சோஃபா ஒன்றில் ஜீவா. இன்னமும் அவன் கையில் அந்தத் துப்பாக்கி. கூடச் சித்தமாக....

"இப்போது சொல். நீ யார்? எந்த நாட்டு உளவாளி? அல்லது கழுகுக் குழுவினனா?"

அஷோக் பதில் சொல்லவில்லை. அப்பாவி போல் விழித்தான்.

"நீ ஒத்துழைக்க மாட்டாயா? நீ பாடாமல் நான் விட மாட்டேன்!"

ஜீவா இமைக்கவில்லை. ஊடுருவும் அவன் பார்வையில் யாதொரு உணர்ச்சியுமில்லை. சன்னமாகப் பேசினான்.

"உன் கழுகுக் குழு என்னை மிரட்டியிருக்கிறது. என் வீட்டை வேவு பார்த்திருக்கிறது. குடும்பத்திற்கு குறிவைத்திருக்கிறது. என் குடும்பம் முன், மற்றதெல்லாம் எனக்குத் தூசு. அவர்களுக்காக எதுவும்... எதுவும் செய்வேன்! உயிரை விடப் பெரிது எது? உயிர் இருக்கும் வரை தான் கொள்கை, பணம், பற்று, எல்லாம்.... வீணாக உயிரை விடாதே அஷோக்...!"

மறுபடியும் மௌனம். என்ன அழுத்தம்! உண்மை சொல்ல மாட்டாயா? என்னடா உன் வரட்டுக் கொள்கை? உன் வெத்து தீவிரவாதம்? ஓக்கே. துப்பாக்கி உயர்ந்தது. எண்ணிக்கையில், ஒரு கழுகு காலி. அஷோக்கின் புருவ மத்தியைக் குறி பார்த்தது. விசையை அழுத்தினான்.

டுமீல்!

ஆ-ஆ!

அஷோக்கின் பிளந்த வாய்; துவண்ட தலை; பெருகிய ரத்தம்...

ஐயையோ! ஜீவா! சுட்டு விட்டீர்களே! வேறு வழியில்லை ஷீலா.

இது கொலை! காலமெல்லாம் நீங்கள்

ஜெயிலில்! சே! என்ன காரியம் செய்து விட்டீர்கள்! எங்களை மறந்து, எப்படிச் செய்யலாம்? இனி என்ன செய்யப் போகிறேன்... நீங்கள் இல்லாமல்...

ஜீவா தலையைக் குலுக்கிக் கொண்டான். சே! வெறும் கற்பனை! எவ்வளவு 'மாறி' இருக்கிறேன்...! மனத்தில் தளைகள். கைகளில் தயக்கம். உண்மை வரவழைக்க எவ்வளவோ வலி மிகும் வழிமுறைகள். அதற்கும் இன்னும் நேரம் இருக்கிறது. முதலில் பேச்சு.

''கழுகுகளின் தலைமையகம் எங்கே? உன் தலைவன் யார்? என்னுடன் எதற்காக விளையாட்டு?''

''கழுகுகளா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றே புரியவில்லை!''

''ஆஹா! உன் நடிப்பில் ஆஸ்கார் தரம்! ஆனால் அதற்கான பரிசு மரணம்தான்! அப்புறம் எதற்கு இந்த ஆயுதங்கள்... சொறிந்து கொள்ளவா?''

''என் பாதுகாப்பிற்கு! முறையாக லைசென்ஸ் உள்ள துப்பாக்கி அது.''

''போகட்டும்! எங்கே உன் கூட்டாளி?''

''கூட்டாளியா?'' என்று வியந்தான்.

''யாரா? அந்த முறுக்கு மீசை ஆசாமி தான்! இப்போது அவன் எங்கே?''

''அவன் யாரோ? எவனோ... எனக்கு எப்படித் தெரியும்?''

''சரி. நானே சொல்கிறேன் அஷோக்! முதலில், உன் பார்ட்னர் உன்னைத் தேடுவான்! பிறகு, இங்கே இருப்பாய் என்று புரிந்திருக்கும். எந்த நேரமும், உன்னை விடுவிக்க இங்கே வருவான்! பூட்டிய அறை, முறுக்கு மீசைக்கு ஒரு பொருட்டில்லை! இந்த ஹோட்டலில்தான் உங்கள் ராச்சியமாயிற்றே! கேட்டதும் கிடைக்கும் மாஸ்டர் கீயுடன் வருவான்! துப்பாக்கி தூக்கிக் கொண்டும் வருவான்! வரட்டும். நான் காத்திருக்கிறேன்...'' கண் சிமிட்டினான்.

''ஆல்ரைட் ஜீவா. முறுக்கு மீசைதான் என் பாஸ். நான் ஒரு சாதாரணன். அவன் சொன்னதால் பின்தொடர்ந்தேன். எல்லா விவரமும் அவனிடம்தான். நான் உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். எங்கே உன் நண்பன்? உன்னை விட்டு ஓடி விட்டானா?''

ஜீவா அமைதியானான். ஆமாம். குப்தா எங்கே? சுற்றிலும் பார்த்தான். அறையில் அவன் பெட்டியையும் காணோம்! அவன் சொல்லை மீறிய கோபத்தில் கொல்லைப்புறமாக வெளியேறி இருக்க வேண்டும். ஜீவா எக்கேடோ போகட்டும்; 'ரகசிய ப்ராஜக்ட்' முக்கியம் என்று நினைத்துப் போயிருக்க வேண்டும். மாறுவேடத்தில் கம்பி நீட்டியிருப்பான் போலும்.

அஷோக்கைப் பிடித்து வைத்துள்ளதால் கழுகுகளின் கோபம் கிளர்ந்திருக்கும். அடுத்து முறுக்கு மீசையும் வந்து பிடிபடுவான். இவர்களை வைத்துத்தான் விளையாட வேண்டும் – கவனமாக! அதற்கு முன் –

போனில் ஷீலாவைப் பிடித்தான்.

''ஹலோ ஷீலா! நான்தான்! அதிகம் அவகாசமில்லை. நான் சொல்வதைக் கவனமாகக் கேள்.''

''சொல்லுங்கள் ஜீவா!''

''உடனே நம் கமிஷனர் சாமுவேலுக்குப் போன் செய்து விஷயத்தைக் கோடிட்டுக் காண்பித்துப் பாதுகாப்பிற்கு வீட்டின் வாசல் ஒரு கான்ஸ்டபிள் முடியுமா என்று கேள். சில நாட்களுக்குத்தான். அப்புறம் அனாவசியமாக வெளியே எங்கும் செல்லாதே. நான் சொல்லும் வரை கௌதமை ஸ்கூலுக்கு அனுப்பாதே.''

''பிரச்னை ஏதும் எதிர்பார்க்கிறீர்களா?''

''இல்லை ஷீலா. எதற்கும் ஒரு எச்சரிக்கை ஏற்பாடு. அவ்வளவே. பிறகு பேசுகிறேன். பை ஷீலு டார்லிங்.''

அப்போது அறைக்கு வெளியே காலடி ஓசை! ஜீவா நிமிர்ந்தான்.

''சொன்ன மாதிரி முறுக்கு மீசை வருகிறான், பார்!''

ஜீவா துப்பாக்கியால் குறிபார்த்தான். கதவில் சாவி நுழைக்கும் ஒலி. பூட்டின லீவர் விடுபட்டது.

''பயப்படாதே! உன் நண்பனை உடனே சாக அடிக்க மாட்டேன்! முதலில் எந்தப் பகுதியில் சுடலாம்...?''

படீரென்று கதவு திறந்தது. ஜீவா

---

**''தலைவர் ஏன் படுகோபமா இருக்காரு?''**

**''கொள்கை விளக்கப் பொதுக் கூட்டம் என்பதற்குப் பதிலாக 'கொள்ளை விளக்கப் பொதுக் கூட்டம்'னு போஸ்டர் அடிச்சுத் தொலைச்சுட்டாங்களாம்!''**

**– எல். கோபாலகிருஷ்ணன்**



அதிர்ச்சியுடன் பார்த்தான்.

வாசலில் புன்னகையுடன் ஆத்மா! இந்திய உளவுத் துறை தலைவர்!

"பாஸ்! நீங்களா?"

"நானேதான்! எப்படி இருக்கிறாய்? பார்த்து, எவ்வளவு வருடங்கள்!"

தான் நினைத்ததை விட குப்தா புத்திசாலி. வெளியே சென்று உதவிக்குத் தலைவரையே அனுப்பி விட்டானே. 'எங்கள் உளவுத் துறை எப்படி!" என்று பெருமையுடன் அஷோக்கைப் பார்த்தான்.

"குப்தா தகவல் தந்தானா?"

"ஆமாம்."

"அவன் ஒரு கல்லுளிமங்கன்! நீங்களும் உடன் வந்திருப்பதை என்னிடம் அவன் சொல்லவே இல்லையே!" என்ற ஜீவா இறுக்கம் தளர்ந்தான். இனிக் கவலை இல்லை. தலைவர் அருகில். எல்லாம் அவர் பார்த்துக் கொள்வார். துப்பாக்கியை மேசை மீது வைத்தான். வாசல் கதவைச் சார்த்தி விட்டு வந்தான்.

"இவன் அஷோக். கழுகுக் குழு தீவிரவாதி! வசமாக மாட்டிக் கொண்டான்! சில 'சிகிச்சைகள்' கொடுத்தால் பேசத் தொடங்கி விடுவான்!"

ஏதோ பேசத் தொடங்கிய அஷோக்கை கையமர்த்திய ஆத்மா, "ஷட்டப்! உன்னிடம் பிறகு வருகிறேன்! நல்ல வேலை செய்தாய் ஜீவா! இப்போது பேசு. சென்னையிலிருந்தே தொடங்கு. எல்லாம் விவரமாகச் சொல்."

"ஒரு தீவிரவாதக் கழுகின் முன் எப்படி என்று யோசிக்கிறேன்."

"அவ்வளவுதானே?" என்று எழுந்தார் ஆத்மா. "இவனைப் போய் மறந்தேன் பார்!" பாக்கெட்டிலிருந்து கர்ச்சீப் எடுத்தார். "இவன் உன்னைப் பின்தொடர்ந்தானா?" அஷோக்கின் மூக்கின் மேல் கர்ச்சீப்பை வைத்து லேசாக அழுத்தினார். "இன்னும் சில மணி நேரங்களுக்கு மயக்கந்தான்!" அஷோக்கின் தலைசாய்ந்தது.

இருவரும் எதிரெதிராக உட்கார்ந்தார்கள். ஆத்மா இன்னமும் ட்ரிம்மாகவே இருந்தார். படிய வாரியத் தலை. பிரஷ் மீசை. பரவலாக நரை. கூடியிருக்கும் நெற்றி சுருக்கம். அதே ஊடுருவும் பார்வை; மனதை சற்றும் தெரிவிக்காத க்ரானைட் முக ஆத்மா! இந்திய உளவுத் துறையின் தூண்!

"குப்தா எங்கே பாஸ்?"

"அவனை ஒரு வேலையாகப் பணித்திருக்கிறேன். யூ ஸ்டார்ட் ஜீவா!"

ஜீவா சொல்லத் தொடங்கினான்.



"என் வீட்டில குடியிருக்க ஆசைப்படறீங்க, சரி. ஆனா ஏற்கெனவே குடியிருந்த வீட்டை ஏன் காலி பண்ணிட்டீங்க?"

" 'வாடகை, வாடகை'ன்னு கேட்டு அந்தாளு நச்சரிப்பு தாங்க முடியலை சார்...!"

- சீர்காழி வி. ரேவதி

---

முதலில் வந்தது அகால மிரட்டல். அவனையும் குடும்பத்தையும் நினைத்தபோது தீர்த்து விடுவானாம். கார் ஸ்டிக்கரில் மிரட்டல். ஜீவா உயிர் யார் கையிலாம்? தெரியாது. வீட்டை வேவு பார்த்த குறுந்தாடி; வேண்டும் போது பின்தொடரவும் செய்தான். எவனோ ஒரு கோழையால் வீழ்த்தப்பட்ட சீஸர். ஏதோ பேச வேண்டும் என அழைத்த குறுந்தாடியின் சாவு. ஜீவா துப்பாக்கியில் குப்தா செய்த கொலை.

ஆத்மா இடைவெட்டி, "குறுந்தாடியை உன் துப்பாக்கியால் தீர்த்தது குப்தா! அப்படித்தானே?" என்று இன்னொரு முறை கேட்டார்.

"ஆம் ஆத்மா. உங்களுக்குத் தெரிவித்ததாகவும் சொன்னான்."

ஆத்மா மௌனமாகத் தலையசைத்தார்.

"குப்தாவுக்குத் தீவிர நாட்டுப்பற்று. ஏறக்குறைய பிளாக்மெயில் போல என்னை நெருக்கி விட்டான்!"

"சரி. பிரேதத்தை எங்கே மறைத்தீர்கள்?"

சொன்னான். தொடர்ந்தான். திருச்சி லாட்ஜில் அழைத்த 'ஹஷ்ஹஷ்' ஒட்டுத்தாடி, பின் நிகழ்ந்த கொலை. பிறகு, இந்த ஹோட்டலில் முறுக்கு மீசை ஆசாமியைத் துரத்தி ஏமாந்தது, சற்று முன் நிகழ்ந்தது வரை கோர்வையாகச் சொன்னான்.

"ஐஸீ..." என்றவர் தீவிர யோசனையுடன் ஜீவாவை வெறித்தார்.

"எல்லா விவரமும் சொல்லி விட்டாய் அல்லவா?" என்ற ஆத்மா எழுந்து கொண்டார்.

"சொல்லி விட்டேன் பாஸ்!"

காஷுவலாக நடந்து சென்ற ஆத்மா மேசையை அணுகினார். மெல்லத் திரும்பி, "ஹாண்ட்ஸ் அப் ஜீவா!" என்று உறுமிய –

ஆத்மாவின் கையில் ஜீவாவின் துப்பாக்கி! ஜீவாவைக் குறிபார்த்தபடி!

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

## பதினெட்டாம் அத்தியாயம்

## இடும்பன்காரி

கொள்ளிடத்துப் பரிசில் துறையில் ஆழ்வார்க்கடியான் நம்பி என்னும் திருமலையப்பனை விட்டு விட்டு வந்துவிட்டோம். அந்த வீர வைஷ்ணவரை இப்போது கொஞ்சம் கவனிக்கலாம்.

வந்தியத்தேவன் குதிரை ஏறிக் குடந்தை நகர் நோக்கிச் சென்றதும், திருமலை அவன் போன திசையைப் பார்த்துக் கொண்டே தனக்குள் சொல்லிக் கொண்டான் : "இந்த வாலிபன் மிகப் பொல்லாதவனாயிருக்கிறான். நாம் தட்டியில் நுழைந்தால் இவன் கோலத்தில் நுழைகிறான். இவன் உண்மையில் யாருடைய ஆள், எதற்காக, எங்கே போகிறான் என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. கடம்பூர் மாளிகையில் நடந்த சதிக் கூட்டத்தில் இவன் கலந்து கொண்டானா என்றும் தெரியவில்லை. நல்ல வேளையாகக் குடந்தை சோதிடரைப் பற்றி இவனிடம் சொல்லி வைத்தோம். நம்மால் அறிய முடியாததைக் குடந்தை சோதிடராவது தெரிந்து கொள்ளுகிறாரா பார்க்கலாம்!..."




கல்கி கலெக்ஷன்

"என்ன, சுவாமி! அரசமரத்தோடு பேசறீங்களா? உங்களுக்கு நீங்களே பேசிக்கிறீங்களா?" என்ற குரலைக் கேட்டு திருமலையப்பன் திரும்பிப் பார்த்தான். கடம்பூரிலிருந்து வந்த வந்தியத்தேவனுக்குக் குதிரை பிடித்துக் கொண்டு வந்த

அமரர் கல்கி

பணியாள் பக்கத்தில் நின்றான்.

"அப்பனே! நீயா கேட்டாய்? நான் எனக்கு நானே பேசிக் கொள்ளவும் இல்லை; அரச மரத்தோடு பேசவும் இல்லை. இந்த மரத்தின் மேலே ஒரு வேதாளம் இருக்கிறது. அதனோடு சிறிது சல்லாபம் செய்தேன்!" என்றான் திருமலையப்பன்.

"ஓஹோ! அப்படிங்களா! அந்த வேதாளம் சைவமா? வைஷ்ணவமா?" என்றான் அந்த ஆள்.

அதைத்தான் நானும் கேட்டுக் கொண்டிருந்தேன். அதற்குள்ளே நீ வந்து குறுக்கிட்டாய். வேதாளம் மறைந்து விட்டது. போனால் போகட்டும்! உன் பெயர் என்ன அப்பனே?"

"எதற்காகக் கேட்கிறீங்க, சுவாமி!"

"நடுக் கொள்ளிடத்தில் படகு கவிழாமல் காப்பாற்றினாயே! அப்படிப்பட்ட புண்ணியவானாகிய உன்னை நான் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டாமா?"

"என் பெயர்... என் பெயர்... இடும்பன்காரி, சுவாமி!" என்று இழுத்தாற்போல் சொன்னான்.

"ஓ! இடும்பன்காரியா? எப்போதோ கேட்ட ஞாபகமாயிருக்கிறதே!"

இடும்பன்காரி அப்போது ஒரு விசித்திரமான காரியம் செய்தான். தன்னுடைய விரித்த கைகள் இரண்டையும் ஒன்றின் மேல் ஒன்றைக் குப்புறுத்தி வைத்துக் கொண்டு, இரு ஓரத்துக் கட்டை விரல்களையும் ஆட்டினான். ஆட்டிக் கொண்டே திருமலையப்பரின் முகத்தைப் பார்த்தான்.

"அப்பனே! இது என்ன சமிக்ஞை? எனக்கு விளங்கவில்லையே?" என்றான் திருமலை.

அப்போது இடும்பன்காரியின் கரிய முகம் மேலும் சிறிது கருத்தது. கண் புருவங்கள் நெரிந்தன.



"நானா? நான் ஒன்றும் சமிக்ஞை செய்யவில்லையே?" என்றான்.

"செய்தாய், செய்தாய்! நான்தான் பார்த்தேனே? பரதநாட்டிய சாஸ்திரத்தில் திருமாலின் முதல் அவதாரத்துக்கு ஒரு அஸ்தம் பிடிப்பதுண்டு. அதுமாதிரி செய்தாயே?"

"திருமாலின் முதல் அவதாரம் என்றால்? அது என்ன? எனக்குத் தெரியவில்லை சுவாமி!"

"விஷ்ணுவின் முதல் அவதாரம் தெரியாதா? மச்சாவதாரம்!"

"மீனைச் சொல்லுறீங்களா!"

"ஆமாம், அப்பனே, ஆமாம்!"

"நல்லவேளை, சாமி! உங்கள் கண்ணே விசித்திரமான கண்ணாயிருக்கிறதே! வெறும் மரத்தின் மேலே வேதாளம் தெரிகிறது. என் வெறுங்கையிலே மச்சாவதாரம் தெரிகிறது! ஒருவேளை மீன் பேரிலே சாமியாருக்குக் கொஞ்சம் ஆசை அதிகமோ?"

"சேச்சே! அந்த மாதிரியெல்லாம் சொல்லாதே, அப்பனே! அது போனால் போகட்டும். நம்மோடு படகிலே ஒரு வீர சைவர் வந்தாரே, அவர் எந்தப் பக்கம் போனார் பார்த்தாயா?"

"பார்க்காமலென்ன? பார்த்தேன். நான் குதிரை வாங்கப் போன பக்கந்தான் அவரும் வந்தார். உங்களைப் பற்றித் திட்டிக் கொண்டே வந்தார்...."

"என்னவென்று என்னைத் திட்டினார்?"

"உங்களை மறுபடியும் அந்த வீர சைவர் பார்த்தால் உங்கள் முன் குடுமியைச் சிரைத்துத் தலையை மொட்டையடித்து...."

"ஓகோ! அந்த வேலை கூட அவருக்குத் தெரியுமா?"

"உங்கள் திருமேனியிலுள்ள நாமத்தையெல்லாம் அழித்து விட்டுத் திருநீற்றைப் பூசி விடுவாராம்!"

"அப்படியானால் அவரைக் கட்டாயம் நான் பார்த்தேயாக வேண்டும். அவருக்கு எந்த ஊர் என்று உனக்குத் தெரியுமா?"

"அவருக்குப் **புள்ளிருக்கும் வேளூர்** என்று அவரே சொன்னாருங்க!"

"அந்த வீர சைவரைப் போய்ப் பார்த்துவிட்டுத்தான் மறு காரியம். அப்பனே! நீ எங்கே போகப் போகிறாய்? ஒருவேளை நீயும் அந்த வழி வரப் போகிறாயோ?"

"இல்லை, இல்லை. நான் எதற்காக அங்கே வருகிறேன்? திரும்பிக் கொள்ளிடத்தைத் தாண்டிக் கடம்பூருக்குத்தான் போகிறேன். இல்லாவிட்டால் எஜமானர் என் கண்ணைப் பிடுங்கி விட மாட்டாரா?"



"அப்படியானால், உடனே திரும்பு. அதோ படகு புறப்படப் போகிறது!"

இடும்பன்காரி திரும்பிப் பார்த்தபோது, ஆழ்வார்க்கடியான் கூறியது உண்மை என்று தெரிந்தது. படகு புறப்படும் தருவாயில் இருந்தது.

"சரி, சாமியாரே! நான் போகிறேன்" என்று சொல்லிவிட்டுப் படகுத் துறையை நோக்கி விரைந்து சென்றான் இடும்பன்காரி.

பாதி வழியில் ஒரு தடவை திரும்பிப் பார்த்தான். அதற்குள் ஆழ்வார்க்கடியான் ஒரு விந்தையான காரியம் செய்திருந்தான். மளமளவென்று அந்த அரச மரத்தின் மீது பாய்ந்து ஏறிக் கிளைகள் அடர்ந்திருக்கும் இடத்துக்குப் போய் விட்டான். ஆகையால் இடும்பன்காரியின் கண்ணோட்டத்தில் அவன் விழவில்லை.

இடும்பன்காரி நதியின் பரிசில் துறையை அடைந்தான். படகோட்டிகளில் ஒருவன், "அக்கரைக்கு வருகிறாயா, அப்பா?" என்று கேட்டான்.

"இல்லை, அடுத்த படகில் வரப் போகிறேன். நீ போ!" என்றான் இடும்பன்காரி.

"அடே! இவ்வளவுதானா? நீ வருகிற வேகத்தைப் பார்த்துவிட்டு அல்லவா படகை நிறுத்தினேன்!" என்று சொல்லி ஓடக்காரன் கோல் போட்டு ஓடத்தை நதியில் செலுத்தினான்.



தற்குள் அரசமரத்தின் நடுமத்திவரையில் ஏறி நன்றாக மறைந்து உட்கார்ந்து கொண்ட திருமலை, "ஓகோ! நான் நினைத்தது சரியாகப் போயிற்று. இவன் படகில் ஏறவில்லை. திரும்பித்தான் வரப்போகிறான். வந்த பிறகு எந்தப் பக்கம் போகிறான் என்று பார்க்க வேண்டும். இவனுடைய கைகள் மச்ச ஹஸ்த முத்திரை காட்டியதை நான் நன்றாகப் பார்த்தேன். அதன் பொருள் என்ன? மீன்! மீன்! மீன் சின்னம் எதைக் குறிக்கிறது? ஆ! மீன் பாண்டியனுடைய கொடியில் பொறித்ததல்லவா? ஒரு வேளை, ஆஹாஹா!.... அப்படியும் இருக்குமோ! பார்க்கலாம்! சிறிது பொறுமையுடனே இருந்து பார்க்கலாம். பொறுத்தவர் பூமி ஆள்வார், பொங்கியவர் காடாள்வார்... ஆனால், இந்தக் காலத்தில் பூமி ஆள்வதைக் காட்டிலும் காடு ஆள்வதே மேலானது என்று தோன்றுகிறது! ஆனாலும் பொறுத்துப் பார்க்கலாம்!...." இவ்விதம் அரச மரத்திலிருந்த அருவமான வேதாளத்திடம் திருமலை சொல்லிக் கொண்டிருந்தான்.

விரைவில் அவன் எதிர்பார்த்தபடியே நடந்தது. படகு இடும்பன்காரியை ஏற்றிக் கொள்ளாமலே சென்றது. இடும்பன்காரி நதிக்கரையிலிருந்தபடி அரச மரத்தடியை உற்று உற்றுப் பார்த்தான். பிறகு நாலா திசைகளிலும் துளாவிப் பார்த்தான். ஆழ்வார்க்கடியான் எங்குமில்லையென்பதை நன்கு தெரிந்து கொண்டு திரும்பி

அதே அரசமரத்தடிக்கு வந்து சேர்ந்தான். இன்னும் ஒரு தடவை சுற்றுமுற்றும் நன்றாய்ப் பார்த்து விட்டு அந்த மரத்தடியிலேயே உட்கார்ந்து கொண்டான். எதையோ, அல்லது யாரையோ எதிர்பார்ப்பவன் போல் அவனுடைய கண்கள் நாலாபுறமும் சுழன்று நோக்கிக் கொண்டிருந்தன. ஆனால், மரத்தின் மேலே மட்டும் அவன் அண்ணாந்து பார்க்கவில்லை. பார்த்திருந்தாலும் திருமலை நன்றாகத் தம் திருமேனியை மறைத்துக் கொண்டிருந்தபடியால் மரத்தின் மேல் அவன் உட்கார்ந்திருப்பது இடும்பன்காரிக்குத் தெரிந்திராது.

சுமார் ஒரு நாழிகை நேரம் இவ்விதம் சென்றது. திருமலைக்குக் கால்கள் மரத்துப் போகத் தொடங்கின. இனி வெகு நேரம் மரத்தின் மேல் இருக்க முடியாதென்று தோன்றியது. இடும்பனோ, மரத்தடியிலிருந்து எழுந்திருக்கும் வழியாகத் தோன்றவில்லை. தப்பித்துப் போவது எப்படி! எவ்வளவு ஜாக்கிரதையாக மரத்தின் மறுபக்கத்தில் இறங்கினாலும் ஏதாவது சத்தம் கேளாமல் இராது! கேட்டால் இடும்பன்காரி உடனே பார்த்து விடுவான். அவனோ இடுப்பில் ஒரு கூரிய கொடுவாளைச் செருக்கிக் கொண்டிருந்தான். அதைத் தன் பேரில் அவன் பிரயோகிக்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்?

வேறு என்னதான் செய்வது? பேய் பிசாசைப் போல் பயங்கரமாகச் சத்தமிட்டுக் கொண்டு இடும்பனின் மேலேயே குதிக்கலாமா? குதித்தால் தன்னை வேதாளம் என்று நினைத்துக் கொண்டு அவன் பயத்தினால் மூர்ச்சையடைந்து விழலாம் அல்லவா? அல்லது தப்பித்து ஓடப் பார்க்கலாம் அல்லவா! அச்சமயம் தானும் தப்பி ஓடிவிடலாம்!.... இவ்விதம் திருமலை எண்ணிய சமயத்தில், அவனுடைய சோதனை முடிவடையும் எனத் தோன்றியது.

ஓர் ஆள் தென்மேற்கிலிருந்து, அதாவது குடந்தைச் சாலை வழியாக வந்து கொண்டிருந்தான். அவனுக்காகத்தான் இடும்பன்காரி இத்தனை நேரமாய்க் காத்திருக்கிறான் என்று திருமலையின் உள்ளுணர்ச்சி கூறியது.

புது ஆள் வந்ததைப் பார்த்ததும் அரசமரத்தடியில் உட்கார்ந்திருந்த இடும்பன் எழுந்து நின்றான்.

வந்தவன், முன்னால் இடும்பன் செய்த சமிக்ஞையைச் செய்தான். அதாவது ஒரு விரித்த புறங்கையின் மேல் இன்னொரு விரித்த கையை வைத்து, இரண்டு கட்டை விரல்களை ஆட்டி, மச்ச சமிக்ஞை பிடித்துக் காட்டினான். அதைப் பார்த்த இடும்பனும் அதே மாதிரி செய்து காட்டினான்.

"உன் பெயர் என்ன?" என்று வந்தவன் கேட்டான்.

"என் பெயர் இடும்பன்காரி. உங்கள் பெயர்?"

"சோமன் சாம்பவன்!"

"உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்."

"நானும் உன்னைத் தேடிக் கொண்டு தான் வந்தேன்."

"நாம் எந்தத் திசையில் போக வேண்டும்?"

"மேற்குத் திசையில்தான்!"

"எவ்விடத்துக்கு?"

"பகைவனின் பள்ளிப்படைக்கு!"

"திருப்புறம்பயம் அருகில்...."

"இரைந்து பேசாதே! யார் காதிலாவது விழப் போகிறது" என்று சொல்லிச் சோமன் சாம்பவன் நாலாபக்கமும் பார்த்தான்.

"இங்கே ஒருவரும் இல்லை. முன்னாலேயே நான் பார்த்து விட்டேன்."

"பக்கத்தில் எங்கும் ஒளிந்திருக்கவும் இடமில்லையே?"

"கிடையவே கிடையாது!"

"அப்படியானால் புறப்படு. எனக்கு அவ்வளவு நன்றாக வழி தெரியாது. நீ முன்னால் போ! நான் சற்றுப் பின்னால் வருகிறேன். அடிக்கடி நின்று நான் பின்னால் வருகிறேனா என்று பார்த்துப் போ!"

"ஆகட்டும். வழி நல்ல வழியல்ல.

காடும் மேடும் முள்ளும் கல்லுமாயிருக்கும். ஜாக்கிரதையாகப் பார்த்து நடந்து வர வேண்டும்!"

"சரி, சரி, நீ புறப்பட்டுப் போ! காட்டு வழியாயிருந்தாலும் யாராவது எதிர்ப்பட்டால் மறைந்து கொள்ள வேண்டும். தெரிந்ததா?"

"தெரிந்தது, தெரிந்தது!"

இடும்பன்காரி கொள்ளிடக் கரையோடு மேற்குத் திசையை நோக்கிப் போனான். அவனுக்குச் சற்றுப் பின்னால் சோமன் சாம்பவனும் தொடர்ந்து சென்றான்.

இருவரும் கண்ணுக்கு மறையும் வரையில் ஆழ்வார்க்கடியான் மரத்தின் மேலேயே இருந்தான். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் இருந்தான்.

"ஆஹா! காலம் பொல்லாத காலம்! எதிர்பாராத காரியங்கள் எல்லாம் நடைபெறுகின்றன. ஏதோ ஒரு பெரிய மர்மமான காரியத்தைத் தெரிந்து கொள்ளக் கடவுள் அருளால் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. இனி நம்முடைய சாமர்த்தியத்தைப் பொறுத்தது விஷயத்தை அறிவது. கடம்பூர் மாளிகையில் அறை குறையாகத்தான் தெரிந்து கொள்ள முடிந்தது. இங்கே அப்படி ஏமாந்து போகக் கூடாது. திருப்புறம்பயம் -பள்ளிப் படையென்றால், கங்க மன்னன் பிரிதிவீபதியின் பள்ளிப்படையைத்தான் சொல்லியிருக்க வேண்டும். அந்தப் பள்ளிப் படையைக் கட்டி நூறு வருஷம் ஆகிறது. ஆகையால் பாழடைந்து கிடக்கிறது. சுற்றிலும் காடு மண்டிக் கிடக்கிறது. கிராமமோ சற்றுத் தூரத்தில் இருக்கிறது. அங்கே எதற்காக இவர்கள் போகிறார்கள்! இந்த இரண்டு பேரும் மட்டும் பேச வேண்டிய விஷயமாயிருந்தால், இங்கேயே பேசிக் கொள்ளுவார்கள். காட்டு வழியில் ஒரு காத தூரம் போக வேண்டியதில்லையே? ஆகையால், அங்கே இன்னும் சிலரும் வரப் போகிறார்கள் என்பது நிச்சயம். எதற்காக? பிரிதிவீபதியின் பள்ளிப் படையைப் 'பகைவனின் பள்ளிப் படை'யென்று இவர்களில் ஒருவன் சொல்வானேன்? பிரிதிவீபதி யாருக்குப் பகைவன்? ஆகா! நாம் நினைத்தது உண்மையாகும் போலிருக்கிறதே! எதற்கும் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். இவர்கள் கொள்ளிடக் கரையோடு போகிறார்கள். நாம் மண்ணிக் கரையோடு போகலாம். மண்ணிக் கரையில் காடு அதிக அடர்த்தியாயிருந்தாலும் பாதகமில்லை. காடும் மேடும் முள்ளும் கல்லும் நமக்கு என்ன இலட்சியம்? அவைதாம்



நம்மைக் கண்டு பயப்பட வேண்டும்!....

இவ்வாறு எண்ணிக் கொண்டும் வாயோடு முணுமுணுத்துக் கொண்டும் திருமலை அரச மரத்திலிருந்து இறங்கிச் சற்றுத் தெற்கு நோக்கிப் போனான். மண்ணியாறு வந்தது. அதன் கரையோடு மேற்கு நோக்கி நடையைக் கட்டினான்.

ஜன சஞ்சாரமில்லாத அடர்ந்த காடுகளின் வழியாக ஆழ்வார்க்கடியான் புகுந்து சென்று சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் திருப்புறம்பயம் பள்ளிப்படைக் கோயிலை அடைந்தான்.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# ரணகள அரண்யம்

பழந்தமிழ் நாட்டில் போர்க்களத்தில் உயிர்துறந்த மகாவீரர்களின் ஞாபகமாக வீரக் கல் நட்டுக் கோயில் எடுப்பது மரபு. வெறுங் கல் மட்டும் ஞாபகார்த்தமாக நாட்டியிருந்தால் 'நடுகற் கோயில்' என்று வழங்குவார்கள். அத்துடன் ஏதேனும் ஒரு தெய்வத்தின் சிலையையும் ஸ்தாபித்து ஆலயமாக எழுப்பியிருந்தால் அது **'பள்ளிப்படை'** என்று வழங்கப்படும்.



குடந்தை நகருக்கு அரைக்காதம் வடமேற்கில் மண்ணியாற்றுக்கு வடகரையில் திருப்புறம்பயம் என்னும் கிராமத்துக்கருகில் ஒரு பள்ளிப் படைக்கோயில் இருந்தது. இது அந்தப் பிரதேசத்தில் நடந்த ஒரு மாபெரும் போரில் உயிர்நீத்த கங்க மன்னன் பிரிதிவீபதியின் ஞாபகமாக எடுத்தது. உலக சரித்திரம் அறிந்தவர்கள் **வடர்லூர்ச் சண்டை, பானிபெத் சண்டை, பிளாசிச் சண்டை** போன்ற சில சண்டைகளின் மூலம் சரித்திரத்தின் போக்கே மாறியது என்பதை அறிவார்கள். தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் திருப்புறம்பயம் சண்டை அத்தகைய முக்கியம் வாய்ந்தது. நமது கதை நடந்த காலத்துக்குச் சுமார் நூறு ஆண்டு காலத்துக்கு முன்னால் அச்சண்டை நடந்தது. அதன் வரலாறு தமிழ் மக்கள் அனைவருக்கும் தெரிந்திருக்க வேண்டியது அவசியம்.

கரிகால் வளவன்; பெருநற்கிள்ளி, இளஞ்சேட் சென்னி, தொடித்தோட் செம்பியன் முதலிய சோழகுல மன்னர்கள் சீரும் சிறப்புமாக சோழ நாட்டை ஆண்டிருந்த காலத்துக்குப் பிறகு ஏறக்குறைய ஐந்நூறு அறுநூறு வருஷ காலம் சோழர் குலத்தின் கீர்த்தியை நீடித்த கிரகணம் பிடித்திருந்தது. தெற்கே பாண்டியர்களும், வடக்கே பல்லவர்களும் வலிமை மிக்கவர்களாகிச் சோழர்களை நெருக்கி வந்தார்கள். கடைசியாக, சோழ குலத்தார் பாண்டியர்களின் தொல்லையைப் பொறுக்க முடியாமல் அவர்களுடைய நெடுங்காலத் தலைநகரமான உறையூரை விட்டு நகர வேண்டி வந்தது. அப்படி நகர்ந்தவர்கள் குடந்தைக்கு அருகில் இருந்த பழையாறை என்னும் நகருக்கு வந்து சேர்ந்தார்கள். ஆயினும், உறையூர் தங்கள் தலைநகரம் என்னும் உரிமையை விட்டு விடவில்லை. 'கோழி வேந்தர்' என்னும் பட்டத்தையும் விட்டு விடவில்லை.

பழையாறைச் சோழ மன்னர்களில் விஜயாலய சோழர் என்பவர் இணை

யில்லா வீரப்புகழ் பெற்றவர். இவர் பற்பல யுத்த களங்களில் முன்னணியில் நின்று போர் செய்து உடம்பில் தொண்ணூற்றாறு காயங்களை அடைந்தவர்.

*எண்கொண்ட தொண்ணூற்றின்*

*மேலுமிரு மூன்று*

*புண்கொண்ட வெற்றிப் புரவலன்...."*

*என்றும்,*

*புண்ணூறு தன்திருமேனியிற்*

*பூணாகத்*

*தொண்ணூறும் ஆறுஞ் சுமந்தோனும்"*

என்றெல்லாம் பிற்கால ஆஸ்தானப் புலவர்களால் பாடப் பெற்றவர்.

இவருடைய மகன் ஆதித்த சோழன் தந்தைக்கு இணையான பெரு வீரனாக விளங்கினான். இவனும் பல போர்களில் கலந்து கொண்டு புகழ்பெற்றான்.

விஜயாலய சோழர் முதுமைப் பிராயத்தை அடைந்து மகனுக்குப் பட்டங் கட்டி விட்டு ஓய்ந்திருந்தார். அச்சமயத்தில் பாண்டியர்களுக்கும் பல்லவர்களுக்கும் பகைமை முற்றி அடிக்கடி சண்டை நடந்து கொண்டிருந்தது. அந்தக் காலத்துப் பாண்டிய மன்னனுக்கு வரகுணவர்மன் என்று பெயர்; பல்லவ அரசனுக்கு அபராஜிதவர்மன் என்று பெயர். இந்த இரண்டு பேரரசர்களுக்குள் நடந்த சண்டைகள் பெரும்பாலும் சோழ நாட்டில் நடைபெற்றன. யானையும் யானையும் மோதிச் சண்டையிடும்போது நடுவில் அகப்பட்டுக் கொள்ளும் சேவல் கோழியைப் போல் சோழ நாடு அவதிப்பட்டது. சோழநாட்டு மக்கள் துன்புற்றார்கள். எனினும் இப்போர்களை விஜயாலய சோழர் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார். ஒவ்வொரு போரிலும் ஏதாவது ஒரு கட்சியில் தம்முடைய சிறிய படையுடன் போய்க் கலந்து கொண்டார். வெற்றி தோல்விகள் மாறி மாறி வந்தாலும் சோழநாட்டில் போர்க்குணம் மிகுந்து வந்தது.

**கா**வேரி நதியிலிருந்து பல கிளை நதிகள் பிரிந்து சோழநாட்டை வளப்படுத்துவதை யாவரும் அறிவார்கள். அக் கிளை நதிகள் யாவும் காவிரிக்குத் தெற்கே பிரிகின்றன. கொள்ளிடத்திலிருந்து பிரிந்து காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் நடுவில் பாயும் நதி ஒன்றே ஒன்றுதான். அதற்கு மண்ணியாறு என்று பெயர்.

இந்த மண்ணியாற்றின் வடகரையில், திருப்புறம்பயம் கிராமத்துக்கு அருகில், பாண்டியர்களுக்கும் பல்லவர்களுக்கும் இறுதியான பலப்பரீட்சை நடந்தது. இருதரப்பிலும் படைபலம் ஏறக்குறைய சமமாக இருந்தது. பல்லவ அபராஜிதவர்மனுக்குத் துணையாக கங்க நாட்டு பிரிதிவீபதி வந்திருந்தான். ஆதித்த சோழனும் அபராஜிதவர்மனுடைய கட்சியில் சேர்ந்திருந்தான்.

பாண்டிய சைன்யத்துடனும் பல்லவ சைன்யத்துடனும் ஒப்பிட்டால், சோழ சைன்யம் மிகச் சிறியதாகவே இருந்தது. எனினும், இம்முறை பாண்டியன் வெற்றி பெற்றால், சோழ வம்சம் அடியோடு நாசமாக நேரும் என்று ஆதித்தன் அறிந்திருந்தான். ஆகையால், பெரிய சமுத்திரத்தில் கலக்கும் காவேரி நதியைப் போல் பல்லவரின் மகா சைன்யத்தில் தன்னுடைய சிறு படையையும் சேர்ந்திருந்தான்.

காத தூரத்துக்குக் காத தூரம் ரணகளம் பரவியிருந்தது. ரத, கஜ, துரக, பதாதிகள் என்னும் நாலுவகைப் படைகளும் போரில் ஈடுபட்டிருந்தன. மலையோடு மலை முட்டுவது போல் யானைகள் ஒன்றையொன்று தாக்கிய போது நாலா திசைகளும் அதிர்ந்தன. புயலோடு புயல் மோதுவது போல் குதிரைகள் ஒன்றின் மீது ஒன்று பாய்ந்த போது குதிரை வீரர்களின் கையிலிருந்த வேல்கள் மின்வெட்டுகளைப் போல் பிரகாசித்தன. ரதத்தோடு ரதம் மோதிச் சுக்குநூறாகித் திசையெல்லாம் பறந்தன. காலாள் வீரர்களின் வாள்களோடு வாள்களும், வேல்களோடு வேல்களும் உராய்ந்த போது எழுந்த ஜங்கார

ஒலிகளினால் திக்குத் திகாந்தங்கள் எல்லாம் நடுநடுங்கின.

மூன்று நாள் இடைவிடாமல் சண்டை நடந்த பிறகு, ரணகளம் முழுவதும் ரத்தக் கடலாகக் காட்சியளித்தது. அந்தக் கடலில் செத்த யானைகளும் குதிரைகளும் திட்டுத் திட்டாகக் கிடந்தன. உடைந்த ரதங்களின் பகுதிகள் கடலில் கவிழ்ந்த கப்பலின் பலகைகளைப் போல் மிதந்தன. இருதரப்பிலும் ஆயிரம் பதினாயிரம் வீரர்கள் உயிரிழந்து கிடந்தார்கள்.

மூன்று நாள் இவ்விதம் கோர யுத்தம் நடந்த பிறகு பல்லவர் சைன்யத்தில் ஒரு பகுதிதான் மிஞ்சியிருந்தது. மிஞ்சியவர்களும் மிகக் களைத்திருந்தார்கள். பாண்டிய நாட்டு வீர மறவர்களோ, களைப்பையே அறியாத வரம் வாங்கி வந்தவர்களைப் போல், மேலும் மேலும் வந்து தாக்கினார்கள். அபராஜிதவர்மனுடைய கூடாரத்தில் மந்திராலோசனை நடந்தது. அபராஜிதன், பிரதிவீபதி, ஆதித்தன் ஆகிய மூன்று மன்னர்களுடன் படைத்தலைவர்களும் கலந்து ஆலோசித்தார்கள். இனி எதிர்த்து நிற்க முடியாது என்றும், பின்வாங்கிக் கொள்ளிடத்துக்கு வடகரைக்குச் சென்று விடுவதே உசிதம் என்றும் முடிவு செய்தார்கள்.

இப்படிப்பட்ட நிலைமையில் போர்க்களத்தில் ஓர் அதிசயம் நடந்தது. முதுமையினால் தளர்ந்தவனும், உடம்பில் தொண்ணூற்றாறு காயவடுக்கள் உள்ளவனும், கால்களில் பட்ட கொடிய காயத்தினால் எழுந்து நிற்கும் சக்தியை இழந்தவனுமான விஜயாலய சோழன் எப்படியோ யுத்தரங்கத்துக்கு வந்து விட்டான். பல்லவ சைன்யம் பின்வாங்கிக் கொள்ளிடத்துக்கு வடக்கே போய்விட்டால், சோழநாடு மறுபடியும் நெடுங்காலம் தலையெடுக்க முடியாது என்பதை உணர்ந்திருந்த அந்தக் கிழச் சிங்கத்தின் கர்ஜனை, பல்லவர் கட்சியில் எஞ்சியிருந்த வீரர்களுக்குப் புத்துயிர் அளித்தது.

"ஒரு யானை! எனக்கு ஒரு யானை கொடுங்கள்!" என்றான்.

"நமது யானைப் படை முழுதும் அதமாகி விட்டது; ஒன்று கூடத் தப்பவில்லை" என்றார்கள்.

"ஒரு குதிரை, ஒரு குதிரையாவது கொண்டு வாருங்கள்!" என்றான்.

"உயிருள்ள குதிரை ஒன்று கூட மிஞ்சவில்லை" என்று சொன்னார்கள்.

"சோழநாட்டுச் சுத்த வீரர்



கள் இருவரேனும் மிஞ்சி உயிரோடு இருக்கிறார்களா? இருந்தால் வாருங்கள்!" என்று விஜயாலயன் அலறினான்.

இருவருக்குப் பதிலாக இருநூறு பேர் முன்னால் வந்தார்கள்.

"இரண்டு பேர் - தோளில் வலிவும் நெஞ்சில் உரமும் உள்ள இரண்டு பேர் - என்னைத் தோள் கொடுத்துத் தூக்கிக் கொள்ளுங்கள். மற்றவர்கள் இரண்டு இரண்டு பேராகப் பின்னால் வந்து கொண்டிருங்கள். என்னைச் சுமக்கும் இருவர் விழுந்தால், பின்னால் வரும் இருவர் என்னைத் தூக்கிக் கொள்ளுங்கள்!'' என்றான் அந்த வீராதி வீரன்.



அப்படியே இரண்டு பீமசேனர்கள் முன்னால் வந்து விஜயாலயனைத் தோளில் தூக்கிக் கொண்டார்கள்.

''போங்கள்! போர் முனைக்குப் போங்கள்!'' என்று கர்ஜித்தான்.

போர்க்களத்தில் ஓரிடத்தில் இன்னமும் சண்டை நடந்து கொண்டிருந்தது. தெற்கத்தி மறவர்கள் ஈழநாட்டாரைத் தாக்கிப் பின்வாங்கச் செய்து கொண்டே வந்தார்கள். இருவருடைய தோள்களில் அமர்ந்த விஜயாலயன் அந்தப் போர் முனைக்குப் போனான். இரண்டு கைகளிலும் இரண்டு நீண்ட வாள்களை வைத்துக் கொண்டு திருமாலின் சக்ராயுதத்தைப் போல் சுழற்றிக் கொண்டு, எதிரிகளிடையே புகுந்தான். அவனைத் தடுக்க யாராலும் முடியவில்லை. அவன் புகுந்து சென்ற வழியெல்லாம் இருபுறமும் பகைவர்களின் உடல்கள் குவிந்து கொண்டேயிருந்தன.

ஆம்; இந்த அதிசயத்தைப் பார்ப்பதற்காகப் பின்வாங்கிய வீரர்கள் பலரும் முன்னால் வந்தார்கள். விஜயாலயனுடைய அமானுஷ்ய வீரத்தைக் கண்டு முதலில் சிறிது திகைத்து நின்றார்கள். பிறகு ஒருவரையொருவர் உற்சாகப் படுத்திக் கொண்டு தாங்களும் போர் முனையில் புகுந்தார்கள்.

அவ்வளவுதான்; தேவி ஜயலக்ஷ்மியின் கருணாகடாட்சம் இந்தப் பக்கம் திரும்பி விட்டது.

பல்லவர் படைத் தலைவர்கள் பின்வாங்கிக் கொள்ளிடத்துக்கு வடகரை போகும் யோசனையைக் கைவிட்டார்கள்.

மூன்று வேந்தர்களும் தமக்குரிய மூலபல வீரர்கள் புடைசூழப் போர் முனையில் புகுந்தார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் பாண்டிய வீரர்கள் பின்வாங்கத் தொடங்கினார்கள்.

கங்க மன்னன் பிரதிவீபதி அன்றையப் போரில் செயற்கரும் செயல்கள் பல புரிந்த பிறகு, தன் புகழுடம்பை அப்போர்க்களத்தில் நிலைநாட்டி விட்டு வீர சொர்க்கம் சென்றான்.

அத்தகைய வீரனுடைய ஞாபகார்த்தமாக அப்போர்க்களத்தில் வீரக்கல் நாட்டினார்கள். பிறகு பள்ளிப்படைக் கோயிலும் எடுத்தார்கள்.

அத்தகைய கொடூரமான பயங்கர யுத்தம் நடந்த ரணகளம் சில காலம் புல் பூண்டுகள் முளையாமல் கிடந்தது. அந்தப் பக்கம் மக்கள் போவதேயில்லை. சிறிது காலத்துக்குப் பிறகு அங்கே காடு மண்ட ஆரம்பித்தது. பள்ளிப்படைக் கோவிலைச் சுற்றிக் காடு அடர்ந்தது. புதர்களில் நரிகள் குடிபுகுந்தன. இருண்ட மரக்கிளைகளில் ஆந்தைகளும் கோட்டான்களும் வாசம் செய்தன. நாளடைவில் அப் பள்ளிப்படைக் கோயிலுக்கு யாரும் போவதை நிறுத்தி விட்டார்கள். எனவே, கோயிலும் நாளுக்கு நாள் தகர்ந்து போய் வந்தது. நமது கதை நடக்கும் காலத்தில் பாழடைந்து கிடந்தது.

இத்தகைய பாழடைந்த பள்ளிப்படைக் கோயிலுக்கு இருட்டுகிற நேரத்தில்

ஆழ்வார்க்கடியான் வந்து சேர்ந்தான். அக் கோயிலின் மேல் மண்டப விளிம்பில் அமைந்த காவல் பூதகணங்கள் அவனைப் பயமுறுத்தப் பார்த்தன. ஆனால் அந்த வீர வைஷ்ணவ சிகாமணியா பயப்படுகிற வன்? பள்ளிப்படைக் கோயில் மண்டபத் தின் மீது தாவி ஏறினான். மண்டபத்தின் மீது கவிந்திருந்த மரக்கிளையின் மறைவில் உட்கார்ந்து கொண்டான். நாலாபுறமும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் அடர்த்தியான இருளைக் கிழித்துக் கொண்டு பார்க்கும் சக்தியைப் பெற்றிருந்தன. அவனுடைய செவிகளும் அவ்வாறே மிக மெல்லிய ஓசையையும் கேட்கக்கூடிய கூர்மை பெற்றிருந்தன.

இருட்டி ஒரு நாழிகை; இரண்டு நாழிகை; மூன்று நாழிகையும் ஆயிற்று. சுற்றிலும் சூழ்ந்திருந்த அந்தகாரம் அவனை அடியோடு அமுக்கி, மூச்சுத் திணறச் செய்தது. அவ்வப்போது காட்டு மரங்களினிடையே சலசலவென்று ஏதோ சத்தம் கேட்டது. அதோ ஒரு மரநாய் மரத்தின் மேல் ஏறுகிறது! அதோ ஒரு ஆந்தை உறுமுகிறது! இந்தப் பக்கம் ஒரு கோட்டான் கூவுகிறது! மரநாய்க்குப் பயந்து ஒரு பறவை சடசடவென்று சிறகை அடித்துக் கொண்டு மேல் கிளைக்குப் பாய்கிறது. அதோ, நரிகள் ஊளையிடத் தொடங்கி விட்டன.

தலைக்கு மேலே ஏதோ சத்தம் கேட்டது. அண்ணாந்து பார்த்தான். அணிலோ, ஓணானோ, அல்லது அத்தகைய வேறொரு சிறிய பிராணியோ மரக்கிளை களின் மீது தாவி ஏறிற்று.

மரக்கிளைகளின் இடுக்குகளின் வழியாக வானத்தில் ஒரு சிறு பகுதி தெரிந் தது. விண்மீன்கள் 'முணுக்' 'முணுக்' கென்று மின்னிக் கொண்டு கீழே எட்டிப் பார்த்தன. அந்தத் தனிமை மிகுந்த கனாந்தகாரத்தினிடையே வானத்து நட்சத்திரங்கள் அவனுடன் நட்புரிமை கொண்டாடுவதுபோல் தோன்றின. எனவே, ஆழ்வார்க்கடியான் மரக்கிளை களின் வழியாக எட்டிப் பார்த்த நட்சத் திரங்களைப் பார்த்து மெல்லிய குரலில் பேசினான் : "ஓ! நட்சத்திரங்களே! உங் களை இன்றைக்குப் பார்த்தால் பூவுலக மக்களின் அறிவீனத்தைப் பார்த்துக் கேலி செய்து கண்சிமிட்டிச் சிரிப்பவர்களைப் போலத் தோன்றுகிறது. சிரிப்பதற்கு உங் களுக்கு வேண்டிய காரணம் உண்டு. நூறு வருஷத்துக்கு முன்னால் இதே இடத்தில் நடந்த பெரும் போரையும், போர் நடந்த பிறகு இங்கே வெகுநாள்வரை இரத்த வெள்ளம் பெருகிக் கிடந்ததையும் பார்த் திருக்கிறீர்கள். மனிதர்கள் எதற்காக இப் படி ஒருவரையொருவர் பகைக்க வேண் டும் என்று அதிசயிக்கிறீர்கள். எதற்காக இப்படி மனித இரத்தத்தைச் சிந்தி வெள் ளமாக ஓடச் செய்ய வேண்டும் என்றும் வியக்கிறீர்கள். இதற்குப் பெயர் வீரமாம்.

"ஒரு மனிதன் இறந்து நூறு வருஷம் ஆகியும் அவனிடம் பகைமை பாராட்டு கிறார்கள்! இந்தப் பள்ளிப்படை பகை வனுடைய பள்ளிப்படையாம்! பகைவன் பள்ளிப்படைக்கு அருகில் கூடி யோசிக் கப் போகிறார்களாம். செத்துப் போன வர்களின் பெயரால் உயிரோடிருப்பவர் களை இம்சிப்பதற்கு! வானத்து விண்மீன் களே! நீங்கள் ஏன் சிரிக்க மாட்டீர்கள்? நன்றாய்ச் சிரியுங்கள்!

"கடவுளே! இங்கு வந்தது வீண்தானா? இன்றிரவெல்லாம் இப்படியே கழியப் போகிறதா? எதிர்பார்த்த ஆட்கள் இங்கே வரப்போவதில்லையா? என் காதில் விழுந்தது தவறா? நான் சரியாகக் கவனிக்கவில்லையா? அல்லது அந்த மச்சஹஸ்த சமிக்ஞையாளர்கள் தங்கள் யோசனையை மாற்றிக் கொண்டு வேறிடத்துக்குப் போய் விட்டார்களா! என்ன ஏமாற்றம்? இன்றைக்கு மட்டும் நான் ஏமாந்து போனால் என்னை நான் ஒருநாளும் மன்னித்துக் கொள்ள முடி யாது!... ஆ! அதோ சிறிது வெளிச்சம் தெரி கிறது! அது என்ன? வெளிச்சம் மறை கிறது; மறுபடி தெரிகிறது. சந்தேகமில்லை. அதோ, களுந்து கொளுத்திப் பிடித்துக் கொண்டு யாரோ ஒருவன் வருகிறான்! இல்லை இரண்டு பேர் வருகிறார்கள். காத்திருந்தது வீண் போகவில்லை!..."

வந்தவர்கள் இருவரும் பள்ளிப் படையைத் தாண்டிக் கொண்டு சிறிது அப்பால் போனார்கள். அடர்ந்த



காட்டுக்கு மத்தியில் சிறிது இடைவெளி இருந்த இடத்தில் நின்றார்கள். ஒருவன் உட்கார்ந்து கொண்டான். கையில் சுளுந்து வைத்திருந்தவன் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டிருந்தான். யாருடைய வரவையோ அவன் எதிர்பார்த்தான் என்பதில் சந்தேகமில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் இன்னும் இரண்டு பேர் வந்தார்கள். அவர்கள் இதற்கு முன் இந்த இடத்துக்கு வந்தவர்களாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்த இருளில், அடர்ந்த காட்டில், வழிகண்டுபிடித்துக் கொண்டு வர முடியுமா?

முதலில் வந்தவர்களும் பின்னால் வந்தவர்களும் ஏதோ பேசிக் கொண்டார்கள். ஆனால் ஆழ்வார்க்கடியான் காதில் அது ஒன்றும் விழவில்லை. 'அடடா, இத்தனை கஷ்டப்பட்டு வந்தும் பிரயோஜனம் ஒண்ணும் இராது போலிருக்கிறதே! ஆட்களின் அடையாளம் கூடத் தெரியாது போலிருக்கிறதே!'

பிறகு இன்னும் இரண்டு பேர் வந்தார்கள். முன்னால் வந்தவர்களும் கடைசியில் வந்தவர்களும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள். கடைசியாக வந்தவர்களில் ஒருவன் கையில் ஒரு பை கொண்டு வந்திருந்தான். அதை அவன் அவிழ்த்து அதனுள் இருந்தவற்றைக் கொட்டினான். சுளுந்து வெளிச்சத்தில் தங்க நாணயங்கள் பளபளவென்று ஒளிர்ந்தன.

கொட்டிய மனிதன் பைத்தியம் பிடித்தவனைப் போல் சிரித்து, "நண்பர்களே! சோழ நாட்டுப் பொக்கிஷத்தைக் கொண்டே சோழ ராஜ்யத்துக்கு உலைவைக்கப் போகிறோம்! இது பெரிய வேடிக்கையல்லவா?" என்று சொல்லிவிட்டு மறுபடியும் கலகலவென்று சிரித்தான்.

"ரவிதாஸரே! இரைச்சல் போட வேண்டாம். கொஞ்சம் மெதுவாகப் பேசலாம்!" என்றான் ஒருவன்.

"ஆகா! இங்கு இப்படிப் பேசினால் என்ன? நரிகளும், மரநாய்களும், கூகைகளும் கோட்டான்களுந்தான் நம் பேச்சைக் கேட்கும்! நல்லவேளையாக அவை யாரிடமும் போய்ச் சொல்லாது!" என்றான் ரவிதாஸன்.

"இருந்தாலும் கொஞ்சம் மெதுவாகப் பேசுவதே நல்லது அல்லவா?"

பிறகு அவர்கள் மெல்லப் பேசத் தொடங்கினார்கள். ஆழ்வார்க்கடியானுக்கு அவர்களுடைய பேச்சைக் கேட்டறியாமல் மண்டபத்தின் பேரில் உட்கார்ந்து இருப்பது வீண் என்று தோன்றியது. மண்டபத்திலிருந்து இறங்கிக் கூட்டம் நடக்கும் இடத்திற்கு அருகில் நின்று ஒட்டுக் கேட்டே தீர வேண்டும். அதனால் விளையும் அபாயத்தையும் சமாளித்துக் கொள்ள வேண்டும் - இவ்விதம் எண்ணி ஆழ்வார்க்கடியான் மண்டபத்திலிருந்து இறங்க முயன்றபோது, மரக்கிளைகளில் அவன் உடம்பு உராய்ந்ததால் சலசலப்புச் சத்தம் உண்டாயிற்று.

பேசிக் கொண்டிருந்த மனிதர்களில் இருவர் சட்டென்று குதித்து எழுந்து, "யார் அங்கே?" என்று கர்ஜித்தார்கள்.

ஆழ்வார்க்கடியானுடைய இதயத் துடிப்பு சிறிது நேரம் நின்று போயிற்று. அவர்களிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பி ஓடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஓடினாலும் காட்டில் சலசலப்புச் சத்தம் கேட்கத்தானே செய்யும்! அவர்கள் வந்து தன்னைப் பிடித்து விடலாம் அல்லவா?



அச்சமயத்தில், கோட்டான் ஒன்று சப்பட்டையை விரித்து உயர்த்தி அடித்துக் கொண்டதுடன் "ஊம் ஊம்" என்று உறுமியது.

(தொடரும்)

**காங்கிரஸின் உட்கட்சித் தேர்தல்கள் குறித்து அமரர் கல்கியின் விமர்சனம். இறுதியில் தொனிக்கும் நம்பிக்கை மட்டும் இன்றைய சூழலுக்குப் பொருந்தாதது!**



# காங்கிரஸ் தேர்தல்கள்

**நா**டெங்கும் காங்கிரஸ் தேர்தல்கள் நடந்து முடிந்தன. அங்கங்கே காங்கிரஸ் பஞ்சாயத்துக்களுக்கும், பிறகு மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் தேர்தல்கள் முடிவடைந்தன. இனி மாகாண காரியக் கமிட்டித் தேர்தல், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தேர்தல், காங்கிரஸ் அக்கிராசனர் தேர்தல்– இவை பாக்கியிருக்கின்றன. நடந்து முடிந்த தேர்தல்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு நாட்டில் ஏற்பட்டிருந்த நற்பெயரை அநேகமாக முடித்து விட்டன என்று சொல்லலாம். எங்கெங்கும் காங்கிரஸ் பஞ்சாயத்து அங்கத்தினர் ஆவதற்கும் மாகாண கமிட்டி அங்கத்தினர் ஆவதற்கும் பலமான போட்டிகள், அருவருக்கத்தக்க தேர்தல் முறைகள் பல இடங்களில் கையாளப்பட்டன. பணம் புரண்டது என்றும், லஞ்சம் தாண்டவமாடிற்றென்றும் வதந்திகள் பரவின. பொய் வோட்டுகள், பலவந்த வோட்டுகள் முதலியவை பற்றிய புகார்களுக்கு அளவே இல்லை. கைகலப்புகள், அடிதடிகள் பல இடங்களில் நடந்தன. தேர்தல் முறைகளையும் தேர்தல் முடிவுகளையும் ஆட்சேபித்துச் சிலர் சர்க்கார் கோர்ட்டுகளுக்குப் போகவும் முன்வந்தார்கள். ஆனால் மேலேயுள்ள காரியக் கமிட்டி அதற்கு முற்றுப் புள்ளி வைத்தது. "கோர்ட்டுக்குப் போகிறவர்கள் காங்கிரஸிலிருந்து தள்ளப்படுவார்கள்!" என்று தீர்மானித்தது. உடனே கோர்ட்டில் தொடுத்திருந்த வழக்குகள் வாபஸ் வாங்கப்பட்டன!

## இத்தனை போட்டி ஏன்?

**இ**ந்த வருஷத்தைப் போல் காங்கிரஸ் ஸ்தாபன பதவிகளுக்கு இவ்வளவு பலமான போட்டி இதற்கு முன் எப்போதும் ஏற்பட்டதில்லை. இத்தகைய தீவிரப் போட்டிக்குக் காரணம் என்ன? தேசத்துக்குச் சேவை செய்வதே நோக்கமாயிருக்கும் பட்சத்தில் இவ்வளவு போட்டி ஏற்படக் காரணமேயில்லை. 1947-ம் ஆண்டில் பாரத நாடு சுதந்தரம் பெற்றது. அதற்கு முன்னால் காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கு ஏற்பட்ட போட்டிகளைத் தேச சேவைக்காக ஏற்பட்ட போட்டிகள் என்று சொல்லலாம். ஆனால் 1947-ம் ஆண்டுக்கு முன்னால் ஒரு காலத்திலும் இப்படிப்பட்ட போட்டி

அமரர் **கல்கி**

கள் நடந்ததில்லை. சில சமயங்களில் அந்தந்த ஸ்தானங்களுக்குத் தகுந்தவர் களை அழைத்து வந்து அமர்த்தினார்கள்! முன்னெப்போதுமில்லாத போட்டி இப்போது ஏற்படக் காரணம் என்ன? அதிகார ஆசைதான்! காங்கிரஸ் பஞ்சாயத்துக்களைப் பிடித்தால் மாகாணக் கமிட்டியைப் பிடிக்கலாம். மாகாணக் கமிட்டியிலிருந்து காரியக் கமிட்டிக்குத் தாவலாம். பிறகு மாகாண சட்டசபை ஸ்தானங்களைக் கைப்பற்றலாம். அதிலிருந்து மந்திரி பதவியையும் ஒரு கை பார்க்கலாம். தான் மந்திரியாகாவிட்டாலும் மந்திரிகளின் மீது செல்வாக்குச் சம்பாதித்து இஷ்டம் போல் அவர்களை ஆட்டி வைக்கலாம். இத்தகைய அதிகார ஆசையும் பதவிப் பித்தும் பேய் – பிசாசுகளின் உருவம் எடுத்துப் பலரையும் ஆட்டி வைத்திருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. இது இந்த மாகாணத்தில் மட்டுமல்ல;–இந்தியா தேசம் முழுவதிலுமே நடந்திருக்கிறது.



• பட்டாபி சீதாராமய்யா

## மட்டப்பாறையின் குமுறல்

நாட்டின் விடுதலைக்காகச் சர்வ பரித்யாகம் செய்து பாடுபட்ட பழம்பெரும் தேசபக்தர்கள் பலரையும் காங்கிரஸின் இப்போதைய நிலைமை நெஞ்சைப் புண்ணாக்கிக் கண்ணீர் விடும் படி செய்திருக்கிறது. "மட்டப் பாறைச் சிங்கம்" என்று மக்களால் பரிந்து அழைக்கப்பட்ட ஸ்ரீ ஆர்.எஸ். வெங்கட்ராமய்யரின் தேசத் தொண்டையும் தீரத்தையும் தியாகத்தையும் அறியாதார் யார்? 1907–ம் ஆண்டிலிருந்து இன்று வரை தாய்நாட்டுக்கு உழைத்து வருகிறவர். இன்றைக்கும் தமிழ்நாடு காரியக் கமிட்டியில் அவர் அங்கத்தினர். அத்தகைய பழம்பெரும் தேசபக்தர் "நெல்லைச் செய்தி" ஆசிரியருக்கு எழுதியிருக்கும் கடிதத்தைக் கேளுங்கள்:–

"நாம் சர்வசங்கப் பரித்தியாகம் செய்து வளர்த்த கற்பக விருக்ஷம் நாம் உயிரோடிருக்கும்போதே வெட்டப்படுகிறது. இரவு பகல் கண்ணிமை மூட இயலவில்லை. திடீர் காங்கிரஸ்காரர்கள் என்ற பதத்தை, காலிகள், அயோக்கியர்கள், தேசத் துரோகிகள் அடங்கிய கூட்டம் என்றாலும் தகும். இவர்கள் செய்யும் தகிடுதத்தம் எந்த நாட்டு அரசியல் சரித்திரங்களிலும் கண்டதில்லை. இது தான் ஜனநாயகம் என்றால், இது நம் நாட்டிற்கு ஒவ்வாதது. நாம் பண்ணியிருக்கும் ஆத்மார்த்திகமான பிரமாணங்கள் நாம் கடைப்பிடித்த சத்ய தத்துவங்கள், போதனைகள் யாவும் காற்றில் பறக்க வேண்டியது தான். ஸ்ரீ ராமராஜ்யம் போய் ராவண ராஜ்யம்தான் காண முடியும். சதி, மித்ர பேதம், அசத்யம் இவைகள் நிழல் போல் நிரம்பி சுற்றப்பட்டிருக்கும் கூட்டங்களால் எக்காலத்திலாவது, எந்நாடாவது சிறப்புடனிருந்ததாகத் தோன்றவில்லை."

## காரியக்கமிட்டியின் தவறு

மட்டப்பாறைச் சிங்கத்தைப் போலவே இன்னும் எத்தனையோ பழைய தேசபக்தர்கள் காங்கிரஸ் ஊழல்களைப் பற்றி வருந்தியிருக்கிறார்கள்; பேசியும் இருக்கிறார்கள். காங்கிரஸின் இப்போதைய அக்கிராசனர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யாவும் மற்றும் காரியக் கமிட்டி அங்கத்தினர் பலரும் பேசியிருக்கிறார்கள்; எச்சரிக்கை செய்திருக்கிறார்

கள். பேச்சிலும் எச்சரிக்கையிலும் பயன் என்ன? காங்கிரஸில் ஊழல்களைக் களை வதற்கு ஏதாவது ஏற்பாடு செய்தார்களா? பஞ்சாயத்து அங்கத்தினர் தேர்தல் என்னும் அபத்த ஊழல் ஏற்பாட்டை ரத்து செய்து, நல்ல முறையில் நேர்மையான தேர்தல்கள் நடைபெற ஏற்பாடுகள் செய்தார்களா? கிடையாது. ஆனால் ஒன்று செய்தார்கள். "காங்கிரஸ் தேர்தல் வழக்குகளைக் கோர்ட்டுகளுக்குக் கொண்டு போகக் கூடாது'' என்று தீர்மானம் செய்தார்கள். ஏன்? கோர்ட்டுக்குப் போனால் என்ன? 1947-ம் ஆண்டுக்கு முன்னால் காங்கிரஸ் பிரிட்டிஷ் சர்க்காரோடு போராடியது. ஆகையால் காங்கிரஸ்காரர்கள் கோர்ட்டுக்குப் போகக் கூடாது என்ற நீதி அப்போது பொருத்தம். இன்றைக்குத் தேசத்தில் சுதந்தர ஆட்சி - காங்கிரஸ் ஆட்சி - நடைபெறுகிறது. கோர்ட்டுகளும் சுதந்தர இந்தியாவின் கோர்ட்டுகள். இந்தக் கோர்ட்டுகளில் நியாயம் கிடைக்காது என்று சொல்ல முடியுமா? நியாயம் கிடைக்காது என்றால் அப்படிப்பட்ட கோர்ட்டுகளை வைத்துக் கொண்டிருக்கலாமா? மற்ற வழக்குகளை மட்டும் விசாரிக்கலாமா? அந்த வழக்குகளில் நியாயம் கிடைக்குமா? காங்கிரஸ் தேர்தல்களில் ஊழல்கள் நடந்தால் குறையுள்ளவர்கள் கோர்ட்டுக்குப் போவதை ஏன் தடுக்க வேண்டும்? காங்கிரஸ் ஊழல்களுக்கு மட்டும் ஒரு நியாயம். மற்ற ஊழல்களுக்கு வேறு நியாயமா? காரியக் கமிட்டியின் தீர்மானம் தவறானது என்பதில் சந்தேகமில்லை. காங்கிரஸ் தேர்தல்களில் ஊழல்கள் நடந்திருக்கின்றன என்றும், அவற்றை மூடி மறைக்கப் பார்க்கிறார்கள் என்றும் பொது மக்கள் நினைப்பதற்கே மேற்படி தீர்மானம் ஏதுவாகும்.



• தாதாபாய் நௌரோஜி

## வெளியிலும் தொண்டு செய்யலாம்

**கா**ங்கிரஸ் ஸ்தாபன நிர்வாகத்தில் இத்தகைய ஊழல்கள் அதிகமாவது பற்றிப் பலரும் வருந்துவது இயல்பு தான். ஸ்ரீ தாதாபாய் நௌரோஜி முதல் மகாத்மா காந்தி வரையில் மகான்கள் வளர்த்த புனித ஸ்தாபனத்தின் மதிப்புக் குறைந்து வருவது அனைவரும் வருந்தத்தக்க காரியந்தான். அதனால் பெரிய விபரீதம் ஒன்றும் தேசத்துக்கு நேர்ந்து விடாது என்பது ஆறுதல் தரும் விஷயம். ஏனெனில், இன்றைக்கு இப் பாரத தேசத்தை மத்திய ஆட்சி பீடங்களிலிருந்து ஆண்டு வருகிறவர்கள் ஒப்பற்ற மகா புருஷர்கள் என்பதை நாம் அறிந்திருக்கிறோம். அவர்கள் அங்கே இருக்கும் வரையில் தேசத்துக்குப் பெரிய தீங்கு எதுவும் நேரிடுவதை அனுமதிக்க மாட்டார்கள், பார்த்துக் கொண்டிருக்கவும் மாட்டார்கள். அந்தத் தலைவர்களுடைய தியாக பலமும் ஆத்ம சக்தியும் நுண்ணறிவும் பரந்த உள்ளமும் பொதுநல ஆர்வமும் சுதந்தர பாரத நாட்டைப் பாதுகாத்து முன்னேற்றப் பாதையில் கொண்டு போகும். ஆகவே காங்கிரஸ் ஊழல்களைப் பற்றி அதிகமான கவலையும் அவசியமில்லை. உண்மையான தேசபக்தர்கள்- பொது ஜனத் தொண்டு செய்ய விரும்புகிறவர்கள் - காங்கிரஸுக்கு வெளியிலிருந்தும் தொண்டு செய்யலாம்.

**(என்ன சேதி)**

**– கல்கி, ஜூலை 30, 1950**



# அவலட்சணப் போட்டி!

**மார்ச் 8– சர்வதேச மகளிர் தினம் என்பதை வாசகர்களுக்கு நினைவூட்டுகிறோம்.**

"அழகுப் போட்டி" என்ற பெயரால் ஒரு அவலட்சணப் போட்டி சமீபத்தில் சென்னை மாநகரில் நடந்தது. பாரத நாட்டின் பழமையான பண்பாட்டுக்கும் தர்மத்துக்கும் நம் மக்களின் இரத்தத்தில் ஊறிப் போயிருக்கும் நல்ல உணர்ச்சிகளுக்கும் விரோதமான இந்த அழகுப் போட்டியில் சில முக்கியமான பிரமுகர்களும் 'ரஸிகர்'கள் என்று பாராட்டப்பட்டவர்களும் கலந்து கொண்டிருப்பதைக் குறித்து மிகவும் வருந்துகிறோம்.

பெண்கள் எல்லாரையும் தாய்மார்களாகவும் சகோதரிகளாகவும் பராசக்தியின் வடிவங்களாகவும் கருதிப் போற்றும் பண்பாடு பாரத நாட்டின் பண்பாடு. தாய்மார்களையும் சகோதரிகளையும் கொண்டு வந்து பலர் பார்க்க நிறுத்தி, முன்னழகும் பின்னழகும் பார்த்து, அலங்காரங்களை எடை போட்டு அளவிட்டு, அழகுப் போட்டி நடத்துவது எவ்வளவு அருவருக்கத்தக்க விஷயம்?

தமிழ் நாட்டின் மரபுக்கு முற்றும் விரோதமான இந்த அழகுப் போட்டியை நினைத்துத் தமிழ் மக்கள் எப்படி ஆத்திரப்படாமல் இருக்க முடியும்?

கல்விப் பயிற்சி, கைத்தொழில் திறமை, தன் முயற்சி முதலிய துறைகளில் போட்டி நடத்தினால், அப்போட்டியில் ஈடுபடுகிறவர்களின் வளர்ச்சிக்கு உதவியாயிருக்கலாம். போட்டி விட்டுக் கொண்டு அவர்கள் முன்னேற முயற்சிக்கலாம்.

ஆனால் அப்படிப்பட்ட அறிவியல் கல்வித் துறைகளிலே கூடப் போட்டிகளும் பரிசுகளும் வைக்கக் கூடாது என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள். சிலருக்குப் பரிசு கிடைப்பதால் மற்றவர்களுக்கு அசூயையும் மனச் சோர்வும் ஏற்படுமே தவிர அதனால் ஊக்கமும் வளர்ச்சியும் ஏற்படாது என்று அவ்வறிஞர்கள் கூறுகிறார்கள்.

அழகு என்பது கடவுள் அளிக்கும் வரப்பிரசாதம். மனிதர்களால் வளர்த்துக் கொள்ளக் கூடியது அல்ல. பின், அழகுப் போட்டி வைப்பதில் பொருள் என்ன? அழகுப் போட்டிப் பரிசைக் கடவுளுக்கு அல்லவா கொடுக்க வேண்டும்? அல்லது அழகிகளின் பெற்றோர்களுக்கல்லவா அளிக்க வேண்டும்?

பெண்களிலே அழகுப் போட்டி வைப்பது என்றால், அதற்குத் தராதரம் எப்படிக் கண்டு பிடித்து முடிவு செய்வது? பட்டணங்களிலே சிவப்பு நிறத்துடன் மேனி மினுக்குகிற பெண்கள்தான் அழகிகளா?

"திருநெல்வேலிச் சீமையில் மறக்குலத்து ஏழைச் சகோதரிகள் மலைக்காடுகளில் விறகு பொறுக்கிக் கட்டிக் கொண்டு நடந்து வருவார்கள். அவர்களுடைய அழகிற்குக் கால்தூசி பெற மாட்டார்கள் பட்டணத்தில் பவுடர் பூசி வளரும் நாகரிக மங்கையர்கள்!" என்கிறார் ஒரு நிருபர். இதிலிருந்து அழகை எடை போட்டுப் பார்ப்பது எவ்வளவு கடினமான வேலை என்று புரிகிறது.

மதராஸில் பொறுக்கப்பட்டவர்கள் பம்பாய்க்குப் போவார்களாம். பம்பாயிலிருந்து பொறுக்கப்பட்டவர்கள் அமெரிக்கா செல்வார்களாம். அமெரிக்காவிலே சிவப்பு நிறத்துக்கு மதிப்புக் கொடுக்க மாட்டார்கள். அங்கேயுள்ள ஸ்திரீகள் முத்துச் சுண்ணாம்பு அடித்தவர்கள் போல் வெள்ளை நிறம் பெற்றுத் திகழ்வார்கள். அவர்களும் இவர்களும் சேர்ந்து அழகுப் போட்டியிடும்போது தீர்ப்புக் கூறுவது எப்படி? தமிழ் நாட்டு நல்லறிஞர் ஒருவர் கூறுவதுபோல் அமெரிக்காவின் அழகு நீதிபதிகள், அளவு நாடா (டேப்) வைத்துக் கொண்டு நம் சகோதரிகளின் மூக்கையும் காதையும் அளந்து பார்ப்பதற்கு உடன்பட வேண்டியதாயிருக்குமே?

ஏற்கெனவே நம் நாட்டில் உள்ள கோளாறுகள் போதாவென்று, இந்த அநாகரிக, அநாசார, அவலட்சண, அழகுப் போட்டியை யாரோ சில புண்ணியவான்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். இதற்கு நாட்டு மக்கள் சிறிதும் ஆதரவு காட்ட மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

**(என்ன சேதி)**

**– மார்ச் 16, 1952 கல்கி இதழில் வெளியானது.**

அமரர் கல்கி

# ஆலய தரிசனத்தில் அமைதி காண
# தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின்
# ஆன்மீக உலாக்கள்



## நவக்கிரக வழிபாட்டுச் சுற்றுலா

● தமிழ் நாட்டிலுள்ள ஒன்பது கோள்களுக்கான கோயில்களில் வழிபாடு செய்யவும் மன அமைதி காணவும் அரியவாய்ப்பு !



## திருமால் தரிசனம்

● கோயம்பேடு-அருள்மிகு வைகுண்டவாசப் பெருமாள் ● திருநின்றவூர்-அருள்மிகு பக்தவச்சலப் பெருமாள் ● திருமழிசை -அருள்மிகு ஜெகன்னாதப் பெருமாள் ● திருப்பெரும்புதூர்-அருள்மிகு ஆதிகேசவப் பெருமாள் ● பழைய சீவரம்-அருள்மிகு லக்ஷ்மி நரசிம்மஸ்வாமி ● திருமலைவையாவூர் (தென்திருப்பதி)-அருள்மிகு பிரசன்ன வெங்கடேசப்பெருமாள் ● பொன்பதர்க்கூடம்-அருள்மிகு சதுர்புஜராமர் ● மாமல்லபுரம் (திருக்கடல்மல்லை)-அருள்மிகு ஸ்தல சயனப்பெருமாள் ● திருவிடந்தை-அருள்மிகு ஆதிவராகப் பெருமாள் (நித்ய கல்யாணப் பெருமாள்)

## தேவியர் தரிசனம்



வழிபடும் தேவியர் • அருள்மிகு தையல்நாயகி-பூவிருந்தவல்லி • அருள்மிகு தேவி காமாட்சி அம்மன்-மாங்காடு • அருள்மிகு தேவி கருமாரி அம்மன்-திருவேற்காடு • அருள்மிகு தேவி வைஷ்ணவி அம்மன்-திருமுல்லைவாயில் • அருள்மிகு தேவி கொடியுடை அம்மன் - திருமுல்லைவாயல் • அருள்மிகு தேவி செங்காளம்மன்-செம்புலிவரம் • அருள்மிகு தேவி ஆனந்தவல்லி அம்மன் (முக்கண்நாயகி)-பஞ்சட்டி • அருள்மிகு தேவி திருவுடை அம்மன்-மேலூர் • அருள்மிகு தேவி வடிவுடை அம்மன்-திருவொற்றியூர்.

## முருக வழிபாடு அறுபடை வீடு உலா

• பழனி • திருப்பரங்குன்றம் • திருவேரகம் (சுவாமிமலை)
• பழமுதிர்ச்சோலை • திருத்தணி
• திருச்செந்தூர்



| சுற்றுலா விவரம் | புறப்படும் நாள் | கட்டண விவரம் |
|---|---|---|
| திருமால் தரிசனம் | சனி, ஞாயிறு மற்றும் சிரவண நாட்கள் | ரூ. 130/- |
| தேவியர் தரிசனம் | செவ்வாய், வெள்ளி, மற்றும் பௌர்ணமி நாட்களில். | ரூ. 110/- |
| நவக்கிர வழிபாடு | ஒவ்வொரு வெள்ளி இரவு | ரூ. 625/- } தங்கும் வசதி உட்பட |
| அறுபடை வீடு | ஒவ்வொரு மாதமும் முதல் மற்றும் மூன்றாம் வெள்ளிக்கிழமை நாட்களில் | ரூ. 1500/- } தங்கும் வசதி உட்பட |




## தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்

4, ஈ.வெ.ரா. பெரியார் சாலை, சென்னை-600 003.

தொலைபேசி: (044) 560294, 561385, 584356. ஃபேக்ஸ்: 561385.

தலைமை அலுவலகம்: 8547335, 8547344, 8547346.

Internet Web Site Address: http://www.tamilnadu tourism.com


DIPR/245/DIS/98

# நடக்குமென்பார்,

**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*



பிரமாதமா ஆரம்பிக்குதுங்க, இந்த வாரம்.. அரசாங்கம் மூலமா ஏதோ நன்மை நடக்கப் போவுது. அரசுத் தொடர்பே இல்லாதவங்கன்னா, அரசாங்க உத்தியோகஸ்தர்கள் மூலமாவது பர்ஸனலா ஏதாவது லாபம் கிடைக்கும்! கொஞ்சம் புனிதமான காரியங்கள்ல மனசு போகும். கோவில், குளம்னு சுத்தற வாய்ப்பு வரும். உடல் நலத்துல கொஞ்சம் அக்கறை காட்டுங்க. சிறு காயம் அல்லது விபத்து ஏற்பட சான்ஸ் இருக்கு. குடும்பத்துல ஏதாவது விசேஷம் நடக்கலாம். அதுல உங்க பங்கு முக்கியமானதா இருக்கலாம். கொடுக்கல் வாங்கலில் உஷார்!



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

பல சிக்கல்கள்ல உழண்டுக்கிட்டிருக்கிற உங்களுக்கு இப்ப நல்ல காலம் பிறந்திருக்குது. உங்க பேச்சாற்றல், அடுத்தவங்களை சுண்டியிழுக்கற வசீகரத் தோற்றம் காரணமா, இப்ப நீங்க தொடங்கற எந்தக் காரியமும் வெற்றியடையும். தனி வாழ்க்கையிலும் பிரச்னைகளோட வீரியம் குறைஞ்சி, மகிழ்ச்சி பெருகும். பணக் கையிருப்பு திருப்தியா இருக்கும். விளையாட்டு வீரர்களுக்கு வளமான டைம். வெற்றி உங்க பக்கம்தான்! எதிர்பாராத சாதனைகள் செஞ்சி, புகழடைவீங்க. சட்டத்துறைல இருக்கறவங்களுக்கு மட்டும் நிறைய சவால்களை சந்திக்க வேண்டி வரலாம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்கள்ல சில பேர் துணிச்சலா புது முயற்சிகளில் இப்ப ஈடுபட முடிவெடுத்திருக்கீங்க. புதிய தொழில், வியாபாரம் தொடங்கறவங்களுக்கு வெற்றி நிச்சயம். அரசாங்க அனுகூலம் உண்டு. ஆனா கூடப் பிறந்தவங்க மூலமா சில பிரச்னைகள் வரலாம். கவனமா தீர்க்கப் பாருங்க. அவசரப்பட்டு மனஸ்தாபங்கள் வேணாம். தொலை தூரப் பயணங்களைத் தவிர்த்துடுங்க. சினிமாத் துறைல இருக்கறவங்களுக்குப் புகழும் பாக்கி இருக்கற – வரவேண்டிய பணமும் இப்ப வரும். வாரிசுகள் மூலம் சில சந்தோஷ சமாசாரங்கள் நடக்கலாம்.

**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



கிரகங்கள் அத்தனை அனுகூலமா இல்லை. உடல் நலக்குறைவு, காரிய தாமதம், ஏமாற்றம் இப்படி உங்களை சோர்வடையச் செய்யற விஷயங்கள் நடக்கலாம். ஆனா, தெய்வ வழிபாடு ஓரளவு பலன் தரும். பேச்சுல நிதானம் காட்டுங்க. அடுத்தவங்களைப் பத்தி அபிப்பிராயமே சொல்லாதீங்க. உங்களோட மறைமுக எதிரிகள், நீங்க எப்ப இடறி விழுவீங்கன்னு காத்துட்டிருக்காங்க. கோர்ட்டுல வழக்கு ஏதாவது நிலுவைல இருந்து ஹியரிங் வராப்பல இருந்திச்சின்னா, வாய்தா வாங்கப் பாருங்க. இந்த வாரம் தீர்ப்புகள் உங்களுக்கு சாதகமா இருக்காது!



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

இதுவரை இருந்து வந்த தடைகள் விலகி, உங்க முயற்சிகள் முழுப் பலன் தரப்போற டைம் இது! வேலைல வேகம் கூடும். உடல் ஆரோக்கியம் திருப்தியாவே இருக்கும். எழுத்தாளர்களுக்கும் பத்திரிகையாளர்களுக்கும் துணிச்சலான காரியங்களை சாதிக்கிற வாய்ப்பு வரும். சிலபேர் அதனால, ஓஹோன்னு பேரும் புகழும் வாங்கி, எங்கியோ போகப் போறாங்க. சிலருக்கு திடீர் வெளியூர் பிரயாணம் இருக்கும். ஷேர்ல பணம் போட்டவங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கற நேரம். கவனமா பார்த்து, செயல்பட்டா நல்ல அறுவடை நிச்சயம்!

**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



சூரியனும் புதனும் உங்க தோஸ்த் மாதிரி செயல்படறாங்க. ஸோ, உங்க அபிலாஷைகள் கட்டாயம் வெற்றியடையும். எலக்டிரானிக், கம்ப்யூட்டர் துறைல இருக்கிறவங்களுக்கு யோகமான வாரம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய, இனிய மாறுதல், வெளியூர்ப் பயணம், பண ஆதாயம் உண்டு. பெண்கள், ஆடம்பரப் பொருட்கள் வாங்கற வாய்ப்பு வரும். தொழில் ரீதில சில பிரச்னைகள் பூதம் மாதிரி முன்ன நிக்கும். விட்டுக் கொடுத்துப் போனீங்கன்னா, பூதம் கூட ஃப்ரெண்ட் ஆயிடும்!



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

பிரச்னையே இல்லாத சுகமான ஆளுங்கப்பா நீங்க! எல்லா கிரகமும் உங்களுக்குச் சாதகமா எழுந்து நிக்கறப்ப என்ன கவலை?

**மார்ச் 4 முதல் 10 வரை**

# நடக்கும்!

எடுத்த காரியமெல்லாம் வெற்றிதான்! பண வரவு அமோகமா இருக்கும். வெளி நாட்டுத் தொடர்புகள் மூலமா சில நல்ல வாய்ப்புகள் வரும். வேலை தேடிட்டிருக்கற இளைஞர்களுக்கு, ஆர்டர் வீடு தேடிவரும். விளையாட்டுத் துறையில இருக்கறவங்களுக்குப் புகழும் பணமும் ஒரு சேரக் கூடிவரும். லாட்டரி, ஷேர்ல எல்லாம் அளவோட லாபம் இருக்கும். சிலருக்கு சிறு விபத்து சான்ஸ் இருக்கு. ரோடுல போகறப்ப கவனமா இருங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

பிரமாதமான பிரச்னை எதுவும் வராதுன்னாலும் சிலருக்கு உத்தியோக ரீதில விரும்பத்தகாத இடமாறுதல்கள் வரலாம். ஜுரம் மாதிரி சின்ன உடல் நலக் குறைவு வரலாம். மற்றபடி ஸ்மூத்தாவே வண்டி ஓடும். நண்பர்கள், உறவினர்கள் மூலமா ஆதாயம் இருக்கும். எதிர்பாராத பண வரவு, விசேஷ நிகழ்ச்சிகள் இனிய பயணம், புண்ணியத் தல யாத்திரை இப்படி ஜாலியா பொழுது போகும். ஷேர் வேண்டாம். வீடு, மனை வாங்கற விஷயத்துல ஒண்ணுக்கு ரெண்டு தடவை யோசிச்சி செயல்படுங்க. பிள்ளைகளால நல்ல பேர் கிடைக்கும். அரசியல்வாதிகளுக்கு மட்டும் கொஞ்சம் பேர் கெட்டுப் போக சான்ஸ் இருக்கு.



சிம்ம ராசிக்காரரான முகமது அஸாருதீனுக்குத் தடைகள் விலகி, முயற்சிகள் பலன் தரக் கூடிய வாரம் இது! மெட்ராஸ் டெஸ்டுல பிச்சு உதறுங்க பாய்!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

திட்டம் போட்டபடி காரியங்கள் மளமளன்னு நடக்கும்தான். ஆனா குட்டி குட்டிப் பிரச்னைகள் குறுக்க வந்துட்டே இருக்கும். உங்க புத்திக் கூர்மையால அதை நீக்கிடலாம்! இந்த வாரம் உங்கள்ல சிலருக்கு உடம்பு படுத்தும். டாக்டர் செலவு நிறைய வரலாம். மன சஞ்சலத்துக்கு இடம் குடுக்காதீங்க. குறிப்பா ரேஸ் வீலர்ல போகும் போது குருட்டு யோசனைகள் வேணாம். மோதி வெச்சி கஷ்டப்படுவீங்க. இரவு பிரயாணத்தைத் தவிர்த்துடுங்க. புதுசா யாராவது நட்பு கொள்ள வந்தா, 'மகனே, இப்ப போயிட்டு அடுத்த வாரம் வா'ன்னு அனுப்பிடுங்க. அவங்க சும்மாவா வராங்க? உங்களுக்கு செலவு வெக்கத்தான் வராங்க!



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

குடும்பத்துல மகிழ்ச்சி கூடும். காரணம், நீங்க செய்யப் போற ஏதோ ஒரு முக்கியமான காரியம், உடனடியா பலன் குடுக்கப் போவுது. சிலருக்கு வெளியூர்ப் பயணங்கள் இருக்கும். சிலருக்கு அது தேநிலவாகக் கூட இருக்கலாம். அதாவது கல்யாணம் ஆகாதவங்களுக்கு இப்ப டும்டும் சான்ஸ் கூடி வருது! வீடு, நிலம் வாங்க ஏற்ற காலம் இது. ஸ்பெகுலேஷன்ல கூட லாபம் கிடைக்கும். பணவரவு பிரமாதமா இருக்கறதால, தாராளமா செலவும் செய்வீங்க. உடம்பைப் பார்த்துக்கங்க. சிலருக்கு வயிற்று வலி வந்து, நீங்கலாம்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

இஷ்டத்துக்கு அலையாதீங்க. ஒரு இடமா உக்காந்து, அடுத்தவங்க மூலமாவே காரியங்களை சாதிச்சிக்க முடியறபோது நீங்க எதுக்கு அலையணும்? உடல் நலத்துல அக்கறை காட்டுங்க. அடுத்தவங்க உணர்வுக்கு மதிப்பு கொடுத்து பேசுங்க. இந்த வாரம் உங்களுக்கு அத்தனை சிறப்பா இல்லாட்டியும், வீட்டுல ஏதாவது நல்லது நடக்கலாம். சிலருக்குப் புனித யாத்திரைகள் இருக்கும். பணம் கையில தங்காது. கணவன் - மனைவிக்குள்ள அபிப்பிராய பேதம் வரலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

நிதானமா செயல்பட வேண்டிய வாரம் இது. அவசரப்பட்டு எந்த முடிவும் எடுக்காதீங்க. பின்னால வருத்தப் படுவீங்க. பெண்களுக்குப் பொறுப்புகள் அதிகமாகற நேரம் இது. வேலைச் சுமை அதிகமாத்தான் இருக்கும். ஆனால் பண வரவு, உல்லாசப் பயணம் இதெல்லாம் உங்க சுமையை மறக்கடிச்சிடும். இந்த வாரம் சிலருக்கு எதிர்பாராத இடத்துலேருந்து ஏதாவது நல்ல தகவல் வரலாம். கன்னிப் பெண்களுக்குக் காதல் அனுபவம் வாய்க்கலாம். எழுத்து மூலமா எந்த உத்தரவாதமும் இப்ப குடுக்காதீங்க. யாருக்கும் ஜாமீன் கையெழுத்துப் போடாதீங்க!

அக்னிசர்மா பக்கம்



**காதல் டைரிக் குறிப்பு:**

**நேற்றென் கனவில்
கடலுக்கடியில் கண்மூடித்
தூங்கி
நட்சத்திரங்களின் மேல்
நடந்து போய் நயாகராவில்
நனையாமல்
குளித்தேன்.**

# நான் உன்னை சுவாசிக்கிறேன்

# 9

இரவு எட்டரை மணிக்கே அந்த பணக்காரத் தெரு நடமாட்டம் இழந்து மக்கள் வீடுகளுக்குள் டெலிவிஷன்களிடம் சரணடைந்திருந்தார்கள்.

அரவிந்தனின் பைக் சப்தத்திற்கு ஒரு தெரு நாய் துள்ளலாக எழுந்து கொஞ்ச தூரம் துரத்திவிட்டு நின்று விட்டது.

யாமினியின் தனி வீட்டு முன்பு நிறுத்தி கால்களை ஊன்றினான். செக்யூரிட்டி கேட்டைத் திறந்ததும் கால் வட்டப்பாதையில் செலுத்தி போர்ட்டிகோவில் நிறுத்தி சைடு ஸ்டாண்டில் சாய்த்து வைத்துவிட்டு அழைப்பு மணியை ஒலிக்கச் செய்தான்.

உள்ளே முப்பது விநாடிகள் சங்கீதம் பாடியது.

வேலைக்காரம்மாள் கதவைத் திறந்து, "நீங்களா? வாங்க. வித்யா மட்டும்தான் இருக்குது. அய்யாவும், அம்மாவும் வெளில போயிருக்காங்க" என்றாள்.

"எங்க?" என்றான் சற்றே ஏமாற்றத்துடன்.

"தெரியலைங்க."

"வித்யா எங்க?"

"மாடியில விளையாடிக்கிட்டு இருக்கு. கூப்புடவா?"

"வேணாம். நான் போய்ப் பார்த்துக்கறேன்."

வளைந்த மாடிப் படிகளில் ஏறி மாடிக்கு வந்தான்.

ஒரு ஹால் சைசில் இருந்த அறையில் வித்யா கம்ப்யூட்டரில் கத்திச் சண்டை போட்டுக் கொண்டிருந்தாள். சப்தம் கேட்டுத் திரும்பி, "ஹாய் அங்கிள்!" என்று விட்டு மீண்டும் சண்டையைத் தொடர்ந்



கொண்டு தோளில் ஏறி ஏக சேஷ்டைகள் செய்கின் றனவே குழந்தைகள்.

எத்தனை மணிக்கு வரட் டும் என்று போனில் கேட்ட போது, இன்றைக்கு எந்த ப்ரோகிராமும் இல்லை, ஏழு மணிக்குமேல் எப்போது வேண்டுமானாலும் வா என்று சொன்னாளே...

சொன்னபடி என்னை எதிர்பார்த்து வீட்டில் இருக்க வேண்டாமா? ஏதோ அவசர வேலை என்று சென்றிருந் தாலும் நான் வந்தால் தெரி விக்கச் சொல்லி வீட்டில் தகவல் தந்துவிட்டுப் போக வேண்டாமா? இதுவே இன்று அவள் அலுவலகம் சம்பந்தப் பட்ட ஒரு அதிகாரி வீட் டிற்கு வருவதாக இருந்தால் இப்படிச் செல்வாளா?

பெங்களூரிலிருந்து இளங்கோ தன் குடும்பத் தோடு சென்னை வந்து விட் டால் மட்டும் இவள் அலு வலகத்திற்கு லீவு போட்டு விட்டு அவனுக்கு வீட்டில் விருந்து கொடுத்து இரண்டு குடும்பமுமாக கிஷ்கிந்தா, எம்.ஜி.எம். டிஸ்னி வேர்ல்ட் என்று பிக்னிக் போய் விடு தாள்.

## பட்டுக்கோட்டை பிரபாகர்

''வித்யா, அம்மாவும் அப்பாவும் எங்க போயிருக் காங்க?''

தெரியாதென்பதை உதட்டைப் பிதுக்கி, கையை அசைத்து அபிநயித்ததோடு சரி. கவனம் கம்ப்யூட்டர் வீரன்மேல் மட்டுமே.

"எப்ப வருவாங்கன்னாவது தெரியுமா?"

இவன் பக்கம் திரும்பாமலேயே மீண்டும் ஒரு அபிநயிப்பு!

எரிச்சலாக வந்தது அவனுக்கு.

அப்படியே அக்காவின் குணம். மாமன் வந்திருக்கிறானே என்று கொஞ்சமாவது ஆர்வப்படுகிறாளா?

நீ யாரோ! வருகிறாயா? வா! போகிறாயா? போ! பத்து வயதில் இந்த அலட்சியம் எப்படி வருகிறது? சினிமாவில் மட்டும் 'மாமா' என்று ஓடி வந்து கழுத்தைக் கட்டிக் வார்கள்.

மாதம் ஒரு லட்சம் சம்பாதிக்கிறவனாக நானிருந்தால் யாமினி வாசலிலேயே நாற் காலி போட்டமர்ந்து காத்திருப்பாள்.

மௌனமாக எனக்குச் சொய்யப்படுகிற அத்தனை அவமரியாதைகளுக்கும் பதில் சொல்லத்தான் போகிறேன் யாமினி. என் வீட்டு வரவேற்பறையில் என் வருகைக்காக நீ காத்திருக்கும் ஒரு காலம் கண்டிப்பாக வரும். வர வைப்பேன்.

"அங்கிள், செவன்த் ரவுண்ட்லயும் நான் ஜெயிச்சிட்டேன்" என்று வித்யா குதூ கலித்தபோது ஆத்திரம்தான் ஏற்பட்டது.

"நீ விளையாடிக்கிட்டிரு" என்று விட்டு

கீழே இறங்கி வந்து ஸோபாவில் அமர்ந்து கைக்குக் கிடைத்தப் புத்தகத்தை எடுத்துப் புரட்டினான்.

"எதாச்சும் குடிக்கத் தரட்டுமா தம்பி?"

அந்த வேலைக்காரம்மாள் வந்து கேட்டாள்.

"ஒன்றும் வேணாம்."

அரை மணி நேரம் கழித்து காரில் வந்து யாமினி மட்டும் இறங்கி உள்ளே வந்தாள்.

"அட! என்னடா இந்த நேரத்தில?" என்று ஹீல்ஸ் கழற்றி ஓரமாக வீசினாள்.

"நான் எட்டரைக்கே வந்துட்டேன். வர்றதா போன்ல சொன்னனே..."

"ஸைகுட்னெஸ்! சொன்னே இல்ல? ஒரு நிமிஷம். தேவகி, வித்யா சாப்புட்டாளா?"

"விளையாடிட்டு இருந்திச்சிம்மா. கூப்புட்டேன். வேணாம்னு சொல்லிச்சி. இப்பப் போய்ப் பார்த்தா தூங்கிடுச்சி."

"சரி, விடு. நான் வெளில சாப்டுட்டேன். அரவிந்த், நீ சாப்புடறியா?"

"நான் சாப்பிட்டுட்டுதான் வந்தேன்" என்று பொய் சொன்னான்.

"தேவகி, அப்போ நீ சாப்புட்டுட்டு எல்லாம் எடுத்து வெச்சிடு. அரவிந்த், இரண்டு நிமிஷம் இரு. டிரெஸ் மாத்திட்டு வந்துடறேன்."

பத்து நிமிடங்கள் கழித்து நைட்டியில் இறங்கி வந்து அவன் எதிரில் அமர்ந்தாள்.

"மச்சான் எங்கேக்கா?"

"அவர் ஆபீஸ் வேலையா திடீர்னு டெல்லி போறேன்னார். டிரைவரை எதுவும் வேலை இல்லைன்னு ஆறு மணிக்கே அனுப்பிட்டேன். அதனால நானே போய் ஏர்போர்ட்ல டிராப் பண்ணிட்டு வர்றேன்."

"வீட்ல சொல்லிட்டுப் போகக் கூடாதா?"

"ஸாரிடா. நீ வர்றேன்னு சொன்னதையே மறந்துட்டேன். ஏன், போரடிச்சுடிச்சா? வித்யாவோட பேசிட்டிருந்தியா?"

"அவ இளங்கோ மாமாகிட்டதான் பேசுவா!"

"ஆரம்பிச்சுட்டியா? இரு. பழம் சாப்பிடறியா?"

யாமினி ரெஃப்ரிஜிரேட்டர் திறந்து ஆஸ்திரேலிய கிரேப்ஸ் ஒரு தட்டில் வைத்து எடுத்து வந்து இருவருக்கும் பொதுவான டீப்பாயில் வைத்து ஒன்றை எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள்.

"என்ன முடிவு செஞ்சே அரவிந்த்?"

"எதைப் பத்தி?"

"நான் சொன்ன கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனில சூபர்வைசரா சேர்றதைப் பத்தி..."

"அந்தப் பேச்சை விட்டுடலாமே."

"ஏன் நல்லது சொன்னா புரிஞ்சுக்க மாட்டேங்கறே? அப்பாகிட்ட கடுமையா சண்டை போட்டியாமே."

"சண்டை போடலை. என் கருத்தைச் சொன்னேன்."

"ஏண்டா வயசான காலத்தில அவரை நோகடிக்கிறே?"

"நான் நொந்து போறதைப் பத்தி யாருக்கும் கவலை இல்லையா?"

"உன்னோட சோகம் ஒரு கானல் நீர் மாதிரிடா!"

"என்ன கானல் நீர்?"

"தூரத்தில ரோட்டுல தண்ணி தேங்கியிருக்கிற மாதிரி இருக்கும். கிட்டப் போய்ப் பார்த்தா ஒண்ணும் இருக்காது."

"அந்த மாதிரி?"

"அந்த மாதிரி உன் பிரச்னைங்கறது ஒண்ணுமே இல்லை. நீ அதை பெருசாப் பேசறே."

கடச்சுட பதிலடி கொடுக்க உள்ளுக்குள் புறப்பட்ட வார்த்தைகளை சிரமப்பட்டு தடுத்து நிறுத்தினான் அரவிந்த்.

இந்த சந்திப்பின் நோக்கம் வாதம் செய்வதல்ல. என் பக்க நியாயத்தை இவனிடம் ஸ்தாபிப்பதல்ல. இவள் மூலம் காரியம் சாதித்தல் மட்டுமே என் நோக்கம். விழுங்கு! மாத்திரையைப் போல ஆத்திரத்தை விழுங்கு!

"சரிக்கா. என்னைவிட உனக்கு வயசும் அதிகம். அனுபவமும் அதிகம். உன் கோணம் சரியானதாக்கூட இருக்கலாம். இதை விட்டுடுவமே. இப்ப நான் வந்தது வேற ஒரு விஷயத்தைப் பத்திப் பேசறதுக்கு."

"சொல்லு. பாரு, கிரேப்ஸ் எடுத்துக்கவே இல்லையே..."

இரண்டு கிரேப்ஸ் பிய்த்து எடுத்துக் கொண்டான். துவக்கத்திற்குத் தவித்தான்.

"என்ன, சொல்லு!"

"உன்னோட ஆபீஸ் சம்பந்தப்பட்ட விஷயத்தில நான் தலையிடறதா நினைக்கக் கூடாது. எனக்காக நான் சொல்ற ஒரு ஏஜென்சிக்கு நீ ஒரு ஃபேவர் செய்யணும். செய்வியா?"

"என்ன செய்யணும்? யாருக்கு?"

"அன்னைக்கு நான் உன்னைப் பார்க்க வந்தப்போ கேரவன் ஏஜென்சியை டெர்மினேட் பண்றதா அதோட மேனேஜர் பிருந்தாகிட்ட தீர்மானமாப் பேசி அனுப்பிச்சியே..."

"யா.... யா! அதுக்கென்ன"

"ஏஜென்சியை டெர்மினேட் பண்ணி

ஆர்டர் அனுப்பிட்டியா?"

"இன்னும் இல்லை."

"அந்த ஏஜென்சிக்கு இன்னும் ஒரு வருஷம் சான்ஸ் கொடுத்துப் பார்க்கக் கூடாதா?"

"உனக்கென்ன அந்த ஏஜென்சி மேல இத்தனை இன்ட்ரெஸ்ட்?"

"அந்தப் பொண்ணு பிருந்தா எனக்குத் தெரிஞ்ச பொண்ணுக்கா. ஏஜென்சி ரத்தானா ஒம்போது பேர் வேலை போயிடும்னு ரொம்ப வருத்தப்பட்டா. எங்கக்காக்கிட்ட நான் பேசிப் பார்க்கறேன்னு சொன்னேன். என்னக்கா சொல்றே?"

யாமினி பதில் பேசாமல் கிரேப்ஸ் பிய்த்து சாப்பிட்டபடி இருந்தாள்.

"சொல்லுக்கா!"

"இது நிர்வாகத்தோட சட்டதிட்டத்துக்கு உட்பட்டு எடுத்த முடிவுடா."

"நீ நினைச்சா இன்னொரு வருஷம் வாய்ப்புத் தர முடியும்."

"ஏன்டா, உன்னோட பர்சனல் மேட்டர் பத்தி நான் பேசினா உனக்கு அது பிடிக்கலை. பேச வேணாமேன்னு சொல்றே. என்னோட அஃபிஷியல் மேட்டர் பத்தி நீ பேசறது மட்டும் சரியா? நோ! இதில எல்லாம் நீ தலையிடக் கூடாது. நான் எடுத்த முடிவு எடுத்ததுதான்."

"எக்காரணம் கொண்டும் உன் முடிவை மாத்திக்க மாட்டியா?"

"மாட்டேன்."

"அம்பதாயிரம் ரூபா பணம் கொடுத்தா மட்டும் மாத்திக்குவியா?"

யாமினி அதிர்ச்சியுற்று, உடனே சமாளித்து, "என்ன உளர்றே?" என்றாள்.

"அம்பதாயிரம் கொடுத்தா ஃபேவரா காரியம் முடிக்கிறதா அவங்க ஆபீசுக்கு நீ பியூன் மூலமா தூது அனுப்பலை?"

முகம் சிவந்த யாமினி, "நான்சென்ஸ்! என்ன பேசறே?" என்றாள்.

"தெரியும்க்கா. மறைக்காதே! கேள்விப்பட்டதும் எனக்கு எவ்வளவு அதிர்ச்சியா இருந்திச்சி தெரியுமா?"

"முட்டாள்தனமாப் பேசாதே! நான் அப்படிப்பட்டவ இல்லை."

"நீ லஞ்சம் கேக்கலைன்றது உண்மைன்னா, அதை நிரூபி!"

"எப்படி?"

"என் வார்த்தைக்கு மதிப்பு கொடுத்து அந்த ஏஜென்சியை ரத்து செய்யாம இரு!"

"ரொம்ப புத்திசாலித்தனமாப் பேசறதா நினைப்பா? உனக்குக் காரியம் ஆகணும்னு இப்படி அநியாயமா ஒரு பொய் சொல்லி மடக்கப் பார்க்கறியா?"

"நான் சொன்னது பொய் இல்லைன்னு என்னால நிரூபிக்க முடியும்."

யாமினி தவித்தாள். தன் தவிப்பை மறைக்க எழுந்து சென்று தண்ணீர் குடித்துவிட்டு வந்தாள்.

"ஓகே அரவிந்த். அந்த கேரவன் ஏஜென்சி மேல நான் எந்த நடவடிக்கையும் எடுக்கலை. ஒரு வருஷத்துக்கு ஏஜென்சியை ரத்தும் செய்யலை."

"தேங்க்யூக்கா!"

"இரு! ஆனா ஒரு கண்டிஷன்!"

"என்ன?"

"உன் வார்த்தையை நான் கேக்கறதால என் வார்த்தையை நீ கேக்கறதுதான் நியாயம். நான் சொன்ன கன்ஸ்ட்ரக்ஷன் கம்பெனில சூப்பர்வைசரா நீ வேலைக்கு சேர்றதா இருந்தா, நான் உனக்கு இந்த உதவியைச் செய்றேன். என்ன சொல்றே?"

"என்னக்கா இது? இதுக்கும் அதுக்கும் என்ன சம்பந்தம்?"

"இருக்கு. யோசி! நாளைக்கு உன் பதிலைச் சொல்லு. என் கன்டிஷனுக்கு நீ ஒத்துக்கிட்டா உன் கோரிக்கைக்கு நான் ஒத்துக்கறேன். நோ மோர் ஆர்க்யுமென்ட்ஸ்!" என்று எழுந்தவள், "குட் நைட்!" என்றுவிட்டு மாடிப்படிகளில் ஏறினாள்.

யோசனையோடு உட்கார்ந்தபடி இருந்தான் அரவிந்த்.

(தொடரும்)

'ஆக்ஷன் ஸ்டார்' ஜாக்கி சானை (வயது 43) கௌரவிக்கும் பொருட்டு கடந்த ஆண்டு காம்பியா நாட்டில் தபால் தலை வெளியிடப்பட்டது. இந்த ஆண்டின் துவக்கத்திலே தான் சீனியா நாடு ஆறு தபால் தலைகளை வெளியிட்டிருக்கிறது! ஜாக்கி சானின் இந்த விசேஷ தபால் தலைகளின் மொத்த விற்பனையில் பத்து சதவீதத்தைப் பள்ளிக் கூடங்களில் விளையாட்டுத்துறை அபிவிருத்திக்காக செலவழிக்கப் போகிறார்களாம்!

— அ. குமார்

# நாளைக்கு இவங்க பெரிய ஆளு!

"யாருடைய சிபாரிசும் இல்லாமலே தமிழக அணியிலுள்ள சில வீரர்கள் விரைவில் இந்திய கிரிக்கெட் அணியில் இடம் பெறுவார்கள்" என்று சில வாரங்கள் முன்பு ஸ்ரீகாந்த் நமக்களித்த பேட்டியில் கூறியிருந்தது ஞாபகமிருக்கும்.

அந்தச் சிலரைப் பற்றி ஒரு சிறு அறிமுகம் இங்கே :

## ரூபன் எஸ். பால் (24)

தமிழக அணியின் அதிரடி ஆட்டக்காரரான இவர், விக்கெட் கீப்பரும் கூட! கோவாவுக்கெதிரான தமது முதல் ரஞ்சி ஆட்டத்தில் 48 பந்துகளில் சதம் அடித்த 'ஜெயசூர்ய வம்ச'த்தவர். அந்த மேட்சில் தொடர்ச்சியாக இவர் அடித்த ஐந்து சிக்ஸர்கள், தேசிய அளவில் கவனம் பெறக் காரணமாயிருந்தது. இதுவரை ஆடிய பத்து மேட்ச்சுகளில் மூன்று சதம்!



• ரூபன் பால்



• டி. குமரன்

## ஆர். வசந்தகுமார் (24)

தமிழக அணியின் துவக்க ஆட்டக்காரரான இவர் இதுவரை ஆறு ரஞ்சிப் பந்தயங்களில் ஆடியிருக்கிறார். அதில் மூன்று சதம்! கோவாவுக்கு எதிராக இவர் அடித்த 154ம், கர்நாடகாவுக்கு எதிராக அடித்த 123ம் குறிப்பிடத்தக்கவை. இரண்டு வருடங்களுக்கு முன்பு இந்தியா வந்த இங்கிலாந்து 'ஏ' அணியுடன் மோதும் போது இவர் எடுத்த 78 ரன்கள், நம் தேர்வாளர்களின் கவனத்தை இவர்புறம் திருப்பி இருக்கிறது. மிக விரைவில் இந்திய அணியின் ஓபனராக வரக்கூடும் என்பது பலமான பேச்சு.

## டி. குமரன் (23)

அதிவேகப் பந்து வீச்சாளரான குமரன், தனது முதல் மேட்சில் 8 விக்கெட்டுகள் எடுத்ததன் மூலமும் அடுத்த மேட்சிலும் தொடர்ந்து (உ.பிக்கு எதிராக) 5 விக்கெட்டுகளை வீழ்த்தியதும், மாநில அளவில் இவரை ஸ்டார் ஆக்கி இருக்கிறது. கடந்த வருடம் மட்டும் நாலே மேட்சில் 20 விக்கெட்டுகள் எடுத்தவர். இன்னொரு ஸ்ரீநாத் என்று இவரைக் குறிப்பிடுகிறார்கள்.

## ஸ்ரீதரன் ஸ்ரீராம் (24)

இடது கை பேட்ஸ்மன். இடது கை ஸ்பின்னர். இதுவரை ஆடிய 14 மேட்சுகளில் 1050 ரன்களும் 40 விக்கெட்டுகளும் எடுத்து கவனம் பெற்றிருக்கும் ஸ்ரீராம், ஆந்திர அணிக்கு எதிராக அடித்த 210 ரன்கள் கூடத் தன்னை தென் மண்டல அணியில் இன்னும் இடம் பெறச் செய்யாதது பற்றி லேசாக வருந்துகிறார்.

தேர்வு கமிட்டி கண் திறந்தால் ஓர் அற்புதமான ஆல் ரவுண்டர் நம் அணிக்குக் கிடைப்பார்!



• ஸ்ரீராம்



• வசந்தகுமார்

## திருவிடைமருதூர் ஸ்ரீ சியாமளா தேவி அம்மன் ஆலய நூதன திருப்பணி

நஞ்சை வளமிக்க தஞ்சை தரணியில் மத்தியார்ஜுனம் எனப் போற்றப்படுவதும், திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நாயன்மார்கள் நால்வராலும் போற்றிப் பாடல்கள் பெற்றதுமான, காவிரி நதிக்கரையின் தென்பால் அமைந்துள்ளதும், மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியவற்றால் பெருமை பெற்றுள்ளதுமான திருவிடைமருதூர் அருள்மிகு மகாலிங்க சுவாமி ஆலயத்தின் மேற்பகுதியிலும், பழம்பெரும் தொன்மை வாய்ந்த ரிஷிபுரீச்வரர் திருக் கோயிலுக்கு தென்புறமாக அமைந்ததும், பழம்பெரும் ஆஞ்சநேயப்பெருமாள் ஆலயத்திற்கு கிழக் கேயும், மயிலாடுதுறை-கும்பகோணம் நெடுஞ்சாலையில் மேலசாலை கச்சேரித்தெருவில், பன் னெடுங்காலமாக எழுந்தருளி அருள் பாலித்து வருவதுடன் பக்தர்களுக்கு வேண்டும் வரம் அளித்து சகல ஜனங்களுக்கும் தனம், தான்யம் மற்றும் சகல சௌபாக்கியங்களையும் அள்ளித்தந்து காத்து ரக்ஷிப்பவளும், அருட் பொலிவுடன் மகாகவி காளிதாசரால் போற்றிப் பாடப் பெற்றவளுமான

**அருள்மிகு சியாமளாதேவி அம்மன் திருக்கோயில்**

காஞ்சி முனிவர்களின் ஆக்ஞைப்படி திருப்பணி தொடங்கி கர்ப்பகிரகம்-அர்த்த மண்டபம்-மகா மண்டபம் ஆகியவைகளை நூதன முறையில் சிறப்புற அமைத்து வலம்புரி விநாயகர், பாலமுருகன், வெக்காளியம்மன் மற்றும் பரிவார தேவதைகளான இருளம்மன்-நாககன்னிகை-வீரன் முதலியவற்றுக்கு புதிதாக ஆலய மண்டபங்களை எழுப்பி திருப்பணி வேலைகள் நடைபெற்று வருவதால் இப்பணி செம்மையுற இதனைக் காணும் அருளன்பர்கள் தங்களால் இயன்ற பொரு ளுதவி செய்து திருப்பணியை முற்றுவித்து அம்பிகையின் அருளைப் பெற்று சகல ஸம்பத்துகளையும் பெற்றடைய வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

**அம்பாள் பக்தர்கள் மற்றும் கிராமவாசிகள்**
**திருவிடைமருதூர்**

நன்கொடை செலுத்துவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு செக்காகவோ, டிராப்ட்டாகவோ, M.O. மூலமோ அனுப்பி வைத்து இரசீது பெற வேண்டப்படுகிறார்கள்:

**M. சந்திரசேகரன்**
(அருள்மிகு சியாமளாதேவி அம்மன் திருக்கோயில் திருப்பணிக் கமிட்டித் தலைவர்)
19, திருமஞ்சன வீதி, திருவிடைமருதூர் – 612 104, தென் இந்தியா

---

# வட்டமேஜை

◆ தொடர்ந்து 5 வாரங்களாகக் கலக்கி விட்டீர்கள். தேர்தல் ஸ்பெஷல் உண்மையிலேயே பிரமாதம்! அரசியல் தலைவர்களது கால்படாத இடம் கூட இருக்கும் போல் உள்ளது. ஆனால் தாங்களோ தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் சென்று அலசி ஆராய்ந்து செயல்பட்ட விதம் எங்களை அயர வைத்துவிட்டது.
சிதம்பரம், ஜி. துளசி.

◆ நா.இ.ந.இ. படம் பழைய பட பாணியில் அமைந்ததால் உள்ளத்தை அள்ளிக் கொண்டு போகவில்லை என்று குறிப்பிட்ட விமர்சனம், ரசிக்கும்படி இருந்தது.
சென்னை - 23, த. சத்தியநாராயணன்.

◆ 'சவ ஊர்வலத்தில் வருபவர் மட்டுமல்ல; நடிகைகளைக் கண்டால் பிணமே எழுந்து ஓடும்' என்ற தராசின் பதில் சிரிப்பை வரவழைத்தது. மக்களின் சினிமா மோகம் எப்படிப்பட்டது என்பதை உணர்த்தியது.
தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

◆ அட்டைப்படமும், தலையங்கத்தின் ஆரம்பப் பகுதியும் நடுநிலைமை இதழான கல்கியும் ஒரு பக்கமாக சாயத் துவங்கிவிட்டதோ என எண்ணத் தூண்டியது. தலையங்கத்தை முழுதுமாகப் படித்து முடித்த பின்னர், கல்கியின் நடுநிலைமையில் மாற்றமே இல்லை என்பது புரிந்துவிட்டது. நாட்டு நலனில் கல்கிக்கு உள்ள நல்லெண்ணமும் வெளிப்பட்டது. என்றும் கல்கி, கல்கிதான்!
பாண்டிச்சேரி - 4, பூங்கோதை கிருஷ்ணராஜ்.

◆ "நாட்டின் எதிர்காலம் தமிழர் கையில்" தலையங்கம் கண்டேன். வாக்காளரின் கடமையை அலசி ஆராய்ந்து நாட்டின் எதிர் காலத்தில் ஆழ்ந்த அக்கறையுடன் கருத்துக்களை வெளியிட்டமைக்குப் பல கோடி நன்றிகள்.
தக்கோலம், அ. முஸ்தபா.

◆ ஒயின்ஸ் ஷாப்பில் கள்ளத்தனமாக பார் நடப்பதைத் தடுக்க வேண்டும். ஒரு நடவடிக்கை இல்லை. பார் நடப்பதால் இளைஞர்கள் காப்பி குடிப்பது போல் குடித்துப் பழக ஒருவித வாய்ப்பு தந்தது போல் உள்ளது. பொது இடங்களில் பல பிரச்னை ஏற்படுகிறது. முதல்வர் இதைப் படித்து, நடவடிக்கை எடுப்பார் என்று நம்புகிறேன்.
திருத்தங்கல், ச. சிதம்பரம்.

◆ கோவையில் குண்டு வைத்தது முஸ்லீம் நாடாக இருக்கலாம். தீவிரவாத அமைப்பிற்குத் தடை விதித்தது நல்லது. ஆனால், கடந்த மாதமும், இப்பொழுதும் பி.ஜே.பியின் ஆதரவு இயக்கங்கள் நடத்திய அட்டகாசம், அச்சுறுத்தல் உலகமே காணாதது. ஜாதி மத பேதமின்றி மக்களைப் பாடாய்ப்படுத்தி விட்டனர். இந்த முறை காவி டிரஸ்ஸுடனேயே கலாட்டா செய்தனர். பெண் குழந்தைகள் வீடு திரும்பும் வரை நாங்கள் அழுத அழுகை அப்படிப் பட்டது. வயதானவர்களும், குழந்தைகளுடனும் வெளியே சென்றவர்கள் ஆர்.எஸ்.எஸ். கலாட்டாவில் ஓடிய ஓட்டம், நினைத்தாலே நெஞ்சம் பதறுகிறது. அ.தி.மு.க.வும் கலாட்டாவில் சேர்ந்த பின்புதான், தா.மா.கா., தி.மு.க., ரஜினி ஆதரவாளர்கள் உடைமை சூறையாடப் பட்டது. மலையாளம் கலந்த தமிழில் பல பி.ஜே.பியாளர்கள் ஊரை வலம் வந்தனர். மத வெறியர்களின் கையில் நாங்கள்! மதவெறி ஒழிய அரசு நடவடிக்கை எடுக்கட்டும்.
கோவை, பத்மா.

◆ பி.ஜே.பியை மதவாதக் கட்சி, மதவாதக் கட்சி எனக் கூறியும், மேடைகளில் பேசியும் வந்த பலனை இப்பொழுது அறுவடை செய்கிறார்கள். இந்த பிரசாரம் அத்வானியின் உயிரைப் போக்க சிறுபான்மையினரான முஸ்லிம் சகோதரர்களைத் தூண்டி விட்டுள்ளது. பி.ஜே.பி. ஆட்சியில் உள்ள இடங்களில் சட்டம், ஒழுங்கு சரியாகத்தான் உள்ளது. சிறுபான்மையினருக்கு இடையூறு இருந்ததில்லை. பிறகு எப்படி பி.ஜே.பி.யைக் குறைகூற முடியும் உங்களால்?
ராஜன் நகர், எம். சுதா.



◆ தேர்தல் ஸ்பெஷல் 1 to 5 என்போன்ற குடும்பத் தலைவிகளுக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. நாட்டு நடப்பு மிகத் துல்லியமாகத் தெரியும் வண்ணம் அமைந்துள்ளது. நன்றி!
சென்னை - 44, கே. சுந்தரா.

◆ கல்கியில் வந்தது; காரியம் நடந்தது தலைப்பில் பிரசுரமாகியுள்ள தலைமைச் செயலகக் கடிதத்தில் 28.12.98 நாளிட்ட கல்கி இதழில்... என்று தவறாக அச்சாகியுள்ளது. 28.12.97 நாளிட்ட கல்கி இதழில்.... என்றிருக்க வேண்டும். சீர்காழி ரேவதி எழுதிய ஒரே ஜோக், பக்கம் 69லும் மறுபடியும் பக்கம் 81லும் பிரசுரமாகியுள்ளது. சீட் இரண்டு, ஆள் ஒன்று... என்பதாலா?
சென்னை - 61, வி.எஸ். சுதர்சனம்.

(தவறுக்கு வருந்துகிறோம் - ஆர்.)

# பெயர் எனும்...

"உங்கள் பெயர் சற்று அசாதாரணமானது!" என்றார் என்னைச் சந்தித்த நண்பர். நான் பதில் ஒன்றும் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டேன்!

சென்னை வீட்டில் டெலிபோன் வைத்த போது, என் பெயர் டைரக்டரியில் இருக்கிறதா என்பதற்காகப் புரட்டிப் பார்த்தேன். உதயமூர்த்தி என்ற பெயரில் ஒரே ஒரு பெயர் - என் பெயர் மட்டுமே இருந்தது! 'இவ்வளவு பெரிய சென்னையில் வேறு ஒருவருக்குக் கூட இந்தப் பெயர் இல்லையா?' என்ற சிந்தனை ஓடியது. குறைந்தபட்சம் பெயரிலாவது ஒரு தனித்தன்மை இருப்பதை இது எனக்கே உணர்த்தியது!

ஆனாலும் மனிதர்கள் பழக்கத்திற்கே அடிமையாகிப் போயிருக்கிறார்கள். மாறுபட்ட எதையும் எளிதில் ஏற்றுக் கொள்ளாத சமுதாயம் என் பெயரையும் ஏற்றுக் கொள்ளவில்லை!

எனது ஏழாவது வகுப்பு ஆசிரியர் வாஞ்சிநாத அய்யர், "ஏய் அஸ்தமனமூர்த்தி! எழுந்திருடா!" என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது; சற்று வெட்கமாகவும் இருந்தது!

மேல்நாடுகளில், "ஒருவர் பெயரை எப்படி எழுதுவது? எப்படி உச்சரிப்பது?" என்று அவர்களைக் கேட்டு நன்கு தெரிந்து கொண்டுதான் அழைப்பார்கள். பெயர் என்பது ஒரு மதிப்புக்குரிய விஷயம்; கிண்டல் செய்கிற விஷயமல்ல! நல்லவேளை, எனது சக மாணவர்கள் பள்ளியில் அப்படி என்னை அழைக்க முற்படவில்லை. நான் நன்றாகப் படிப்பவன் என்று பெயர் வாங்கி இருந்தது ஒரு காரணமாயிருக்கலாம்.

என் பெரியம்மாவுக்கும் என் பெயர் பிடிக்கவில்லை. தில்லையாடியில் வாழ்ந்து வந்த என் பெரியம்மாவுக்கு வாரிசுகள் இல்லை. அவர்களுடைய மகளும் இளவயதிலேயே விதவையாகி விட்டார். எனவே அவர்கள் என் பெற்றோரின் அனுமதி கேட்டு, என்னை அவர்களது சுவீகார புத்திரனாக எடுத்துக் கொண்டார்கள். அவர்களுக்கு என் மீது அபாரமான பிரியம்; மிகுந்த நெறிகளோடு வாழ்ந்தவர்கள்; சாப்பாட்டிலிருந்து எல்லாம் அந்தந்த நேரத்திற்குத்தான் நடக்கும். அவர்கள் ஒரு ரசம் வைத்தாலும் மணக்கும். அவர்களது மாடி வீடு, நிலம் நீச்சு, அவர்களுக்குச் சொந்தமான பிள்ளையார் கோயில் என்றெல்லாவற்றையும் எனக்கு சுற்றிக் காட்டினார்கள்.

விடுமுறை நாட்கள் வரும்போதெல்லாம் அவர்கள் வீட்டில் ஒரு வாரம் அல்லது




இரண்டு வாரம் தங்கி இருப்பேன். அங்கு தங்கி விட்டு எங்கள் வீட்டுக்குத் திரும்பும் போதெல்லாம், "அங்கே நல்ல பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறான். சொன்னபடி கேட்கிறான்" என்று என் தாய் சொல்வார்கள்.

அவர்கள் வீட்டிலே ஒரு விஷயம். வீடு பெரிய இரண்டு கட்டு வீடு. வீட்டின் பின் கட்டிலே வாழ்ந்த, வயதானவர்கள் இரண்டு பேர் காசிக்குப் போனார்கள். போனவர்கள் திரும்பவே இல்லை. போகுமுன்பாக வீட்டின் அறைக்குள் பூமியிலோ, சுவரிலோ எல்லா நகைகளையும் பணத்தையும் புதைத்து வைத்து விட்டுப் போனார்கள் என்பதுதான் முக்கியமான விஷயம்.

அது சம்பந்தமாகச் சொல்லப் போனால் "புதையல்" என்று நான் ஒரு கதை எழுதியதுதான் மிச்சம்! பல இடங்களில் தோண்டியும் புதையல் கிடைக்கவில்லை!

அவர்கள் தாத்தா சின்னக்கண்ணு கட்டியிருந்த பிள்ளையார் கோயில் மிக

அழகானது! பக்கத்தில் ஒரு அழகிய குளம். மறுபக்கத்தில் உப்பாறு எனப்படும் ஆறு. இப்போது அந்த ஆற்றின் குறுக்கே பாலம் கட்டப்பட்டுவிட்டபடியால் கோயில், ஊரின் நுழைவாயிலில் அமைந்து எல்லோரையும் வரவேற்கிறது.

தெருவில் உற்சவமூர்த்தியாக விநாயகர் ஊர்வலம் வர, ஸ்தபதியை ஒரு பெரிய செப்புச் சிலை வடிக்கச் சொல்லிப் பணம் கொடுத்தார்கள். பல ஆண்டுகளாகியும் சிலை வரவில்லை. ஒரு சின்ன, அழகிய பிள்ளையாரின் செப்புச் சிலையைக் கொடுத்து, "இதை வைத்துக் கொள்ளுங்கள், பிறகு பெரியதை செய்து தருகிறேன்" என்று சொல்லி விட்டார்.

அந்தப் பிள்ளையார் சிலையை என் பெரியம்மா தன் அந்திமக் காலத்தில் என்னிடம் கொடுத்தார்.



• ஏ. சி. முத்தையாவுடன்...

# மந்திரம்

நெடுநாள் வரை அதை என் தந்தை பூஜித்தார். அவருக்குப் பின் என் அண்ணி பூஜித்தார்கள். இன்று அது எங்கள் வீட்டு பூஜை அறையில் இருக் கிறது!

எனது மேற்படிப்புக்கு என் பெரியம்மாதான் பணம் கொடுப்பார்கள். இருந்தாலும் அவர்களுக்கு ஒரு குறை. அதாவது என் பெயர்!

"இது என்ன பெயர்? பெயரை மாத்தி வெச்சுக்க. மாணிக்கம்னு மாத்திக்க" என்றார்கள். நான் ஒன்றும் சொல்லவில்லை. 'மாணிக்கம்' என்ற பெயரை அவர்கள் குறிப்பிட்ட காரணம், அந்த ஊரில் மிகவும் பணக்காரரும், செல்வாக்கும் உள்ளவரது பெயர் மாணிக்கமாக இருந்ததுதான்! மேலும் எங்கள் பெரியம்மா குடும்பத்திற்கு வேண்டியவர் அவர். நான் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்த போதும் என் வகுப்பில் நான்கு கிருஷ்ணமூர்த்திகள், இரண்டு ராமமூர்த்திகள் ஒரு தட்சிணா மூர்த்தி, ஒரு அகோர மூர்த்தி என்று இருந்தார்களே தவிர உதயமூர்த்திகள் யாரும் இல்லை, என்னைத் தவிர!

இது என்னைப் பாதித்தது.

"பெயர் பிறந்தது எப்படியோ?" என்ற ஆராய்ச்சியில் இறங்கினேன்.

நான் பள்ளிக்கூடத்தில் பரீட்சை எழுதி விட்டு வரும் போதும் பள்ளித் தேர்வில் ரிசல்ட் பார்க்கும்போதும் எனக்கு அச்சம் ஏற்படும்.

அப்போதெல்லாம் என் தாய் கோயிலுக்குப் போய் விட்டு வருவார். வந்து என்னிடம் சொல்வார் : "கோயிலில் வேண்டிக் கொண்டேன். சாமி உத்தரவு கொடுத்து விட்டது!"

அவர் சொல்கிற தோரணை, தொனி




டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி




எல்லாம் எனக்குப் பெரிய நம்பிக்கை தரும்.

"சாமி எப்படி வந்தது? எப்படி உத்தரவு கொடுத்தது?" என்றெல்லாம் கேட்கத் தேவையில்லாத அளவுக்கு, என் தாயின் குரலில் நம்பிக்கை தெறிக்கும்!

என் தாய் ஆவணி மாதத்தில் ஒரு நான்கு நாட்களும், கார்த்திகை மாதத்தில் நான்கு நாட்களும் சூரிய நாராயணமூர்த்தி விரதமிருப்பார்கள். தினமும் காலையில் குளித்து பூஜை செய்து பின் சூரியனுக்கு நைவேத்யம் செய்துவிட்டு ஒருவேளைதான் சாப்பிடுவார்கள். இப்படி ஆண்டுக்கு இரண்டு முறை செய்வார்கள்.

"நமது வீட்டில் நீ பிறந்த அறை கிழக்குப் பார்த்த அறை. நீ பிறந்த போது அப்போது தான் சூரியன் கிளம்பி வீட்டுக்குள் வந்தது. அதுவுமன்றி அன்று ஞாயிற்றுக் கிழமை. ஞாயிறு என்றால் சூரியன் என்று பொருள். எனவேதான் நம் தாய் உனக்கு உதயமூர்த்தி என்று காரணப் பெயரிட்டு சந்தோஷப்பட்டார்கள்!" என்று என் அண்ணன் சொன்னார். இதை என் தாயும் பலமுறை சொல்லக் கேட்டிருக்கிறேன்.

பெயர் என்பது ஒரு மந்திரம். உயர்ந்த எண்ணம் கொண்டு பெற்றோர் இடும் பெயர். "சாகும்போதாவது சிவன் பெயரைச் சொல்ல வேண்டுமென்று மகனுக்கு சிவானந்தம் என்று பெயரிட்டேன்" என்பார்கள். பெயர்களின் பொருள் எதுவோ, அதற்கேற்ற வகையில் பெரும்பாலான பெயர்களின் பொருள், மனிதர்களின் தன்மையாக மலர்ந்திருப்பதைப் பார்த்திருக்கிறேன்.

நான் கல்லூரியில் படிக்கும்போது ஒரு வாசகம் தென்பட்டது. அதை என் டயரியில் குறித்து வைத்தேன். என் பெயரை விமர்சிப்பவர்களிடையே சொல்ல அது எனக்குப் பெரிதும் பயன்பட்டது.

"பெயரில் என்ன இருக்கிறது?
ரோஜாவை எந்தப் பெயரிட்டு அழைத்தாலும்
அது மணக்கத்தான் போகிறது"

என் பெயரே அரிதான ஒன்றாக இருக்கும்போது எனக்கு ஏன் எம்.எஸ். என்ற இரண்டு 'இனிஷியல்கள்'? அதே பெயரில் மற்றொருவர் இருந்தால் மட்டுமே இரண்டு எழுத்துக்களை பெயரின் முன் போடுவார்கள். ஆனால் என் விஷயம் வேறுபட்டது. என் தாத்தா பெயர் முத்து. என் தந்தை பெயர் சிங்காரம். எனது ஆசிரியர் ரமணி அய்யர், இதன் காரணமாகவே எம்.எஸ். என்ற எழுத்துக்களை என் பெயருக்கு முன்னால் எழுதி விட்டார் போலும்! அதே போல நான் பள்ளியில் சேர்க்கப்பட்டபோது ஆசிரியர் ஆண்டை மட்டும் நினைவு வைத்துக் கொண்டுதான் பிறந்த தேதியை எழுதினாரே தவிர, நான் பிறந்த சரியான தேதியை அல்ல!

எனக்கு நினைவு தெரிந்தபோதிலிருந்து இந்த 'எம்.எஸ்.' என்ற இனிஷியலிலே ஒரு தனிப் பெருமை! காரணம் எம்.எஸ். என்று சொல்லப்படும்போது, அது ஒரே ஒரு இனிமை கொண்ட உயர்ந்த பாடகி அவர்களை மட்டுமே அன்றும் குறிப்பிட்டது, இன்றும் குறிப்பிடுகிறது என்பதுதான்!

சில ஆண்டுகளுக்கு முன் எனது நண்பர், தொழிலதிபர் ஏ.வி. முத்தையா வீட்டுக்குச் சென்றிருந்தேன். அவரது மூத்த மகளுக்குச் சுமார் மூன்று அல்லது நான்கு வயதிருக்கும்.

"உன் பெயர் என்ன?" என்று கேட்டேன்.

"எம் பேரு அபிராமி" என்று குழந்தை சொன்ன போது, நான் "திருக்கடையூர்...." என்று சொல்ல முனைந்தேன். உடனே அந்தக் குழந்தை, "எம் பேரைத்தான் திருக்கடையூர் அபிராமிக்கும் வச்சிருக்காங்க!" என்றது! நான் அசந்து போனேன்.

அது போல என் பெயரைத்தான் சூரியனுக்கும் வைத்திருக்கிறார்கள் என்று எனக்குப் பட்டது!

என் நண்பர்கள் வீட்டு பூணூல் போடும் வைபவங்களுக்குப் போனபோது சிலர் காயத்ரி மந்திரத்தை எனக்கு விளக்கினார்கள். பாரதியார் காயத்ரி மந்திரத்தை மிக அழகாக மொழிபெயர்த்திருக்கிறார்.

''அறிவைத் தூண்டுகின்ற சுடர்க் கடவுளைத் தியானிப்போமாக!'' என்பது தான் அதன் பொருள். ''அறிவைத் தூண்டுகிற'' என்ற அந்த வாசகம் என்னை மிகவும் சிந்திக்க வைத்தது; அதுதான் எனக்குத் தேவை.

ஒரு சமயம் ஒரு நண்பர், ''நீங்கள் ஆதித்ய இதயத்தைப் படிக்க வேண்டும்'' என்று சொல்லி என்னிடம் ஒரு சிறு நூலைக் கொடுத்தார்.

ராமபிரானே ஒரு கடவுள். அந்த ராமபிரான் ராமேஸ்வரத்தில் சிவலிங்கத்தைப் பூஜை செய்கிறார். ராமர் ராவணனுடன் யுத்தம் செய்யத் தயாராக இருந்த சமயம், ''ஜெயிப்போமா?'' என்ற சோர்வுடன் உட்கார்ந்திருக்கிறார் ராமர். அப்போது ராம ராவணயுத்தத்தைப் பார்க்க வந்த பெரியவர்களில் (தேவர்கள்) ஒருவர், - அகத்தியர், ''ராமா! இங்கே வா! இந்தச் சூரியனைப் பூஜிக்கும் மந்திரத்தை உனக்குச் சொல்லித் தருகிறேன். நீ இதை ஒரு நாளைக்கு மூன்று முறை சொல். நீ ராவணனை வெல்வாய்!'' என்று சொல்லிக் கொடுக்கிறார்.

''ராமர் இதைக் கேட்டவுடன் துயர் நீங்கியவரானார்'' என்று எழுதுகிறார்கள். ஆதித்ய இதயம் பூராவும் ஆதித்தனுடைய (ஆதித்தன் என்பது சூரியனுக்கு ஒரு பெயர்) வலிமையைப் போற்றுகின்ற, வாசகங்கள்தாம். ''வலிமையைப் பற்றி சிந்தித்தால், படித்தால் வலிமை நம்மிடம் கூடுகிறது'' என்ற (தத்துவமஸி) உபநிடத வாசகப்படி நமக்கும் எடுத்த காரியத்தில் வெற்றி கிடைக்க வைக்கும் மந்திரமாக இது போற்றப்படுகிறது.

மனிதர்களாகப் பிறந்த நாம், எங்கெங்கெல்லாம் நமக்குச் சாதகமான விஷயங்கள் - நமக்குப் பொருத்தமானவை இருக்கின்றனவோ அவற்றை எடுத்துக் கொள்வது நல்லது.

நமது பெயரின் பொருளில் அமைந்திருக்கும் ஓர் உயர்ந்த குணத்தை ஏன் நாம் நமக்குச் சொந்தமானதாக எடுத்துக் கொள்ளக்கூடாது? தாராளமாக எடுத்துக் கொள்ளலாம்!

என் பெயரும் அதன் அர்த்தமும் என்னை எப்போதும் செதுக்கி, உயர்த்திக் கொண்டிருந்தது என்பது உண்மை.

(தொடரும்)

# ரஜினி ரசிகர் கொடுத்த சாபம்!

ரு திரைப்படத் தொடக்க விழா மேடையை இப்படியொரு பேச்சுக்கு ரஜினி பயன்படுத்துவார் என்று யாருமே நினைத்துப் பார்த்திருக்க முடியாது.

பாரதிராஜாவின் 'தாஜ்மஹால்' படத் தொடக்க விழா அது!

தம் மகன் மனோஜ் அறிமுகமாகிற படமாதலால் படு டென்ஷனுடன் இருந்தார் பாரதிராஜா. எட்டுத் திசையிலும் இந்தப் படம் பற்றித்தான் பேச வேண்டும் என்று கதைக்கு ராஜீவ் மேனன், வசனத்துக்கு மணிரத்னம், இசைக்கு ரகுமான், ஒளிப்பதிவுக்கு மதுஅம்பாட் என்று, எல்லா முதலிடத்து சொந்தக்காரர்களையும் வளைத்துப் போட்டு, கல்கத்தாவிலிருந்து முன்னாள் நடிகை மூன்மூன் சென்னின் மகள் ரியா சென்னைக் (மெழுகில் செய்த பொம்மை மாதிரி இருக்கிறார்) கதாநாயகியாக்கிக் கூட்டி வந்து பூஜை போட்டார். குத்து விளக்கேற்றுபவரும் பெரிய கையாக இருக்க வேண்டும் என்றுதான் ரஜினியைக் கூப்பிட்டிருந்தார். ஆனால், அன்று ரஜினி விட்ட குத்தில், பூஜை நடந்த காமராஜர் அரங்கம் கலகலத்துப் போனது!

"என்னை சறுக்கி விழவைக்கப் பார்க்கிறார்கள்!" என்று ரஜினி பேசியபோது கூட்டமே வாயடைத்துப் போனது!

யாரைச் சொல்கிறார்?

"இந்தத் தேர்தல்ல நான் எதுவும் பேசக்கூடாதுன்னுதான் இருந்தேன். சூழ்நிலை என்னைப் பேச வைச்சிடுச்சி!"

என்ன சூழ்நிலை? கோவை கலவரமா?

"என்னைச் சுத்தி இப்ப இருக்கறவங்கள் அடியாட்களா இருக்காங்க. அவங்களை ஆண்டவன் எனக்குக் காட்டிக் கொடுத்துட்டான்!" என்றதும் கூட்டத்தின் டென்ஷன் உச்சிக்குப் போய்விட்டது.

"ரஜினியை சுத்தி இருக்கறவங்க யாருப்பா? தி.மு.க., த.மா.கா. காரங்கதானே! அவங்களையா சொல்றாரு? அவங்களையா?" - ஆர்வம் தாங்காதவர்கள் கிசுகிசுக்க ஆரம்பித்தனர். ஆங்காங்கே இதே போன்ற பல கிசுகிசுக் குரல்கள்.

"என்னை யாராலும் வீழ்த்த முடியாது. ஏன்னா, ஆண்டவன் என்னோட இருக்கான்!"

"அட, ஜெயலலிதாவைச் சொல்றாருப்பா!"

"போடா... அவங்களையெல்லாம் ஒரு எதிரியா நினைச்சுப் பேசறவரா நம்ம தலைவரு? இது வேற என்னவோ சமாசாரம்!"

- இரு ரசிகர்களின் அந்தரங்க அலசல்.





• 'தாஜ்மஹால்' - ரியாசென், மனோஜ்

"இந்த அரசியல்வாதிங்க ஒரு மாசம் உழைச்சுட்டு அஞ்சு வருஷம் சுகமா ரெஸ்ட் எடுக்கறாங்க. எனக்கு இந்த அரசியல் தெரியாது..."

"அரசியலுக்கு வரமாட்டேன்றதை சொல்றாருப்பா!"

"அப்படி இல்லய்யா. இவனுங்களை அனுப்பிட்டு, அஞ்சு வருஷம் உழைச்சுட்டு, ஒரு மாசம் ரெஸ்ட் எடுக்கறாப்பல கவர்மெண்ட் வரணுங்கறாரு. அது நம்ம தலைவரால மட்டும்தான் முடியும்! அதைத்தான் கோடி காட்றாரு!"

"சும்மா இருங்கப்பா!"

"இந்தப் பழம், பழுக்கவே இல்லை. அதுக்குள்ள கல் எறியறாங்க."

"அத்வானி மேட்டர் சொல்றாருப்பா. இவரு டிஃப்ரெண்ட்லியா போன்ல பேசினதை பாலிடிக்ஸ் பண்ணிட்டாரில்லை? அதான்! அதான்!"

தலைக்குத் தலை தமக்குத் தோன்றியபடியெல்லாம் அர்த்தம் சொல்ல, ஒரு வார்த்தை கூடத் தனி நபர் யாரையும் குறிப்பிட்டுத் தாக்காமல் மூடு மந்திரமாகவே பொதுவான தாக்குதல் நிகழ்த்தினார் ரஜினி.

மேடையில் உட்கார்ந்து கொண்டு, புது ஹீரோயின் பாம்பே அல்வாவா, கல்கத்தா ரசகுல்லாவா என்கிற மகத்தான ஆராய்ச்சியில் பார்த்திபனும் வைரமுத்துவும் ஈடுபட்டுக் கொண்டிருக்க, ரஜினியின் பேச்சு, அதை ஒரு படவிழா என்பதையே மறக்கச் செய்தது!

தன் விருப்பமில்லாமலேயே வலிந்து தான் அரசியலில் திணிக்கப்படுவது பற்றிய வேதனைதான் ரஜினியின் அன்றைய பேச்சு என்று தோன்றியது.

உண்மையில், ரசிகர்களுக்குத் தன்னுடைய அடுத்தப் படம் பற்றிய அறிவிப்பை வெளியிட்டு சந்தோஷப்படுத்தலாம் என்றுதான் வந்ததாக ரஜினி குறிப்பிட்டார். சூழ்நிலை, அந்த அறிவிப்பைத் தள்ளிப் போடச் செய்துவிட்டதாக அவர் பேசியபோது ரசிகர்களுக்கு சப்பென்று ஆகிப் போனது!

"வருஷத்துக்கு ஒரு படம்னாலும் தலைவர் படத்தைத் திருவிழா மாதிரி கொண்டாடிட்டு இருந்தோம். இந்த அரசியல்வாதிகள் அவரை இப்படி அப்செட் பண்ணிட்டாங்களே! இவனுங்களுக்கெல்லாம் டெபாஸிட்டே கிடைக்கக் கூடாதுடா!"

போகிற போக்கில் சபித்துவிட்டுப் போனார் ஒரு ரஜினி ரசிகர். ●

— சிக்கல் சிவராமன்





# 76 – நாட் அவுட்!

நூற்றி மூன்று கிரிக்கெட் டெஸ்ட் மாட்ச்களைப் படமெடுத்து, சேப்பாக்கம் மாட்சை 104 ஆவதாகத்தன் கேமராவுக்குள் சிறை செய்யப் போகிறார் நாராயண சாரி என்கிற சாரி. இது வேறெந்த போட்டோகிராபரும் செய்யாத சாதனை. சாரியின் அனுப வத்தில், அவர் பார்க்காத வீரரில்லை. பட மெடுக்காத மேட்ச் இல்லை. கபில், கவாஸ்கர் இருவரும் சென்னை வந்தால் சாரியின் வீட்டுக்கு வருவது உண்டு.

"ஊஞ்சலில் அமர்ந்து ஆடிக் கொண்டே சர்க்கரைப் பொங்கலை விரும்பிச் சாப்பிடுவார்கள்!" என்று நினைவுகளை மலர விடுகிறார் சாரி.

இவர் பார்த்த முதல் உத்தியோகம் – இந்து பத்திரிகையில் வாட்டர் பாய்! அடுத்து இந்திய ராணுவத்தில் எட்டாண்டு காலப் பணி.

"முறையாக போட்டோகிராஃபி படிக்கவில்லை. ராணுவத்தில் இருந்தபோதுதான் போட்டோ

## போட்டி – 6 முடிவு!

பட்டுப்புடைவை பரிசுப் போட்டி – 6க்கான சரியான விடை — பிரபு.

('எஸ்.ஆர்.பி. பீல்டிலேயே இல்லை' என்ற கட்டுரையில்.)

பலர் சரியான விடையை எழுதி விட்டதால் குலுக்கலில் தேர்வாகிப் பரிசு பெறுபவர்:

**ஆர். புவனேஸ்வரி,**
**14, காந்திநகர்,**
**கே.கே.நகர் போஸ்ட்,**
**திருச்சி - 21.**

**வாழ்த்துகள்!**

கிராஃபி கற்றுக் கொண்டேன். கேப்டன் முல்லர்ஓர்த்திற்குப் படம் எடுப்பது ஹாபி. என்னையும் கூட்டிச் செல்வார். சில படங்கள் சரியாக வந்திருக்காது. 'வேறு இடத்தில் நின்று எடுத்திருந்தால் நன்றாக இருக்கும்' என்பார். அவர் மூட்டிய ஆசைதான் என்னை ஒரு போட்டோகிராபராக்கியது..."

ராணுவத்திலிருந்து வாலண்டரி ரிடையர்மெண்ட் பெற்றுக் கொண்டு மறுபடி இந்து பத்திரிகையில் முப்பது ரூபாய் சம்பளத்தில் சேர்ந்திருக்கிறார். அப்போது இவருக்கு 'டார்க் ரூம் அசிஸ்டெண்ட்' உத்தியோகம்.

நாற்பத்தெட்டில் சென்னையில் வெஸ்ட் இண்டீசுக்கும் இந்தியாவுக்கும் நடந்த மேட்சில்தான் தம் முதல் கிரிக்கெட் போட்டோவை எடுத்ததாகச் சொல்கிறார்.

"பார்த்ததை எழுதுவதில் கூடப் பொய் கலந்து விடும். போட்டோ ஒன்றுதான் உண்மையை மட்டும் சொல்லும்" என்று தம் தொழிலைச் சிலாகிக்கிறார்.

"விஜயவாடா பகுதியில் ஏற்பட்ட வெள்ளச் சேதத்தை எந்தப் பத்திரிகையும் வெளியிடவில்லை. நான் புகைப்படம் எடுக்கப் போனேன். கமோலி என்ற இடம் தண்ணீரில் மூழ்கி இருந்தது! நூறு பேர் இறந்த துயரச் சம்பவம் கூடப் பொது மக்களுக்குத் தெரியாமல், தொடர்பு துண்டிக்கப்பட்டு இருந்தது! எப்படியோ நடந்து போய்ச் சேர்ந்தேன். மண் வீடுகள் எல்லாம் விழுந்து விடும் நிலையில் இருந்தன. சர்ச் மட்டும் ஊரின் மத்தியில் திடமாக இருந்தது! உயரத்தில் நின்று எடுக்க இடமில்லாமல் இரண்டு மணிநேரம் அலைந்தேன்! இருட்டிவிட்டது. மறுநாள் ஒரு நபரைத் துணைக்குக் கூட்டிக் கொண்டு போய் சர்ச் மேல் ஏறி நின்று... ஊரைப் பிடிக்கலாம் என்று இருந்தேன். விடிந்து எழுந்தபோது சர்ச் விழுந்து விட்டது! மண் வீடுகள் மட்டும் நின்றிருந்தன" என்று பழைய நினைவுகளை அசை போடுகிறார்.

கல்கத்தாவில் நடந்த மேட்ச் ஒன்றை நினைவு கூர்ந்தார். "வெஸ்ட் இண்டீஸின் ஓபனிங் பேட்ஸ்மேன் நன்றாக விளையாடிக் கொண்டிருந்தார். ஆட்ட விறுவிறுப்பில் நடுவராக இருந்த கோபாலகிருஷ்ணன் ரன்-அவுட் கொடுத்தார். பார்வையாளர்கள் அவுட் சொன்னது தவறு என்று கலாட்டா செய்தனர். இப்போது போல் டீவியில் முன் பின் ஓட்டி, துல்லியமாகச் சொல்ல முடியாது. அப்போது 'ஸ்பீட்கிராபி' கேமராவும் கிடையாது. பன்னிரண்டு 'ஸ்நாப்'பிங் ரோல் தான் பயன்படுத்தினோம்! சாதாரண கேமராவை வைத்து எடுதேன். மறுநாள் நான் எடுத்த படம்தான் இந்துவில் வெளி வந்தது. கிரீஸிற்கு வெளியே ஒரு இன்ச் தள்ளி பேட் வைத்திருந்தார்! இந்து நிறுவனம் 300 ரூபாய் பரிசு கொடுத்து என்னைப் பாராட்டியது!"

காளிச்சரண் ஒரு ரன்னுக்கு அவசரப்பட்டு நூலிழையில் ரன் அவுட் ஆனது; இந்திய பேட்ஸ்மேன் அப்பாஸ் அலியை யாரும் எதிர்பார்க்காத தருணத்தில் ஒரு பெண் முத்தமிட்ட அந்த நொடி... என அபூர்வமான புகைப்படங்களைக் காண்பித்தார்.

கவாஸ்கரின் பள்ளி நாட்களிலிருந்து இன்று வரை போட்டோ எடுத்தவர் என்ற பெருமை சாரிக்கு உண்டு! கிரிக்கெட் படு தொங்கலாக நகர்ந்தாலும், கண்ணிமைக்கும் நேரத்தில் ஒரு சிலிர்ப்பைக் கொடுத்து விடுவதால், அதற்கு ஒரு வசீகரம் இருக்கிறது. அந்த சிலிர்ப்புக்குரிய திரும்பக் கிடைக்காத விஷயங்களை நிறையவே பிடித்துத் தள்ளியிருக்கிறார்!

இந்து பத்திரிகையின் எட்டு காலங்களையும் அடைத்து வந்த புகைப்படங்கள் இவருக்கு மட்டுமே வாய்த்தவை! எழுபத்தாறு வயசிலும் சுறுசுறுப்பாய் வலம் வருகிறார் சாரி.

முன் பக்கம் வெளியாகி இருப்பவை, சாரியின் பெருமையைப் பறைசாற்றும் படங்கள். ●

**— அம்மாபட்டி ஜம்பு**

# இராமருக்கும் அமெரிக்காவுக்கும் என்ன சம்பந்தம்?

சமீபத்தில் ராமாயணம் தொடர்பான ஒருநாள் கருத்தரங்கம் ஒன்றை சமஸ்கிருத கல்வி நிறுவனம், ஆழ்வார்ப் பேட்டையில் நடத்தியது. இந்து பத்திரிகை கார்டூனிஸ்ட் கேசவின் ராமாயணக் காட்சிகளடங்கிய அற்புதமான ஓவியக் கண் காட்சியை நீதிபதி கற்பக விநாயகம் திறந்து வைத்து சிறப்புரை ஆற்றினார். கருத்தரங்கில் நம் காதில் விழுந்து, கவனத்தைக் கவர்ந்த சில விஷயங்கள்:



• வாலி-சுக்ரீவன் மோதல்...

● அயோத்தியில் பிறந்த ராமர், வனவாசத்துக்கு முன் ஒரு நிமிடம் கூட ஆட்சி செய்யவில்லை. ஆனால் குறைந்தபட்சம் வாஜ்பாய் 11 நாட்கள் ஆட்சியிலிருந்து விட்டார்!



• ராமர்

● எதிரிகளோடு எப்படிப் பேச்சு வார்த்தை நடத்துவது என்பது பற்றி நமது அரசியல்வாதிகளுக்கு இன்னும் தெரியவில்லை. அனுமான் அன்றே இதை சாகசமாக நிகழ்த்திக் காட்டியிருக்கிறான். ராவணனுடன் ஆரம்பத்தில் பணிவாக, அதே சமயம் உறுதியாகப் பேச்சுவார்த்தை நடத்துகிறான். ராவணன் ஒத்து வரமாட்டான் என்று தெரிந்ததும் சூழ்நிலையைப் புரிந்து, மிரட்டுகிறான். இதை அமெரிக்கா கற்றுக் கொண்டிருக்கிறது. இங்கு?...

● ஜனநாயக நாட்டில் ஜனநாயகம், அதிகாரம் படைத்தவர்களால் சிறை பிடிக்கப்பட்டுள்ளது. ஒரு அரசியல் கட்சிக்குள்ளேயேகூட ஜனநாயகம் இல்லை. யாரை வெளியேற்ற வேண்டுமோ அவர்களை உள்ளே வைத்துக் கொண்டும் யாரை அருகில் வைத்திருக்க வேண்டுமோ அவர்களை வெளியேற்றியும் விடுகின்றனர். விபீஷணன் கதி எத்தனையோ பேருக்கு நிகழ்கிறது!

● தவறோ சரியோ ராமாயணத்தில் எல்லோருக்கும் பேச உரிமை அளிக்கப்படுகிறது. ஆனால் இன்று? சரியையும் பேச முடியவில்லை.

தப்பையும் பேச முடியவில்லை. ஊமையாகக் கைகட்டி நிற்க வேண்டிய நிலைமை!

● மந்தரைதான் அரசியலில் பங்கேற்கும் முதல் பெண்மணி. போகிற போக்கிலேயே அவளின் உதட்டசைவில் கைகேயி மண்டியிடுகிறாள். ராமர் காட்டுக்கனுப்பப் பட்டார். இந்த பொலிட்டிகல் 'பிரெயின்' இப்போதும் உண்டு.

● அசோகவனத்தில் சிறையிலிருந்த சீதை, தான் மட்டும் விடுதலை அடைவதில் பெருமை கொள்ளவில்லை. ராவணனால் சிறைபிடிக்கப்பட்ட அனைத்துப் பெண் களையும் விடுதலை செய்யக்கோரி பிடிவாத மாக இருந்தாள். பெண்கள் அப்படி இருக்க வேண்டும்.

● உளவு பார்ப்பதும் தூது போவதும் ராமாயணத்தில் உண்டு. ஆனால் அதை எதிரிகளுக்கே விற்றுவிட்டு வருவது இல்லை.



• கண்காட்சியைப் பார்வையிடுகிறார் நீதிபதி

● ராமன் எவ்வளவு நல்லவனாக இருந்தும் வாலியைப் பின்புறமிருந்து கொன்றான். ஆனால் ஒரே ஒரு முறைதான். இன்று தினம் தினம் ஒளிந்திருந்துதான் தலைவர்கள் சாகசத்தை நிகழ்த்துகின்றனர்.

● அசோக வனத்தில் சீதையைப் பதுங்கியிருந்து பார்த்தபின் கமுக்கமாக அனுமான் வரவில்லை. ராவணனிடம் தைரியமாக, 'பார்த்துவிட்டேன்' என்று சொல்லிவிட்டே வருகிறான்.

– யுகாந்தன்

# கல்கி–சரவணா ஸ்டோர்ஸ்

## இணைந்து வழங்கும்

# வாரம் ஒரு பட்டுப் புடைவை!

**பட்டுப் புடைவையைப் பெறுவதற் கான இந்த வாரக் கேள்வி:**

*சாரி வீட்டில் சர்க்கரைப் பொங்கலை விரும்பிச் சாப்பிடும் அந்த இரு பிரபலங்கள் யார் யார்?*

இந்த இதழ் முழுவதையும் கவனமாகப் படித்துவிட்டு அந்தப் பிரபலங்களின் பெயர்களைக் கண்டுபிடித்துக் கீழுள்ள கூப்பனில் எழுதி அனுப்புங்கள்.

ஒருவர் எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். அத்தனை கூப்பன்களும் ஒரிஜினலாக இருக்க வேண்டும். ஜெராக்ஸ் பிரதிகள் செல்லாது.

கூப்பன்கள், ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல் சென்னை - 600 097 என்ற முகவரிக்கு வந்து சேரக் கடைசித் தேதி: 16.3.98.

உறையின் மேல் 'பட்டுப் புடைவைப் போட்டி - 9' என்று தவறாமல் குறிப்பிடவும்.

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**பட்டுப்புடைவை பரிசுப் போட்டி – 9**

**சாரி வீட்டில் சர்க்கரைப் பொங்கல் சாப்பிடும் அந்த இரு பிரபலங்கள் :**

1.............................. 2..............................

**பெயர்:** ..............................

**முகவரி:** ..............................

..............................

..............................

..............................

# அஷ்டமி, நவமி எந்த மதத்திற்கும் சொந்தமில்லை



அஷ்டமி என்பது பிரதமி திதியிலிருந்து எட்டாம் நாள். நவமி என்பது பிரதமியிலிருந்து ஒன்பதாம் நாள். இந்த நாட்களில் கடவுளை எந்த ரூபத்தில் வேண்டுமானாலும் வழிபட்டால் அதிக பலன் கிடைக்கும்.

# கொண்டாட்டம்

விளையாட்டுத்தனமாக அர்ஜுன் ஏதோ செய்யப் போக, அதன் விளைவாய் மூன்று நண்பர்கள் இறந்து விடுகின்றனர். அவர்களில் ஒருவனது மனைவி பிரசவத்தில் இறந்து விட அந்தக் குழந்தையை அதன் தாத்தா வீட்டில் விட்டு வரச் செல்லும் அர்ஜுன் அங்கேயே சில நாள் தங்க வேண்டி வருகிறது. கதைப் பின்னல்கள் விழுகின்றன.

ஆனாலும் ஓவராக விளையாட்டுத்தனங்களில் ஈடுபடும் அர்ஜுனை சிம்ரன் மணந்து கொள்ள மறுப்பது கூடப் பரவாயில்லை (மிகப் பயங்கர விளையாட்டான அர்ஜுன் இறந்து விடுவதான ஐடியாவை அர்ஜுனே கொடுப்பதாகக் காட்டாமல் அவர் நண்பர்கள் அவர் மீது திணிப்பதாகக் காட்டுவது பலவீனம்) ஆனால் சிம்ரன் மனம் திருந்தும் காட்சியில் லாஜிக்கல் ஊட்டச்சத்து இல்லை.

“உன்னை விரும்பின பெண்ணைத் தான் நீ கல்யாணம் செய்துக்கலை. நீ விரும்பின பெண்ணையாவது அழைச்சுக்கிட்டுப் போ” என்றபடி அர்ஜுனிடம் ஒருதலை ராகம் இசைக்கிறார் மந்த்ரா. இவர் இந்த அளவு நடித்துக் கூட இதுவரை பார்த்ததில்லை. கீப் இட் அப். இறுதியில் (அதற்கு முன் ஒருவரை ஒருவர் அலட்சியப்படுத்தும்) ராஜாவும், மந்த்ராவும் தற்செயலாக இடித்துக் கொள்ள, ‘‘சாரி’’, ‘‘பரவாயில்லே’’ என்றபடி விலகுவதில், இருவரின் காதலும் அழிந்து விட்ட வருத்தத்தையும், இவர்களுக்குள்ளே கூட வருங்கால இணைப்பு சாத்தியமே என்பதையும் காட்டும் உத்திக்குப் பாராட்டுக்கள்.

ஒரு ‘பெப்’புக்காக முகமூடி வில்லனைப் படைத்தது ஓ.கே. ஆனால் அவன் இப்படியா அபத்தமாக, குடும்பத்தின் அத்தனை பேரும் கூடத்தில் குழுமியிருக்கும் போது சரவிளக்கை (கயிற்றில் தொங்கவிடப் பட்டிருக்கும் சாண்ட்லியர்!) அறுத்து அதைக் குழந்தையின் மீது விழவைக்க முயற்சிப்பான்!

ஜெமினி, சௌகார், ராஜா, ராஜீவ், சுந்தர்ராஜன் என்று ஒரு பெரிய பட்டாளமே படத்தில் இடம்பெற்றிருக்கிறது. அது சரி, ‘இந்தப் பாத்திரத்துக்கு விஜயகுமார்தான் பொருத்தமானவர்’ என்று படைப்பாளிகளிடம் வாதாடி, (அப்போதைய பெப்ஸிக்காரரை) நடிக்கச் செய்தது இவ்வளவு சாதாரணமான ரோலுக்காகவா?!

வழக்கம் போல் சிறப்பாக நடித்திருக்கிறார் என்பதைத் தவிர டெல்லி கணேஷ் பற்றிக் குறிப்பிட எதுவுமில்லை!



படத்தின் மைய இழை, பாசமான மிகப் பெரிய குடும்பம். இருந்தபோதிலும் குடும்ப உறுப்பினர்கள் தங்களுக்குள் பாசத்தைப் பொழிவதாகத் தெரியவில்லை என்பது படத்தின் மைய ஓட்டை. கதையிலும், காட்சிகளிலும் ஒரு ஃபிரஷ்னஸ்ஸை கொண்டு வர கே. எஸ். ரவிகுமார் மெனக்கெட்டிருப்பது புரிகிறது. ●

— ஜி



என்னதான் பெண்ணியம் பேசினாலும், நிவேதா தன்னை அழகு படுத்திக் கொள்ளும் நேரம் அதிகம் தான். சட்டுபுட்டென்று கிளம்பியிருந்தால் தடங்கல் ஏற்பட்டிருக்காது. என் மச்சான் வழியில் உறவுக்காரப் பெண்ணிற்குப் பேய் பிடித்து எஸ்டேட்டிலிருந்து ஜீப்பில் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று அம்மா என்னிடம் சொன்னதோடு நிற்கவில்லை. வழிநெடுக எதிர்ப்படும் பெண்களிடம் சொல்லிக் கொண்டே போனார். ஊர் பூரா வும் செய்தியை ஒவ்வொரு பெண்ணும் முந்திக் கொண்டு பரப்புவதில் என்ன ஆசையோ? உண்மையில் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு நெஞ்சுவிரிய எந்தளவு குதூகலித்தாரோ, அந்தளவு சந்தோஷம் உட்புதைந்திருந்தது அம்மாவிற்கு. ஆனால் இதைச் சொல்லும்போது ஏதோ கவலையோடு சொல்லும் மாயப் போர்வையை, விலக்கிப் பார்த்தால்தான் புரியும்.

**சு. வேணுகோபால்**

பிரான்ஸ் பெண்ணிய அமைப்பிற்காக 'தமிழ்நாட்டு கிராமங்களில் பெண்கள் பிரச்னைகள்' சம்பந்தமாக ஓர் ஆய்வுக் கட்டுரை தயாரித்து அனுப்பத்தான் நிவேதா எங்கள் வீட்டில் தங்கி இருக்கிறாள்.

"நிவேதா ஆச்சா?"

"ம்ம். ஒரு நிமிஷம்...."

உதட்டுக்குச் சாயம் போடுகிறாள். பிதுங்கி வரும் குரலிலே தெரிகிறதே! மறுபடி கூந்தலை அழகுபடுத்தி, கிளம்பக் கால் மணியாகி விடும்.

காமாட்சிபுரத்தில் ஒரு

'தினமும் இப்படி குடிச்சிட்டு வர்றேயடா பாவி' என்று 'டா' வசையோடு அடித்திருப்பாள்.

நிவேதாவின் சர்வேக்காக அப்பா, வீட்டில் தங்க ஏற்பாடு செய்தபோது ரகசிய சந்தோஷம். நண்பர்களிடம் பந்தா செய்து கொள்ளலாம் என்றிருந்த முகிழ்ப்பு பத்து நாளிலேயே வெடித்து, பஸ்பமாகி விட்டது. தரவுகளுக்காக நேரங்கெட்ட நேரத்தில் என்னை இழுத்தடிக்கும் விஷயத்திற்காக அல்ல. மேலைநாட்டுப் பெண்ணிய சித்தாந்தப் புத்தகங்களை வைத்து என்னை மருட்ட ஆரம்பித்து விடுகிறாள். தூரத்தில் நின்று பெண்களைப் பற்றி ரொமாண்டிக்கான கற்பனையை விரித்துக் கொள்வதில்தான் குஷி இருக்கிறது என்பது நிவேதாவோடு பழக நேர்ந்த தடத்தில் கிடைத்த விஷயம்.

திருமண முறையே, பெண்களை அடிமையாக்கும் அயோக்கியத்தனம். ரோகாட் மிஸ்ஸியின் புத்தகத்தை அடியொற்றி கத்திக் குமித்து விடுகிறாள்.

'திருமண முறைகளையே தகர்த்து புதிய கலக கலாசாரத்தை உருவாக்க பூக்கோ சொல்லியிருக்கிறார்' என்று எங்கிருந்தோ ஒரு வரியை உருவி பயம் காட்டுவாள். 'அம்மா தாயே என்னை விட்டு விடு' என்று ஓடினாலும் விடுவதில்லை. "நாதிம் கோர்டிமர் படிச்சிருக்கியா, கார்சியா மார்க்யூஸ் படிச்சிருக்கியா" என்று கேட்டு,

[illegible]

வாசலில் வைத்தே நாலு சாத்து சாத்திய செய்தியை நிவேதாவுக்கு நேற்று காதில் யாரோ ஊதி விட்டுப் போய் விட்டார்கள். எப்படியும் அந்தப் பெண்ணிடம் ஒரு பேட்டி எடுத்து விட வேண்டும் என்று நேற்றிலிருந்தே துடியாய்த் துடிக்கிறாள். எனக்கு ஆயிரம் ஜோலிக்கிடையில் இந்தக் கோஞ்சு வேறு.

ஒரு வாரமோ, பத்து நாளோ காத்திருந்தால் போதும்; எங்கள் தெருவிலேயே இந்தக் கலாட்டா நடக்கும். நிவேதாவுக்காகச் சண்டையை செட்டப் செய்ய முடியுமா? தருணங்களுக்காக நாம்தான் காத்துக் கிடக்க வேண்டும். தருணங்கள் நமக்காகக் காத்திருக்குமா? அநேகமாக காமாட்சிபுரத்தில்

பேந்தப் பேந்த விழிக்க வைப்பதில் இவளுக்கு என்ன சுகமோ?

இந்த இலக்கியமென்றாலே எனக்கு கட்டுப் போட்டாலும் வராது. எனக்குத் தெரிந்தது ராணி, தேவி பத்திரிகை எழுத்தாளர்கள்தாம்.

ராஜகுல ஜலக்கிரீடை மாது பராக் பராக்- மடோன்னாவின் பாட்டு முணுமுணுப்பில் தவழ்ந்து வருகிறதே!

"போவமா?"

ஏறிட்டால் முக்கா முதுகு தெரிகிறது. கைவைத்துத் தைக்காத ரவிக்கை... இதற்கு மேல் ஒப்பனையை வரிசைப்படுத்த நேரமில்லை.

"போவோம். அதுக்கு முன்னால, எம் மச்சானின் அக்கா பெண்ணுக்குப் பேய் பிடிச்சிருக்காம். அது என்னான்னு பாத்திட்டுப் போகணும். போய்ப் பாக்கலையின்னா உசுருக்குப் போராடிக்கிட்டிருக்கிற பெண்ணை ஒரு எட்டு எட்டிப் பார்க்காம இருக்கானேன்னு வன்மம் உருவாகும். எதுக்கு புது வம்ப உருவாக்கணும்?"

"டெவிலா? வாட் நான்சென்ஸ்!"

"தவிலோ, பவுலோ, பாத்திட்டுத்தான் போகணும்."

நிவேதாவிற்குக் கேனத்தனமாக இருக்கலாம். போய்ப் பார்த்து டாக்டரிடமோ, பூசாரியிடமோ காட்டி சுகப்படுத்துவதில் கடமை என்ற இக்கட்டு உள்ளே நுழைந்து விடுகிறதே. எனக்குப் பேய் பிசாசு மீது நம்பிக்கையில்லையென்று ஒற்றை வரியில் சொல்லி விடலாம். நான் இதுவரை பார்த்ததில்லை என்ற ஒரே காரணத்திற்காக, அடுத்தவருக்கு வரும் பேயை 'இல்லை, இது பொய்' என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? பகுத்தறிவாளர் போல் நிட்டாந்தரமாகப் பேச என் மரபும் மறுக்கிறது. வரும் பேய்கள் ஒரே குரல் கொண்டவை அல்லவே. விதவிதமான கோரிக்கை கொண்ட பேய்கள். அதன் விருப்பத்தை நானாக எப்படி முடிவு கட்டுவது? இன்னொன்று, பிரேமா அறியாத வயதுப் பெண். கூடிப் போனால் பதினாலைக் கடக்கும் வயது. எஸ்டேட்டில் கூலி வேலைக்குத் தாயோடு போகிறாள். மலையாளத்தில்தான் மாந்திரீகம் அதிகம் என்பார்கள். எதையாவது தாண்டி விட்டிருப்பாளோ?

**"கோவைல பெண் எடுத்தது வம்பாப் போச்சு!"**

**"ஏன்?"**

**"மாமனார் வாங்கிக் குடுத்த ஸ்கூட்டர், வெடிகுண்டோட இருக்கு...! முடிஞ்சா குண்டை செயலிழக்கச் செஞ்சு ஸ்கூட்டர் எடுத்துக்கன்னு சொல்றாரு!"**

**— அம்பை தேவா**



குறுகிய தலைவாசலைத் தாண்டி உள்ளே சென்றதும் நடுக்கூடத்தில் கட்டிலைப் போட்டுக் கிடத்தியிருந்தார்கள். கூட்டம் முண்டியடித்துக் கொண்டிருந்தது. பெண்கள் முகம் சுளித்துச் செண்டுவதைப் பார்த்தால் 'மேனாமினுக்கி இங்கெதுக்கு வந்தா' என்ற பொருள்தான். 'இவனெதுக்கு இவ போற எடத்துக்கு வாலு மாதிரி பின்னாலே புரளுறான்?' - என் மீது விழும் பார்வையின் அர்த்தத் துளி.

மெலிந்த சரீரம் சடக்கென்று, "பேய்... ம்ம்... ஸ்ஸ்..." நாக்கைத் துருத்தி கட்டிலிலிருந்து எழுந்தது. எண்ணெய் காணாது தலை பரட்டையாக இருந்தது. பிரேமா.... இல்லை பேய் முறுக்கி விட்டு, கண்ணைத் திரட்டியது. மாராப்பு ஒதுங்குவது பாவம் பேய்க்கு எப்படித் தெரியும்? கட்டிலை ஒட்டி அமர்ந்திருந்த பார்வதி, தாவணியைச் சரிசெய்தாள். அந்தரத்தில் ஒரு விரலைக் காட்டி 'தொலச்சுப் போடுவேன்' என்றோ பிரேமாவைக் கவ்வ வரும் மற்றொரு பேயை வேண்டாம் என்பது போலவோ இருந்தது.

"புதுசா ஆளுவந்தா பேய்க்குக் கோவம் வராதாயென்ன!"

நாகம்மாள் அதன் தாத்பரியத்தைச் சொன்னாள். விசாரிக்க வரும்போது மட்டும், 'இப்படி நான் இருக்கிறேன்' என்று பேய் காட்டிக் கொள்ளுமோ என்னவோ?

பேயோட்ட அமர்ந்திருந்த முத்தையா, பற்களை நறநறத்துக் கொண்டு, நரம்பு புடைக்கும் புஜங்களால் முன்னும் பின்னும் சாய்ந்து, சாட்டையைச் சுழட்டி விட்டு சொடுக்கினார். சாட்டை உடலைச் சுருட்டி விலகியது. பிரேமா விரல்களைக் கூந்தலுக்குள் கோத்து முன் கவிந்தாள். மென்மையான தோள். திடுதிடுவென்று நடுங்குவது தெரிந்தது. சாட்டையால் கசிந்து போன முதுகு. பிரேமாவிற்குள் குடிகொண்ட பேய் ரெண்டில் ஒன்றைப் பார்த்து விடுவோம் என்று தங்கூரமாய் அமர்ந்திருப்பதைத்தான்

தழும்புகள் காட்டின. மூன்று நாளாகக் குளிக்காததினால் புறங்கழுத்தில் அழுக்கேறிய நசநசப்பு.

முத்தையா மீண்டும் சாட்டையை ஓங்கியபோது நான் அவர் கையைப் பிடித்துக் கொண்டேன். எரிக்கும் பார்வை பார்த்து, அடிக்க விசும்பினார்.

பெண்கள், "ரெண்டடி விழுந்தாத்தான் பேய் விலகும். ஒனக்கு என்னா தெரியும்" என்று என்னைத் திட்டினார்கள். பிரேமாவின் அம்மா, உக்கிப் போய்ப் பார்த்துக் கொண்டிருந்தார். நான் மதினியைத் தனியாக அழைத்து, "என்னைக்கி பேய் பிடிச்சது?" என்றேன்.

"மூணு நாளாச்சு. ரெண்டு நாளா பொதகல்லில வச்சுப் பார்த்தோம். ஒண்ணும் ஆகலை. டாக்டர் ஊசி போட்டா ஆங்காரம் கூடுது தவிர, கொறைய மாட்டேங்குது. மூணு நாளா சாப்பிடலை. பாரு, காத்தா கிடக்கா. எனக்கெதுக்கு இந்த சோதனை?"

"எஸ்டேட்டில பிரேமா ஒத்தையில எப்ப வாச்சும் போனாளா?"

"இல்லையே. பத்து நாளா கைப்பிள்ளை மாதிரியில்ல வச்சிருக்கேன்? பக்கத்து எஸ்டேட்டில முருகன்னு ஒரு பையன். அந்தப் பையனுக்குப் பொண்ணு கேட்டாங்க. எங்களுக்கும் தெரிஞ்ச பையன். நல்லா வேலை வெட்டி பாக்கக்கூடிய பையன். குடுக்குறோம்னு உறுதி சொல்லியிருக்கோம். இவ எனக்கு இப்பக் கல்யாணம் வேணாம் அது இதுன்னு மொணங்குனா. அஞ்சு நாளைக்கு முன்ன இவ அப்பா கோவத்தில ரெண்டு அடி அடிச்சிட்டாரு. சொல்லு சந்துரு, வயசுப் பெண்ணை வீட்டில வச்சுக் காப்பாத்த முடியுமா? அதுவும் இந்த கலிகாலத்தில! சட்டுபுட்டுனு ஒரு பையன் கையில ஒப்படச்சிட்டா நமக்கும் ஒரு பயம் போகுமில்லையா? நான் என்ன பாவஞ் செஞ்சேன், இப்படி பேய் வந்து அமுக்கியிருக்கு?"

"மதினி, இவளுக்கு எத்தனை வயசு?"

"பதினாலு முடிஞ்சு, நாலு மாசமாச்சு!"

"என்னா மதினி, பச்ச பிள்ளையைப் போயி..."

"சும்மா இரு சந்துரு. காலாகாலத்தில கடமையை முடிக்க வேண்டாமா? பெரிய வளாகி ஒண்ணேகா வருசமாச்சு."

மதினியைக் கட்டில் அருகில் கூட்டிச் சென்று உக்கார வைத்தேன். ராசாமணியக்கா, "கிணத்தில விழுந்து செத்த இக்கல் ராமாயிதான் பேயா வந்திருக்கும்"



'இந்தத் தேர்தலில் மக்கள் எனக்குப் பாடம் புகட்டி விட்டதாக எதிர்க்கட்சித் தலைவர் கூறி வருகிறார்... பாடம் படிக்க நான் ஒன்றும் சளைத்தவனல்ல... ஐந்தாம் வகுப்பிலேயே எட்டு வருஷம் படித்தவன்...''

— கே.ஜி.எஸ். கோவிந்தன்

என்றார்.

"சஞ்சு புளியமரத்தில் தொங்கிய ஜக்கனன்தான் வந்திருக்கணும். இல்லையின்னா அடிக்கொருதரம் நாக்கைத் துருத்தி கழுத்தை எதுக்கு கோணங்கப் போடணும்?"

வாதப்பிரதிவாதங்களுக்கு பிரேமா விஸ்தாரமாக இடம்கொடுத்தாள். பிரேமா வாய் திறந்து மூன்று நாளாகப் பேசாமல் "ம்ம், ஸ்ஸ், டேய்" என்ற மூன்று ஒலிக் குறிப்பிலே காலத்தை நகர்த்தினால் ஆராய்ச்சி நிற்குமா? மௌனத்தின் பின்னணியில்தானே எல்லையற்று விரிகிறது தேடல்? பெண்களின் பேயாராச்சி படபடவென்று நாலா பக்கமும் ஓடிக் கொண்டிருந்தது. நான் கட்டில் சட்டத்தில் உட்கார்ந்து கொண்டேன்.

"இந்தா பாரு மதினி, மொத மொத நல்ல காரியம் ஆசைப்பட்டது சரி. ஆனா கன்னி மேல ஆவி கவுந்திருக்கு. எனக்கென்ன தோணுதுன்னா, இப்ப இந்தக் கல்யாணம் வேணாம். என்னா மதினி?"

''அதுக்கும் இதுக்கும் என்னா சம்பந்தம்?"

''சம்பந்தம் இருக்கோ இல்லையோ. அப்புறம் பாருங்க. நீங்க கல்யாணம் வேணாமுன்னு உறுதியா சொல்லுங்க."

"..............................."

"சொல்லு மதினி."

கல்யாணம் வேண்டாம் என்ற சொல் வரும்படி திரும்பத் திரும்பப் பயன்படுத்தி சத்தம் போட்டுச் சொன்னேன்.

"சரி, ஒன் யோசனையை பாவாகிட்ட சொல்லு"

''அதெல்லாம் நா பாத்துக்கிடுறேன்" என்று சொல்லி விட்டு "பிரேமா பிரேமா" என்று அழைத்தேன். பிரேமா கண்ணைத்



''நீங்க நேர்மையான அரசியல்வாதியா இருக்கலாம். 'கறை'படியாத கரத்துக்கு சொந்தக் காரரா இருக்கலாம். அதுக்காக வோட்டுப் போட வந்துட்டு, கை விரல்ல 'மை' வைக்க மாட் டேன்னு, அடம் பிடிக்கிறது கொஞ்சங்கூட நல்லா யில்லை!''

— பாம்பன் செ. சல்மான்

---

இறக்காமல் மெதுவாக மூச்சு விட்டாள்.

**கா**மாட்சிபுரத்தில் அப்படியொன்றும் விநோதமான வேடிக்கை நிகழவில்லை. பாசிப் பருப்பு டப்பாவில் வைத்திருந்த பதி னைந்து ரூபாயை எடுத்து, குடித்து விட்டு ஐயா வந்திருக்கிறார். "ஏண்டா படுபாவி, பையனுக்கு நோட்டு எடுத்துக் கொடுக்காம, ரேஷனரிசி வாங்கலாம்னு வச்சிருந்த குடிச்சுப் போட்டு வந்திருக்கியேடா!" – ஆங்காரத்தில் மொத்திப் போட்டிருக்கிறாள். இதைவிட வீரியம் மிக்க சண்டைகள் கிளம்பும். நிவேதா காத்திருக்க வேண்டும்.

"மினரல் வாட்டர் கிடைக்குமா?"

காமாட்சிபுரத்தில் கேட்டால், நான் எங்கு போவது? எருமைகள் புரளும் ஊருணி நீர்தான் இவர்களின் சமையல் நீர். தெற்குப் படித் துறையில் கால் கழுவுமிடம். மேற்கில் எருமைகளோடு நீந்தும் இளைஞர் கள். கிழக்கில் பெண்கள் படித்துறை. நேரடியாகப் பார்த்தால் கொலகொலப்பு நீர். இது விஷயத்தில் நிவேதா அதிசயமாக வாய்பிளக்கப் பார்க்கும் கிராம மக்கள் முன் அதிகம் அலட்டிக் கொள்வதுதான் எரிச்சலூட்டியது. இளநி வாங்கிக் கொடுத்து நகர்த்தும் முன் பெரும்பாடாகி விட்டது. தலையை முன் சாய்த்தால் கூந்தல் சரிந்து விழத்தானே செய்யும்? திரும்பத் திரும்ப கூந்தலை வாரி, பின்னால் கோதிக் கொள் வதற்காக அப்படிச் செய்து கொண்டே நகர்ந்தாள்.

"க்ளோரிடா பண்ணுன சுயகௌரவத் தாக்குதல் மாதிரி, இந்தப் பிரேமாவுக்கு எதா வது செய்யணும்!"

"க்ளோரிடாவா? அது யாரு?"

"உலகத்தில விசுவிசுன்னு நடக்கிற மாற் றத்த நீ எங்க தேடிப் படிக்கிற.... ம்? க்ளோரிடா பிரான்ஸ்காரி. கெட்டிக்காரி. அவ என்ன பண்ணுனா தெரியுமா? மைக் கேல் ஜோன் என்கிற பாய் பிரண்டோட உல்லாசமா இருந்திருக்கா. நாலு தடவை அபார்ஷன். அவன் பாட்டுக்கு ஒருநா, நாம மேரேஜ் பண்ணிக்கிடலாமான்னு கேட் டிட்டான். ராத்திரி புல்லா தண்ணிய போட் டுட்டு நேரா பாய் பிரண்ட் வீட்டுக்குப் போனாள். விட்டா பாரு ஒரு அறை! ஆளும் அவளுமன்னு பிரிஞ்சு போயிட்டா. ஒரு வாரமா இந்த விஷயத்தை பேப்பர்காரங்க போட்டி போட்டு வெளியிட்டாங்க. என்ன மூச்சையே காணோம்?"

நான் உண்மையில் மிரண்டுதான் போயிட்டேன். நான் மறுத்துச் சொன்னால் பெமினிஸ எதிரி என்பாள். இல்லையென் றால் மேஜிக் அது இது என்று மென்னியைப் பிடிப்பாள். தலையைச் சரி, தவறு என்றதற்கு இடைப்பட்ட நிலையில் தலையாட்டித் தப்பினேன்.

**ஊ**ருக்குள் வரும்போது வெயில் தாழ்ந்து விட்டது. நிவேதா, "பிரேமாவுக்கு உண்மையில் பேய் பிடிச்சிருக்குமா? எதுக் குப் போட்டு இப்பிடி அடிக்கிறாங்க? காட்டு மிராண்டிகள்!" என்று ஞாபகம் வரும்போ தெல்லாம் திட்டினாள். விடநாச்சேரி சந்து வழியாக வந்து, 'பிரேமா எப்படி இருக் கிறாள்? பார்த்து விட்டு செல்வோம்' என்று திரும்பினோம்.

கோயில் கிணறு தாண்டியதும் பேர திர்ச்சி எனக்கல்ல; நிவேதாவுக்கு. பிரேமா வெளித் திண்ணையில் நின்று சீவுளியால் கூந்தலைச் சீவி சிக்கெடுத்துக் கொண்டிருந் தாள். குளித்து, புது தாவணி போட்டு நின் றிருந்த பிரேமா, புன்னகைத்தாள். விக்கித்துப் போய் நின்ற நிவேதாவைத் தாண்டி, "நீ பெரிய கள்ளிதாண்டி" என்றேன்.

"போங்க மாமா" சிணுங்கிக் கொண்டு, "அம்மா எட்டடி பாஞ்சா, நா பதினாறடி பாய மாட்டேனா? இருந்தாலும் உங்களுக் குத்தான் நான் நன்றி சொல்லணும் மாமா"

மினுமினு புன்னகை விட்டாள்.

என் முதுகைத் தட்டி நிவேதா, "போர்ஹே ஒரு எடத்தில..." என்றதும் என் மண்டை வெடித்து விடும் போல் இருந்தது. குப்பென்று பூத்து நின்ற வேம்பின் வாசம் அண்ணாந்து பார்க்க அழைத்தது. என் காதில், நான் பார்த்திராத அமெரிக்க நாட்டு குத்துச் செடியைப் பற்றி நிவேதா சொல்லத் தொடங்கினாள். ●

## மறக்கமுடியாத பரிசு

# வித்தியாசமான முதலீடு

புதுடில்லி.
14-2-98

அன்புள்ள அம்மா, நலம்.

எல்லாருடைய நலத்திற்கு எழுதவும். ஹனிமூன் முடிந்து இப்போதுதான் வீடு திரும்பினோம். நேபாள், நைனிட்டால் போன்ற இடங்களைச் சுற்றிப் பார்த்து மகிழ்ந்தோம். இங்கு வீடு திரும்பியதும் அந்த சந்தோஷம் இரட்டிப்பாகி இருக்கிறது. 'கல்கி'யும், 'அமுதசுரபி'யும் வந்து கொண்டிருக்கின்றன.

நீங்கள் என் பெயரில் ரூ.10,000/- **'ஸ்ரீராம் ட்ரஸ்ட்'** டில் டெபாசிட் செய்திருப்பதாக அப்பா சொன்னார். முதலீட்டு ரசீதும் அனுப்பி உள்ளார்கள். நிறையவே செலவு செய்து என் கல்யாணத்தை நடத்தி வைத்தீர்கள். இப்போது ரூ.10,000/- என்பெயரில் முதலீடு வேறு. தொடர்ந்து 5 வருடங்களுக்கு வாராவாரம் **'கல்கி'** யும், மாதந்தோறும் **'அமுதசுரபி'** யும் 5 ஆண்டுகளுக்கு **தீபாவளி மலர்**களும், வீட்டுக்கே வந்து விடும் என்று அறிந்ததும் ஏக சந்தோஷமாக இருக்கிறது. இரண்டுமே பொன்விழா கண்ட நல்ல குடும்பப் பத்திரிகைகள் ஆச்சே!

மாப்பிள்ளை உங்கள் 'ஐடியா'வைப் பாராட்டினார். அதிலும் முதலீடு செய்த ரூ.10,000/- ஐந்து வருடங்கள் கழித்து ரூ.20,000/- ஆக திரும்பக் கிடைக்கும் என அறிந்தபோது ஏக மகிழ்ச்சி. உங்கள் பேரனை L.K.Gயில் சேர்க்க உபயோகப்படுமாம். இந்தத் திட்டத்தைப் பற்றி என் தோழிகளிடமும் சொல்லி வையுங்கள். எல்லாருக்கும் பயன்தரக்கூடிய இந்த **'வித்தியாசமான முதலீட்டுத் திட்டத்தை'** அறிமுகப்படுத்திய கைராசியான ஸ்ரீராம் நிறுவனத்திற்கு எத்தனை முறை 'தாங்க்ஸ்' சொன்னாலும் தகும். மேலும் கணக்கிட்டுப் பார்த்ததில் எங்களுக்கு ஆண்டுக்கு 27% பலன் கிடைக்கிறது. இதுதான் மறக்க முடியாத பரிசு!

அன்புடன்,




ரூ.10,000/- (ரூ.பத்தாயிரம்) ஸ்ரீராம் டிரஸ்ட் பெயருக்கு செக்/டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :
ஸ்ரீராம் டிரஸ்ட், A-7, 2வது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை - 600 102.
போன் : 6286869 / 6287879

- பெயர் : திரு / திருமதி / செல்வி : ____________________
  முகவரி : ____________________
  ____________________ Pin ____________
- கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர் : ____________________
- வாரிசுதாரர் (Nominee) : ____________________
- கல்கி மற்றும் அமுதசுரபி இதழ்கள் அனுப்ப வேண்டிய முகவரி : ____________________
  ____________________

இத்துடன் ரூ.10,000/- (பத்தாயிரம்) காசோலை / டிடி எண் : ____________ / தேதி : ____________
வங்கியின் பெயர் ____________________ இணைத்துள்ளேன். 5 ஆண்டுகளுக்குப் பிறகு **ரூ.20,000** (இருபதாயிரம்) ஆகத் திரும்ப பெற்றுக் கொள்ளச் சம்மதிக்கிறேன்.

இடம்      தேதி      முதலீட்டாளர் கையொப்பம்

பரபரப்பான கிளைமாக்ஸை நம்பிப் படமெடுத்துக் கொண்டிருக்கும் காலகட்டம் இது! லிவிங்ஸ்டன் - கௌசல்யா நடிக்கும் 'சொல்லாமலே' படத்திலும் அதிர்ச்சிகரமான கிளைமாக்ஸை அமைத்திருக்கிறார்கள்.

"இதுவரை திரையுலகமே கண்டிராத கிளைமாக்ஸ்" என்ற இயக்குனரிடம், "கொஞ்சம் விவரமாகச் சொல்ல முடியுமா?" என்றதும், "காதலுக்காகக் கதாநாயகன் தன்னையே தண்டனைக்குள்ளாக்கிக் கொள்கிறான். அவ்வளவுதான். இதற்கு மேல் விலாவாரியாகச் சொல்ல முடியாது" என்கிற இயக்குனர் சசிக்கு இது முதல் படம்.

வஸந்த், கதிர் இருவரிடமும் பணிபுரிந்த அனுபவமும் உண்டு இவருக்கு. பெரிய ஹீரோ ஒருவருக்காக 'சொல்லாமலே' கதையைத் தயார் பண்ணி பல மாதங்கள் காத்திருந்த ஆர்.பி. சௌத்ரி, திடீரென்று லிவிங்ஸ்டனுக்கு அந்த வாய்ப்பை அளித்து, லிவிங்ஸ்டனை சந்தோஷப்படுத்தி இருக்கிறார். வரிசையாய்ப் புதியவர்களை அறிமுகப்படுத்தும் சௌத்ரி, 'சொல்லாமலே' படத்தின் மூலம் அறிமுகப்படுத்துவது பாபி என்கிற புதிய இசையமைப்பாளரை!

ஏ.ஆர். ரஹ்மானின் குடும்ப நண்பர் 'சேட்'. சேட் (பெயரே அதுதான்!) தன் சினிமா ஆசையை ரஹ்மானிடம் தெரிவிக்க, ரஹ்மானின் ஒத்துழைப்பில் அவர் இப்போது தயாரித்துக் கொண்டிருக்கும் படம் 'என் சுவாசக் காற்றே'. அர்விந்த்சாமி - இஷா கோபிகர் என்கிற மும்பை புதுமுகம் நடிக்கும் இப்படத்தை இயக்குபவர், 'ஆனஸ்ட்ராஜ்', 'மிஸ்டர் ரோமியோ' படங்களை இயக்கிய கேஎஸ்.ரவி. தன் குடும்ப நண்பர் தயாரிக்கும் படமென்பதால் பாடல்களை பிச்சு உதறியிருக்கிறாராம் ரஹ்மான். இப்படத்தின் ஆடியோ உரிமை மட்டும் ஒரு கோடியே முப்பது லட்சம் ரூபாய்க்கு விற்பனையாகியிருக்கிறது!

"அர்விந்த்சாமியோடு ஒரு புதுமுகமா? மனீஷா கொய்ராலாவை முயற்சி பண்ணுவதாகச் செய்தி வந்ததே?" - தயாரிப்பாளர் சேட்டிடம் கேட்டோம்.

"அர்விந்த்சாமி, ரகுவரன், பிரகாஷ்ராஜ் - மூவரிடம் கால்ஷீட் வாங்கி, படப்பிடிப்பு நடத்துவதே கஷ்டமாக இருக்கிறது. இதில் மனீஷா கொய்ராலாவும் சேர்ந்தால் படத்தை எப்போ

# மீனாவுக்குக் கண்டனக் கணைகள்!



• 'அரிச்சந்திரா' - மீனா, கார்த்திக்.

• இஷா கோபிகர்

முடிப்பது? அதனால் கூப்பிட்ட குரலுக்கு வந்து நடிக்கக் கூடிய இஷா கோபிகரை கதாநாயகியாக்கியிருக்கிறோம்" என்றார். முதல் படமல்லவா? கூப்பிட்டதும் வரத்தானே செய்வார்?

கொசுறு : இப்படத்துக்காக ஒட்ட வெட்டிய கிராப்பும், காதில் ஒரு சின்ன வளையமும் போட்டுக் கொண்டிருக்கிறார் அர்விந்த்சாமி.

**மீ**னாவுக்கு ஏகப்பட்ட கண்டனக் கணைகள். காரணம், 'நாம் இருவர் நமக்கு இருவர்' படத்தில் ரொம்ப அதிகமாகவே தன்னை 'எக்ஸ்போஸ்' பண்ணிக் கொண்டது! இதனால் இப்போது நடித்துக் கொண்டிருக்கும் 'அரிச்சந்திரா'வில் படு அடக்கமாக வருகிறார். 'அரிச்சந்திரா'வில் கவர்ச்சிக்கென்று ப்ரியாராமனை இரண்டாம் கதாநாயகியாக்கியிருக்கிறார்கள். பல வருடங்களுக்குப் பின் 'அரிச்சந்திரா' படம் மூலம் தயாரிப்பில் இறங்கியிருக்கிறார் ஆர்.எம். வீரப்பனின் மருமகன் சத்யஜோதி தியாகராஜன்.

**ம**லேசியா தொழிலதிபர் மகாரதன் சென்னை வந்தார். மகாகுமார் என்கிற இளைஞரை எதேச்சையாக சந்திக்க நேர்ந்தது. இசையார்வம் கொண்ட மகாகுமார் சில ட்யூன்களை மகாரதனுக்குப் போட்டுக் காட்டினார். ட்யூன்கள் பிடித்துப் போய்விட, பாடல்கள் ஒலிப்பதிவாயின. அந்தப் பாடல்களுக்காகவே படத் தயாரிப்பில் இறங்கியிருக்கிறார் மகாரதன்!

சவப்பெட்டி செய்யும் தொழிலாளியாக சிவக்குமார் – அவரது வளர்ப்பு மகனாக வினீத் நடிக்க, 'மறவாதே கண்மணியே' என்று படத்திற்குப் பெயர் சூட்டியிருக்கிறார்கள். வினீத்திற்கும் தமிழ் சினிமாவிற்கும் ஏழாம் பொருத்தம். அப்படியிருந்தும் இன்னொரு பரிசோதனையா என்று புருவம் உயர்த்துகிறது கோடம்பாக்க வட்டாரம்.

**'கு**ரு பார்வை' – பாரதிராஜாவின் மைத்துனர் மனோஜ்குமார் இயக்கும் படம். பாரதிராஜாவே தயாரிப்பதாய் இருந்த படமும் கூட! பெப்ஸி – படைப்பாளி பிரச்னையால் படத்தின் பாதியிலேயே தயாரிப்பிலிருந்து கழண்டு கொண்டார் பாரதிராஜா. அதற்குப் பின் படம் அந்தா இந்தா என்று இழுபறியிலேயே போய்க் கொண்டிருக்கிறது. 'குரு பார்வை'க்கும் பாரதிராஜாவிற்கும் சம்பந்தம் இல்லை என்று தெரிந்ததும் படத்தில் நடித்த நடிகர்கள் கால்ஷீட்டை சொதப்ப, டைரக்டர் மனோஜ்குமார் நொந்து போனார். ஹீரோவாய் நடிக்கும் பிரகாஷ்ராஜ் ஏகப்பட்ட படங்களில் ஒப்பந்தமாகி, 'குருபார்வை'யைக் கண்டுகொள்வதேயில்லை. ஜோடியாய் நடிக்கும் குஷ்பு, இதுதான் சாக்கென்று, "பிரகாஷ்ராஜிடம் டேட் வாங்குங்கள். நானும் டேட் தருகிறேன்" என்று டபாய்க்க, பாரதிராஜா பஞ்சாயத்து பண்ணிக் கொண்டிருப்பதாகத் தகவல்.

— மஹேந்த்

• 'மறவாதே கண்மணியே'





# சொட்டு ரத்தம் சொல்லும் தீர்ப்பு!

'எதுக்கும் இந்த டெஸ்டை செய்துக்கிட்டு வந்திடுங்க!'' என்று டாக்டர் கூறுகிறார் என்றால், அது பெரும்பாலும் ரத்தப் பரிசோதனையாகத்தான் இருக்கும். வேறு ஏதாவது பரிசோதனை என்றால்கூட, கூடவே ப்ளட் டெஸ்டுக்கும் எழுதித் தருவதும் சகஜம்தான்.

அதென்ன, எதற்கெடுத்தாலும் ஒரு ரத்தப் பரிசோதனை?

பல நோய்களின் காரணம் ரத்தத்தில் உள்ள குறைபாடாகவே இருக்க வாய்ப்பு உண்டு. தவிர வேறு சில நோய்களின் அறிகுறிகளை ரத்தத்தை ஆராய்ந்து கண்டு பிடித்து விடலாம். அனீமியா, லூகேமியா போன்றவை மட்டுமல்லாது, வேறு பல பயமுறுத்தல்களையும் ரத்தப் பரிசோதனையின் மூலம்தான் உறுதி செய்து கொள்ள முடியும்.

ரத்தப் பரிசோதனைக்குப் போனால் சில சமயம் சுட்டு விரலில் ஒரு 'சுருக்' மூலம் ரத்தம் எடுத்துக் கொள்வார்கள்... கையில் ரத்த நாளத்தை (Vein) தேடிக் கண்டுபிடித்து அதில் ஊசியைச் செலுத்தி, ரத்தத்தைச் சேகரிப்பதும் உண்டு. எதற்காக இரண்டு வகைகளில் ரத்தம் எடுக்கிறார்கள்?

"அதெல்லாம் லேப் அஸிஸ் டென்டின் இஷ்டம்'' என்கிற மாதிரியான விஷயம் இல்லை இது!

ரத்த நாளத்தில் ஊசியைக் குத்தி ரத்தமெடுப்பது என்பது பொதுவாக விரும்பத்தக்க விஷயமில்லை. என்னதான் ஸ்டெரிலைஸ் செய்யப்பட்டது என்றாலும் உடலைப் பொறுத்தவரை ஊசி ஒரு வேற்றுப் பொருள். எந்த வேற்றுப் பொருளையுமே உடலுக்குள் செல்ல விடாமல் இருப்பதுதான் புத்திசாலித்தனம். தவிர, காரியம் முடிந்ததும் ஊசியை வெளியே எடுத்த



''அடுத்த நாடாளுமன்றத் தேர்தல்ல வோட்டுப் போட முடியுமான்னு சந்தேகமா இருக்கு...''

''ஏன்?''

''இந்தத் தடவை வோட்டுப் போட்ட மை அழியறதுக்குள்ளே, இன்னொரு தேர்தல் வந்தா என்ன பண்ணுறதாம்...!''

— எஸ்.எஸ். பூங்கதிர்

பிறகு கூட ரத்தம் சில நொடிகளுக்கு அங்கே பீறிட்டுக் கொண்டு வரத்தான் செய்யும்.

ஆனால் என்ன செய்ய? ஒருவருக்குப் பலவித ரத்தப் பரிசோதனைகள் செய்ய வேண்டும் என்றாலோ, சிறுநீரகம், கல்லீரல் போன்ற பகுதிகளில் குறைபாடு உண்டா என்பதை அறிந்து கொள்ளவோ கொஞ்சம் அதிக அளவில் - சுமார் ஐந்து கியூபிக் சென்டிமீட்டர் வரை - ரத்தம் பரிசோதனைக்குத் தேவைப்படும். விரல்களில் இருப்பவை எல்லாம் மிக மெல்லிய ரத்த நாளங்கள் (capillaries) ஒருமுறை சுருக்கென்று குத்தினால் துளியூண்டு ரத்தம்தான் வெளியாகும். 'வேண்டிய மட்டும் ரத்தம் வெளியாகும் வரை விடுவதில்லை' என்று குத்திக் கொண்டே இருந்தால், விரல் அதோ கதிதான்! அதனால்தான் தடிமனாக இருக்கும் ரத்தக் குழாயிலிருந்து ரத்தத்தை சேகரித்துக் கொள்கிறார்கள்.

மற்றபடி மலேரியாவில் பாதிக்கப்பட்டிருக்கிறாரா என்பதை அறிந்து கொள்ள, விரலிலிருந்து கொஞ்சம் ரத்தத்தை எடுத்துக் கொண்டால் போதும். சிவப்பணுக்கள் எண்ணிக்கையைக் கணக்கிடவும் இதேமுறை பின்பற்றப்படும்.

இன்னொரு விஷயம்: மணிக்கட்டுக்கும் விரல்களின் மேல் பகுதிக்கும் நடுவே பார்த்தால் சில ரத்த நாளங்கள் புடைத்திருப்பதைக் காணலாம். அதிலிருந்து ரத்தத்தை எடுக்காமல் எதற்கு முழங்கைக்கு மேல் பகுதியில் உள்ள ரத்த நாளங்களில் ஒன்றை டாக்டர் தேர்ந்தெடுக்க வேண்டும்?

மணிக்கட்டுக்கு மேலே உள்ள பகுதியில் தென்படும் ரத்த நாளங்கள் ஓரளவு மெல்லியவை. அது மட்டுமல்ல; கையால் தொட்டாலே அவை நழுவி நகருவதைக் காணலாம். ஊசியை அங்கே குத்தி, அந்த ரத்த நாளம் அங்கும் இங்குமாக நகர்ந்து விளையாட்டுக் காட்டினால் பெரும் அவஸ்தை. தவிர மெல்லிய ரத்த நாளம் என்பதால் அதன் ஒருபுறத்தில் குத்தப்பட்ட ஊசி மறுபுறமாக வெளியே வந்து தொலைந்தால் (double puncture) அதுவும் ஆபத்து. அதனால்தான், கொழுத்த, அதேசமயம் கீழே பல தசைகள் சப்போர்ட்டாக இருப்பதால் அதிகம் நகர்ந்து ஆட்டம் காண்பிக்காத ரத்தக் குழாயை டாக்டர் தேர்ந்தெடுக்கிறார்.

இப்போதெல்லாம் நவீன கருவிகள் வந்து விட்டன; வருங்காலத்தில் இவை மேலும் நவீனமாகும்போது பலவித பரிசோதனைகளுக்குக் கூட சில சொட்டு ரத்தங்களே போதும் என்ற நிலை ஏற்படலாம். அப்போது விரல் நுனியிலிருந்து ரத்தம் எடுப்பது மட்டுமே போதுமானது என்ற நிலை உண்டாகும் வாய்ப்பு உண்டு.

"Vein என்பது அசுத்த ரத்தத்தை எடுத்துச் செல்லும் என்று கேள்விப் பட்டிருக்கிறோமே, அதிலிருந்து சேகரித்த ரத்தத்தையா பரிசோதனைக்கு உட்படுத்துவது?" என்று சிலருக்குத் தோன்றலாம். அசுத்த ரத்தமென்றால் ஆக்ஸிஜன் கொஞ்சம் குறைவாக இருக்கும்; அவ்வளவுதான். மற்றபடி ரத்தத்தின் பிற தன்மைகள் மாறி விடாது.

— ஜி. எஸ். எஸ்

**"நம்ம தலைவரு உத்திர பிரதேசத்துக்குப் போயிட்டு வந்திருக்கலாம்... அதுக்காக இப்படியெல்லாம் தேர்தல் வாக்குறுதி கொடுக்கக் கூடாது!"**

**"எப்படி கொடுத்தாரு?"**

**"எனக்கு வோட்டுப் போடும் அனைவருக்கும் மந்திரி பதவி தருகிறேன்னு சொல்லிட்டாரே!"**

**— தே. கண்ணன்**



# "எங்கள் வோட்டு சைக்கிளுக்கே!"

"அடுத்த நூற்றாண்டை, விஞ்ஞானிகள் 'கறுப்பு நூற்றாண்டு' என்றுதான் குறிப்பிடுகிறார்கள். அந்த அளவுக்கு வாயு மண்டலம் அசுத்தமடையப் போகிறது. இந்த சுற்றுச் சூழல் பாதிப்பினால் மனித இனத்துக்கு மட்டுமில்லை; விலங்கினங்களுக்கும், தாவரங்களுக்கும் கூட ஒட்டுமொத்த பாதிப்பு" என்று கவலையுடன் கூறுகிறார் எக்ஸ்நோராவின் நிறுவனத் தலைவரான எம்.பி. நிர்மல்.

"இந்த சுற்றுச் சூழல் பாதிப்புக்கு அதிகபட்சமாய் (சுமார் அறுபத்தஞ்சு சதவீதம்) பங்களிப்பது ஆட்டோமொபைல் வகையறாதான். அடுத்தபடியாய்த்தான் (சுமார் முப்பது சதவீதம்) தொழிற்சாலைகள் வருகின்றன. இன்னபிற வகைகளில் மிச்சம் பாதிப்பு."

அது சரி! இத்தனை மோசமான சூழ்நிலைக்கு வாகனங்கள் காரணமாவது எப்படி? இந்தக் கேள்விக்கு பாயிண்ட்களாக அடுக்குகிறார்:

1. நம் ஊர் சாலைகளுக்கு ஏற்ப, நம் இரண்டு சக்கர, மூன்று சக்கர, நான்கு சக்கர வாகனங்கள் மற்றும் கனரக வாகனங்களின் இஞ்சின்கள் வடிவமைக்கப்படுவதில்லை.

2. நம் ஊரில் விற்கப்படும் பெட்ரோல் மற்றும் டீசலில் கலப்படம் கணிசமாய் இருக்கிறது.

3. நம் அகராதிகளிலிருந்தே அகற்றப்பட்டுவிட்ட வார்த்தை 'சாலை பராமரிப்பு' என்றால் மிகை இல்லை. அத்தனை மோசமான சாலைகள்.

4. டிராஃபிக் மேனேஜ்மெண்ட் என்றால் இங்கே என்னவென்றே தெரியாது. ஒரு டிராஃபிக் கான்ஸ்டபிளின் வேலை, சிக்னலில் நிற்பதும், சாலை விபத்து ஏதாவது நிகழ்ந்தால்,



• எம்.பி. நிர்மல்

சாக்பீஸால், விபத்துக்குள்ளான வாகனங்களின் பொசிஷனை மார்க் பண்ணுவதும்தான் என்று நமது அரசாங்கம் நினைத்துக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு நாளும், போக்குவரத்து நெரிசல்களில் சிக்கிக் கொண்டு, வண்டிகள் திணறுகிற போது வீணாகும் நேரமும், எரிசக்தியும் பற்றி யார் இங்கே கவலைப்படுகிறார்கள்?

இந்தச் சூழ்நிலையில்தான், பல வெளி நாட்டுக் கார் தயாரிப்புக் கம்பெனிகளுக்கும் இங்கே சிவப்புக் கம்பள வரவேற்பு. புதிது புதிதான இரண்டு சக்கர வாகனங்கள் அறிமுகம். இன்னும் ஒரு சில ஆண்டுகளில், இப்போது இருப்பதைப் போல நான்கு மடங்கு வாகனங்கள் நம் சாலைகளில் ஓடுமாம்... ஸாரி, ஊர்ந்து போகுமாம். ஆனால் அந்த அளவுக்குப் பெருகப்போகும் வாகன நெரிசலைச் சமாளிக்க நம்மிடம் திட்டங்கள் இல்லை என்பது வேதனையளிக்கும் உண்மை!

இதற்கு எக்ஸ்நோரா அளிக்கும் ஒரு தீர்வுதான் அதிக அளவில் சைக்கிள்களைப் பயன்படுத்த வேண்டும் என்கிற பிரசாரம்!

சைக்கிள் மனித சக்தியால் இயங்குகிறது என்பதால், பெட்ரோல் செலவு மிச்சம். சைக்கிள் ஓட்டுவது, உடலுக்கு மிகச் சிறந்த உடற் பயிற்சி. இவையெல்லாம் தனி நபர் லாபங்கள். தேசத்துக்கு என்ன பயன் என்று பார்த்தால், பெட்ரோல் இறக்குமதி மூலம் நாம் செலவழிக்கும் அந்நியச் செலாவணியை ஓரளவு சேமிக் கலாம்.

சைக்கிளால் சுற்றுச் சூழல் பாதிப்பு இல்லை என்பது உச்சபட்ச சந்தோஷ சமாசாரம்.

"ஆனால், சைக்கிளைப் பயன்படுத்தச் சொல்லி, எத்தனைதான் பிரசாரம் செய்தாலும், மத்திய தரக் குடும்பத் தைச் சேர்ந்தவர்களிடம் கூட அதனை ஏற்றுக் கொள்ள ஒருவித தயக்கம் இருக்கிறது! அந்த மனத்தளவிலான தடையை உடைக்க உருவானதுதான்

● ●

**"எங்களுடைய முதல் இலக்கு, பள்ளிக் கூடங்கள்தான். அங்குதான் சைக்கிள் கிளப்கள் அமைப்பதைத் தீவிரமாக்கப் போகிறோம்."**

● ●

'சைக்கிளிஸ்ட் கிளப்'. சைக்கிள் ஓட்டுபவர்களையெல்லாம் ஒருங்கிணைத்து ஆங்காங்கே சங்கங்களை உருவாக்குவது.

"சைக்கிள் ஓட்டுபவர்கள் சங்க உறுப்பினர் என்ற முறையில் சைக்கிளில் அதற்குரிய பாட்ஜ் பனிச்சிட, சைக்கிளில் போகிறபோது, தாழ்வு மனப்பான்மை நீங்கி, ஒரு பெருமை வந்து விடுகிறது.

"தவிர, அவ்வப்போது வேகமாய் ஓட்டும் சைக்கிள் பந்தயம், மெதுவாய் ஓட்டும் பந்தயம், அதிகபட்ச எடையுடன் ஓட்டும் போட்டி என்று விதம் விதமாய் போட்டிகள் நடத்தி, பரிசுகள் வழங்கினால், சைக்கிளைப் பயன்படுத்தும் மனோபாவம் வளரும்.

"எங்களுடைய முதல் இலக்கு, பள்ளிக் கூடங்கள்தான். அங்குதான் சைக்கிள் கிளப்கள் அமைப்பதைத் தீவிரமாக்கப் போகிறோம். முதல் கட்டமாய் என்பது கிளப்கள் ஆரம்பிக்க, பள்ளிகளைத் தயார்ப்படுத்தி விட்டோம். அடுத்த இலக்கு கல்லூரிகள்" என்கிறார் நிர்மல்.

இதை உணர்ந்துதான் 'எங்கள் வோட்டு சைக்கிளுக்கே!' என்கிறார்கள் படத்தில் இருக்கும் ஸ்வேதாவும், சதீஷும்.

**— கௌதம்**

வண்ணப்படம் : **யோகா**



# ரெடிமணி விவகாரம்

நீங்கள் கேட்டவை பகுதியில் சில வாரங்களுக்கு முன்பு ரெடிமணி நிறுவனத்தின் 'தள்ளாட்டம்' குறித்து ஒரு கேள்வி இடம் பெற்றது. இதற்கு ரெடிமணி தரப்பில் மறுப்பு வந்துள்ளது என்றும், ஒரு சில நிதி நிறுவனங்கள் படுத்துவிட்டதால் பொதுமக்களிடையே பதற்றம் பரவி, எல்லோருமே தங்கள் பணத்தை ஒரே சமயத்தில் திரும்பப் பெற முயற்சி செய்கிறார்கள் என்றும் இந்த panic reaction காரணமாக பல நிதி நிறுவனங்கள் பாதிக்கப்பட்டுள்ளன என்றும் பதில் கூறியிருந்தோம்.

இதைப் படித்துவிட்டு சென்னை சாலிகிராமத்திலிருந்து ஆர். தசரதன் என்ற வாசகர், தொலைபேசியில் பொரிந்து தள்ளிவிட்டார்! ரெடிமணி நிறுவனத்தில் தாம் போட்டிருந்த வைப்புத் தொகை தமக்கு மிகவும் அவசரமாக, இருதய அறுவைச் சிகிச்சைக்காகத் தேவைப்பட்டபோது, திரும்பக் கொடுக்கப்படவில்லை என்பது இவருடைய குற்றச்சாட்டு. தம்முடைய மருத்துவ அறிக்கைகளை ஆதாரமாகக் காட்டியும் பணம் கிடைக்கவில்லை என்றும் தெரிவித்தார். அதன் பிறகு நண்பர்கள், உறவினர்கள் மூலமாக ஒன்றரை லட்ச ரூபாய் செலவைச் சந்திக்க முடிந்தது என்றாலும், அவர்களுக்கு அந்தத் தொகைகளைத் திருப்பித் தர வேண்டுமாதலால், அந்த அலுவலகத்திலிருந்து தம் பணத்தைப் பெற மீண்டும் மீண்டும் முயற்சிகள் மேற்கொண்டு வருவதாகவும்; ஆனால் ஒவ்வொரு முயற்சியிலும் தாம் அந்த அலுவலகத்தாரால் புறக்கணிக்கப் படுவதாகவும், உதாசீனப்படுத்தப்படுவதாகவும் வருத்தம் தெரிவித்தார். ரெடிமணியில் தாங்கள் போட்ட முதலீடுகளைத் திரும்பப் பெற இயலவில்லை என்று வேறு சில வாசகர்களும் வருத்தத்துடன் எழுதியிருந்தார்கள்.

இந்த விவரங்களை ரெடிமணி மோகனிடம் தெரிவித்தோம்.

"இந்தியாவின் இரண்டாவது உயர் நிலையில் இயங்கி வந்த சி.ஆர்.பி. காபிடல் நிதி நிறுவனம் வீழ்ச்சியடைந்தது. உடனே பல நிதி நிறுவனங்களிலும் முதலீடு செய்திருந்த பல முதலீட்டாளர்கள் தங்கள் வைப்புத் தொகைகளை முதிர்வடையும் காலத்துக்கு முன்பே திரும்பப் பெற ஆரம்பித்தார்கள். எங்களிடமிருந்தும் அப்படிப் பெறப்பட்டது. அவர்களுடைய தேவைக்கும் அவசியத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்து, தொகைகளை, முதிர்வடையும் காலத்துக்கு முன்னாலேயே கொடுத்தோம். இந்த வகையில் இதுவரை நாங்கள் கொடுத்திருக்கும் தொகை - 22 கோடி ரூபாய்..." என்றார் மோகன்.

"பல முதலீட்டாளர்கள் முதிர்வடைந்த தொகையைப் பெற்றுக் கொண்டு அதனை எங்களிடம் மறுமுதலீடு செய்யாததும் நிதி நிலையை மோசமாக்கியது. இதனால் சில முதலீட்டாளர்களுக்கு உரிய காலத்தில் கொடுக்க முடியாத முதிர்வடைந்த தொகையை, காலம் நீட்டித்து, ஆனால் இந்த நீட்டிப்புக் காலத்திற்கான வட்டியும் சேர்த்து நாங்கள் கொடுத்து வருகிறோம்.

"எங்களுடைய நிதி நிலை சீர்குலைவுக்கு இன்னொரு காரணமும் உண்டு. இந்தியன் வங்கியில் வைப்புத் தொகையாக நாங்கள் போட்டு வைத்துள்ள இரண்டரைக் கோடி ரூபாய் முடங்கிக் கிடக்கிறது. அதைத் திருப்பிக் கேட்கும்போது, எங்களுக்



• மோகன்

**ரெடிமணி அலுவலகத்தில் தென்பட்ட காட்சிகள் பரிதாபமாய் இருந்தன. சுமார் இருபது பேர் குழுமியிருக்க, அந்த முகங்களின் கவலை, அச்சம், ஏமாற்றம் எல்லாம் புண்பட்ட மனங்களின் பிரதிபலிப்பாகவே தோன்றின.**

# பொது மக்கள் பதற்றம் மட்டுமே காரணமா?...

குச் சாதகமான பதில் வரவில்லை. இதைப் பெற தேசிய நுகர்வோர் நீதி மன்றம் மூலமாக வழக்கும் தொடுத்திருக்கிறோம். இந்தியன் வங்கியின் நிர்வாக நடைமுறைகளால், நாங்களும், பாதிக்கப்பட்ட ஒரு முதலீட்டாளர்தான்...

"ஆனால், இன்றைக்கு எங்களிடம் தினமும் பத்து, இருபது பேர் வந்து தங்கள் வைப்பு நிதியைக் கோருகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் தத்தமது குழப்ப, கோப மனோ நிலைப்படி உணர்ச்சி வசப்பட்டுப் பேசுகிறார்கள். ஓரிருவர், தம் பணம் கிடைக்காமல் போய்விடுமோ என்ற ஆதங்கத்தில் எல்லை மீறுகிறார்கள். மிகவும் பொறுமையுடன் பதில் சொல்லிக் கொண்டிருக்கும் எங்கள் ஊழியர்கள், எப்போதாவது யாரிடமாவது சற்றே பொறுமை இழந்து பேசியிருக்கலாம்.

"ஆனால், எங்களிடம் முறையிடும் பலர் எங்களது உண்மை நிலையைப் புரிந்து கொண்டு, இந்தியன் வங்கியிடமிருந்து எங்கள் தொகையைத் திரும்பப் பெறும் முயற்சிக்கு ஆதரவு அளிக்கத்தான் செய்கிறார்கள். இந்த முயற்சியில் நாங்கள் வெற்றி பெறுவோம்; முதலீட்டாளர்களின் நம்பிக்கையை மீண்டும் பெறுவோம் என்பது உறுதி..." என்றார் மோகன்.

இந்தியன் வங்கியின் நம்பத் தகுந்த வட்டாரங்களில் விசாரித்தபோதோ, 'எந்த வைப்பு நிதியையும் தகுந்த காரணமில்லாமல் நிறுத்தி வைக்க வேண்டிய அவசியமே இல்லை' என்றார்கள். இந்தியன் வங்கி, ரெடிமணிக்கு எவ்வித அநீதியும் இழைக்கவில்லை என்பதே வங்கி தரப்பில் கூறப்படுகிற விளக்கம்.

இதற்கிடையே, சென்னை ராதா கிருஷ்ணன் சாலையில் உள்ள ரெடிமணி அலுவலகத்தில் தென்பட்ட காட்சிகள் பரிதாபமாய் இருந்தன. சுமார் இருபது பேர் குழுமியிருக்க, அந்த முகங்களின் கவலை, அச்சம், ஏமாற்றம் எல்லாம் புண்பட்ட மனங்களின் பிரதிபலிப்பாகவே தோன்றின.

அங்கிருந்த முதலீட்டாளர்களுள் சிலர், வைப்புநிதி கால முதிர்வுக்குப் பிறகுத் தமக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய தொகைக்காகக் காத்திருந்தனர். வேறு சிலர் தம்முடைய அத்தியாவசியப் பொருளாதார நெருக்கடி காரணமாக டெபாஸிட் முதிர்வடையும் முன்னரே தம் வைப்பு நிதியைத் திரும்பி வாங்கிச் செல்ல வந்தவர்கள். மூன்றாவது பிரிவினர், அந்நிறுவனம் பலவீனமாகி நொடித்துப் போய் விடும்; தம் வைப்பு நிதி மீண்டும் தமக்குக் கிடைக்காமலேயே போய்விடும் என்ற பயம் காரணமாக வந்திருந்தனர்.

ஆனால், எந்த முகாந்திரத்தை வைத்துக் கேட்டாலும் நிறுவனத்திலிருந்து அவர்கள் அனைவருக்குமே 'ஆறு மாதம் பொறுத்துக் கொள்ளுங்கள்; நிலைமை சீரடையும்; உங்கள் பணத்தை, காத்திருக்கும் காலத்திற்கும் சேர்த்து வட்டியுடன் கொடுத்து விடுகிறோம்' என்றேதான் பதில் வந்தது.

ஏமாற்றத்தின் உச்சியில் நின்று கோபமாக சில டெபாசிட்டர்கள் சப்தம் போட்டார்கள். நிறுவன அலுவலர்கள் பதில் சொல்லி, பதில் சொல்லி, களைத்துப் போனதோடு, ஓரிருவரிடம், சற்று முறைப்பாகவே, 'இப்போதைக்குத் தர முடியாது; அவ்வளவுதான்' என்றும் பதிலளித்தார்கள்.

**— நமது நிருபர்கள்**










# "இந்தியா ஜெயிக்கும்!"

**— பிட்ச் ரிப்போர்ட்**

**மா**ர்ச் 6லிருந்து 10 வரை இந்திய - ஆஸ்திரேலிய அணிகள் பங்கு பெறும் முதல் டெஸ்ட் மாட்ச் சென்னையில் நடக்கிறது.

கிரிக்கெட் சங்க நிர்வாகிகள் ஏற்பாடுகளில் மும்முரமாக இருக்க, ஆட்டத்தின் மிக முக்கியமான கட்டங்களைத் தீர்மானிக்கப் போகிற ஆடுகளம் (பிட்ச்) எப் படித் தயாராகிறது? யாருக்குச் சாதகமாக இருக்கப் போகிறது? என்று 'பிட்ச் பொறுப்பாளர்' பார்த்தசாரதியைச் சந்தித்துக் கேட்டோம்.

"1986-ல் ஆஸ்திரேலிய அணி இங்கே வந்தது. அந்த டெஸ்ட், மறக்க முடியாத, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த 'டை' டெஸ்டாக முடிந்து விட்டது! அதன் பிறகு பன்னிரண்டு வருடங்கள் கழித்து இப்போது மறுபடி ஆஸி அணி சென்னைக்கு வருகிறது" என்று நினைவுகளை மலர விட்டார் பார்த்தசாரதி.

'86 டெஸ்டில், ஐந்து நாட்களும் ஒரே ரன் மழைதான். பிட்ச், பேட்ஸ்மன்களுக்கு வெகு சாதகமாக இருந்தது. இப்போது?

"இம்முறை, முதல் மூன்று நாட்களுக்கு மட்டும் பிட்ச், பேட்ஸ்மன்களுக்குச் சாதகமாக இருக்கும்படி அமைக்கப்பட்டிருக்கிறது. அதாவது, முதலில் ஆடும் அணி, கணிசமாக ரன் குவிக்க முடியும். நாலாவது நாளிலிருந்து, ஆடுகளம் மெல்ல மெல்ல சுழற்பந்து வீச்சாளர்களுக்கு உதவும் விதமாக இளகிவிடும். வார்னேவின் வர்ண ஜாலங்களை அப்போது பார்க்கலாம்."

டாஸ் ஜெயித்து, முதலில் ஆட இறங்கும் அணிக்கே வெற்றி வாய்ப்பு என்று பார்த்தசாரதி கருதுகிறார்.

**ஆ**னால் தமிழக கிரிக்கெட் சங்க நிர்வாகியும் முன்னாள் ஆட்டக்காரருமான ஆர். சந்திரசேகரன், "இம்முறை இந்தியாவின் வெற்றி உறுதி. முதலில் ஆடினாலும் அடுத்து ஆடினாலும் இதில் மாற்றம் இருக்காது" என்று அடித்துச் சொல்கிறார்.

எப்படி?

"ஆஸ்திரேலிய அணியின் குறிப்பிடும்படியான ஒரே பலம் சுழற்பந்து வீச்சாளர் ஷேன் வார்னேதான். உலக ஆட்டக்காரர்கள் எல்லாருமே அவரது பந்து வீச்சுக்குத் திணறினாலும் நமது அஸாருதீனும் டெண்டுல்கரும் கங்குலியும் பாதிப்பு ஏதுமின்றி, வார்னேவை விளாசக் கூடியவர்கள் என்பது பலமுறை நிரூபிக்கப்பட்ட உண்மை. எனவே இந்த முதல் டெஸ்டிலேயே நம் வெற்றி உறுதி என்று தீர்மானமாகச் சொல்லுவேன்!" என்கிறார் சந்திரசேகரன். ⭘

— கிரிக்கெட் ஸ்பெஷல் பேட்டிகள்,
கட்டுரைகள் : சிம்மம்
படங்கள் : உமாமணி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 800/- (Air Mail)


சின்ன சின்ன கனவுகள்
சேலை கட்டும் கனவுகள்!
வண்ண வண்ண கனவுகள்
வாசனை கனவுகள்!
முத்து முத்து கனவுகள்
முந்தானைக் கனவுகள்!
பூப்பூவாய் கனவுகள்
புடவை கட்டும் கனவுகள்!
ஒரு பெண்ணின் கனவுகள்
நினைவாகுமிடம்
சாரதா'ஸ்!!
சாரதா'ஸின்
இம் வருடத்தின் புதிய
டிசைன்கள்
ஸ்ருதி
சாரதா'ஸ்
(முகூர்த்த பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)
827, அண்ணா சாலை,
தன்பில்டிங், சென்னை - 2.
போன் : 852 11 77
32, என்.எஸ்.பி. ரோடு,
திருச்சி - 2.
போன் : 702077
சாரதாஸ் திருச்சி - 2, சென்னை - 2.
தவிர வேறு எங்கும் கிளைகள் கிடையாது.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka